# ஒரு
# நல்ல தோழன்




ஓர் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா மூலம் நீங்கள் ஒரு நல்ல தோழனின் எல்லா நற்குணங்களையும் அனுபவிக்க முடியும். வலுவுள்ளதாலும், நம்பகமானதாலும் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிராவை நீங்கள் போகுமிடமெல்லாம் கொண்டு செல்லலாம். அதன் கொக்கியை அழுத்திய மாத்திரத்திலேயே பிக்னிக் காட்சிகளையும், உல்லாசப் பயணங்களையும், மகிழ்ச்சியளிக்கும் குடும்பக் காட்சிகளையும் அது பிரமாதமாகப் படம் பிடித்துவிடுகிறது.

ஜெர்மன் ஆக்பாவைப் புகைப்படத் தொழிலில் உலகப் புகழ்பெற்றதாகச் செய்த அதே தொழிலியல் திறனுடன் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா இப்போது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது. விலை ரூ. 32/- உள்ளூர் வரி தனி.




ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா இந்தியா லிமிடெட்**

பம்பாய் • நியூ டில்லி • கல்கத்தா • மதராஸ்

OAI-14A




# பொருளடக்கம்

சுபகிருது, பங்குனி 4உ ★ மார்ச், 17உ 1963



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 33

# இலங்கையின் நடுநிலைமை

இலங்கையிலுள்ள இந்தியர்கள் இந்தியப் பாதுகாப்பு நிதிக்காக நான்கு லட்ச ரூபாய் வசூல் செய்தனர். இத்தொகையை இலங்கை அரசாங்கம் இந்திய சர்க்காருக்கு அனுப்பக் கூடாது என்று நடுநிலைமைக் கொள்கையைக் காட்டித் தடுத்துவிட்டது. நான்கு லட்ச ரூபாய் ஒரு பெரிய தொகையல்ல. இந்திய அரசாங்கம் பெரிய நஷ்டம் ஒன்றும் அடைந்துவிடப் போவதில்லை. ஆனால் இந்தச் செய்கை இலங்கை அரசாங்கத்தின் வெளிநாட்டு உறவு சம்பந்தப்பட்ட நடவடிக்கையில் சமீப காலத்தில் எத்தகைய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

பண்டை நெடுங்காலமாக இந்தியாவுக்கும் இலங்கைக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது! இந்தியாவும் இலங்கையும் பூகோள ரீதியாகவும் சரித்திர ரீதியாகவும் முன்பு பல்லாண்டுகள் ஒரு நாடாகவே கருதப்பட்டு வந்திருக்கின்றன. இலங்கையின் பொருளாதார வளர்ச்சிக்கு இந்திய மக்கள் புரிந்துள்ள தொண்டுகள் கொஞ்ச நஞ்சமல்ல. இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையோடு ஒட்டினாற் போலிருந்தால்தான் தனக்குச் சாதகம் என்று இதுவரையில் இலங்கை கருதி வந்திருக்கிறது. அத்தகைய இலங்கை, இன்று தனக்கு ஒட்டினாற் போல் உள்ள இந்திய மக்களையும், இந்திய அரசாங்கத்தையும் அலட்சியப்படுத்தினாலும் பரவாயில்லை, சீன சர்க்காரின் உணர்ச்சிகளைப் புண்படுத்தும் வகையிலோ, அல்லது தவறாக எண்ணக்கூடிய வகையிலோ நடந்து கொள்ளக் கூடாது என்று தீர்மானித்திருக்கிறது என்றால் இது எத்தகைய பெரிய மாறுதல் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

சீன ஆக்கிரமிப்பு இந்திய மண்ணில் ஏற்பட்டபின், கொழும்புத் திட்டத்தைத் தூக்கிக்கொண்டு பீகிங்குக்கும், தில்லிக்கும் போய்த் திரும்பி வந்த இலங்கைப் பிரதமர் இந்தியாவைவிடச் சீனாவே தனது மதிப்புக்கு உரிய நாடு என்று தீர்மானித்திருப்பது இப்போது வெட்டவெளிச்சமாகத் தெரிகிறது. இந்தியாவுக்குச் சிறு உதவி செய்ய நேர்ந்தாலும் — அது இலங்கையிலுள்ள இந்திய ரத்தம் ஓடும் மக்களிடமிருந்து வந்த பணமாயினும்—சீனா தவறாக நினைக்க இடம் ஏற்படக் கூடாது என்பதில் அக்கறை கொண்டு விட்டது இலங்கை சர்க்கார் என்பதும் தெளிவாகிறது.

கொழும்புத் திட்டத்தைச் சீனா எப்பொழுது ஏற்க மறுத்ததோ, அப்போதே சீனாவின் அநீதியை இலங்கை உணர்ந்திருக்க வேண்டும். அதன் பின்பும் இந்தியாவுக்குப் பணம் போகாமல் தடுப்பதற்குக் கூறும் நடுநிலைமை உண்மையில் நடுநிலைமையாகுமா? சீனாவின் பலம் பெருகியும் இந்தியா பலமிழந்தும் நிற்பதனாலன்றோ இலங்கை அநீதி இழைத்த சீனாவின் பக்கம் சார்ந்து நிற்க வேண்டியிருக்கிறது?

மேற்கத்திய வல்லரசுகளின் நட்பைப் பகிரங்கமாக நாடிப் பெற்று, சீனாவுக்குச் சமமாக இந்தியாவும் தக்க ராணுவ பலம் பொருந்தியது என்ற உறுதி ஏற்பட்டிருந்தால் ஆசியாவிலுள்ள சிறிய நாடுகள் எல்லாம் இந்தியாவை மதித்திருக்கும். இலங்கை சுதந்திர ஆட்சி அடைந்ததற்கு இந்தியா காரணம் என்பதையும் இலங்கை மறந்துவிட முடியுமா?

இன்னும் காலம் ஒன்றும் தாழ்ந்து விடவில்லை. இலங்கை சர்க்காரின் செய்கையை எச்சரிக்கையாகக் கொண்டு நமது வெளிநாட்டுக் கொள்கையை உடனடியாகச் சீர்திருத்திக் கொண்டால் இழந்த கௌரவத்தை மீண்டும் பெற வாய்ப்பு ஏற்படும்.

# ‘தங்க’ப் பிடிவாதம்

கள்ளத்தனமாகத் தங்கம் நாட்டுக்குள் கொண்டு வரப்படுவதால் வருஷம் ஒன்றுக்கு அறுபது கோடி ரூபாய் அந்நியச் செலாவணி நஷ்டம்; இதைத் தடுக்க அரசாங்கத்தினுல் முடியவில்லை; சட்டத்தின் பலம், போலீஸ் படை, அதிகாரம், விரிவான சுங்க இலாகா அமைப்பு, பந்தோபஸ்து முறைகள் இவையெல்லாம் இருந்தும் இதைத் தடுக்க முடியவில்லை என்ருல் நிர்வாகம் திறமையற்றது என்றுதான் அர்த்தம். இதை ஒப்புக்கொண்டு தடுப்பைப் பலப்படுத்தி நிலைமையைச் சமாளிக்காமல், நல்ல தங்கமே நாட்டில் ஒருவரும் உபயோகிக்கக் கூடாது, அதற்குப் பதிலாக 14 காரட் மட்டத் தங்கம்தான் உபயோகிக்கலாம் என்று அவசரச் சட்டம் செய்யப்பட்டுள்ளது.

தங்கத்தின் விலை உயர்வைக் குறைக்க வேண்டும். மக்களுக்கு அதன்மீதுள்ள மோகத்தை அகற்ற வேண்டும்: அவசரச் சட்டத்துக்கு இப்படி ஒரு காரணம் சொல்லப்படுகிறது. விலை ஏன் உயர்ந்தது என்று திரு மொரார்ஜி தேசாய் யோசித்தாரோ என்னவோ? நாட்டில் எல்லாப் பொருள்களும் கடந்த பத்தாண்டுகளில் பத்து இருபது சத விகிதம் விலை உயர்ந்துதான் இருக்கின்றன. தங்கத்தின் விலை உயர்வும் இந்த விகிதத்தில்தான் இயற்கை விதியின்படி உயர்ந்திருக்கிறது. மற்றப் பொருள்களின் விலை உயர்வைப் பற்றிக் கவலைப்படாத சர்க்காரைத் தங்கத்தின் விலை உயர்வு மட்டுமே கவலையில் ஆழ்த்தியுள்ளது! ரூபாயின் மதிப்புக் குறைந்து வருவதால் தங்கத்தின் மதிப்பு உயருகிறது என்பதை மக்கள் நன்ருகவே உணர்ந்திருக்கின்றனர். சர்க்காரும், இது தெரிந்திருந்தாலும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். காரியத்துக்கும் காரணத்துக்கும் சம்பந்தமில்லாது சட்டம் மட்டும் இயற்றப்பட்டு விடும்!

இதனுல் பரம்பரைப் பொற்கொல்லர்களின் குடும்பங்கள் வேலை இழந்து பரிதவிக்கும் நிலை வந்துவிட்டது. அவர்களிடையே பட்டினிச் சாவும் பரிதாபச் சம்பவங்களும் கேட்கக் கேட்க மனம் பதறுகிறது.

அவர்களுடைய கஷ்டங்களுக்காக முதலைக்கண்ணீர் விடும் மாகாண மந்திரிகள் அவர்களுக்கு மாற்று வேலை கற்றுக் கொடுக்கப் போகிருர்களாம். தையல் மிஷினையும் அம்பர் சர்க்காவையும் சர்க்கார் அதிகாரிகளின் உத்தரவுகளையும் எதிர்பார்த்து அவர்கள் கியூ வரிசையில் மந்திரிகளின் மாளிகையில் தவம் கிடக்க வேண்டும்.

நிலைமையைச் சமாளிக்கச் சர்க்காருக்குத் தெரிந்த வழி ஒன்றுதான். புது டிபார்ட்மெண்டுகளும் உத்தியோகஸ்தர்களும் அவர்களுக்காக அடுக்கு மாடிக் கட்டிடம், மேஜை, நாற்



காலிகள், குமாஸ்தாக்கள், அதிகாரிகள், பெர்மிட் கண்ட்ரோல்கள், லைசென்சுகள் — இவை பழகிப்போன விஷயங்கள். இவற்றிலிருந்து நாட்டுக்கு எவ்வளவு நன்மை கிடைத்துள்ளது என்பதும் எல்லோரும் அறிந்ததே. பிடிவாதத்தையே தைரியம் என்று கருதி மக்களிடம் பிரமையை ஏற்படுத்த முயலுகிறார் திரு மொரார்ஜி. மொரார்ஜியின் போக்கைப் பற்றி ராஜாஜி மிக வருத்தப்பட்டுப் பின்வருமாறு ஒரு கட்டுரையில் எழுதுகிறார்:

"தங்கத்தைக் கள்ளக் கடத்தல் செய்பவர்களைத் தடுக்க முடியாததினால் தங்கத்தை உபயோகிப்பதையே தடுக்க எடுக்கப்பட்டிருக்கும் இந்தத் தடையுத்தரவு சர்க்கார் தனது நிர்வாகத் திறமையில் தோல்வி அடைந்திருப்பதை ஒப்புக்கொள்வதாகும். மேனாட்டிலிருந்து கள்ளத்தனமாக வரும் 'பெனிஸிலின்' மருந்து உள்நாட்டுச் சரக்கைவிடத் தரம் வாய்ந்ததாக இருப்பதாக டாக்டர்கள் கருதினால், சுகாதார மந்திரி பெனிஸிலினை டாக்டர்கள் உபயோகிப்பதையே தடை செய்துவிடுவாரா என்ன? கலப்பட நெய் விற்பனையைத் தடுக்க முடியவில்லை என்பதற்காக உணவு மந்திரி, நெய்யை உபயோகிப்பதே தவறு, அனாவசியமான பழக்கம் என்று கூறித் தடை விதித்துவிட முடியுமா? மறைமுகவற்புறுத்தல், தாட்சண்யங்கள் காரணமாக மட்டரகமான சங்கீதத்தை ஒலி பரப்புவதை அ. இ. ரேடியோ தடுக்க முடியவில்லை என்பதற்காகச் சங்கீதம் பாடுவதோ, வாத்தியம் வாசிப்பதோ நேரத்தை வீணடிப்பதாகும்; அந்த நேரத்தை அம்பர் சர்க்காவில் நூல் நூற்பதில் செலவிடலாம் என்று கூறிவிட முடியுமா? மக்களுக்குப் பொன்னின் மேல் உள்ள பற்றையும் அழகுணர்ச்சியையும், ஒரு மட்டத் தங்கத்தை அவர்கள்மீது திணித்து மாற்றி விடமுடியும் என்று ஸ்ரீ மொரார்ஜி தேசாய் ஏன் தவறாகக் கணக்குப் போடுகிறார்? ஆட்சேபணைகளுக்கு நிதி மந்திரி மக்கள் சபையில் கூறிய பதிலில் அவரது முரட்டுப் பிடிவாத உணர்ச்சி தான் தெரிய வந்தது. கொடுங்கோல் அரசர்கள் எல்லாம் தங்கள் தவறான கொள்கைகளை மக்களின் விருப்பத்துக்கு இணங்கி மாற்றிக்கொண்டிருக்கிறார்கள் என்பதைப் படிக்கிறோம். ஆனால் அஹிம்சா முறையில் பதவிக்கு வந்தவர்கள் ஹிம்சை புரிவதில் பெயர்எடுத்த பழங் கொடுங்கோல் மன்னர்களை மிஞ்சி விடக் கூடியவர்களாக இருக்கிறார்கள். ஓரிரண்டு சுத்தத் தங்க நகைகளை விடப் பித்தளை நகைகள் போட்டுக் கொள்வது மேலானது என்று கருதும் பெருமைவிகர் நம் நாட்டில் உயர் பதவியில் இருப்பது நாட்டின் துரதிர்ஷ்டமாகும்."

# என்ன சேதி?

## தஞ்சையின் நஷ்டம்

தஞ்சை மாவட்ட சுதந்திரக் கட்சியின் தலைவராக இருந்து பணியாற்றிய திரு என். சாமித்துரைத்தேவர் அவர்கள் 1-3-63ல் காலமானார் என்கிற செய்தியைக் கேட்டு வருத்தப்பட்டோம்.

திரு சாமித்துரைத் தேவர் அவர்கள் இனிய பண்பும் சீரிய நோக்கங்களும் கொண்டவர். 1930-ம் ஆண்டில் ராஜாஜி அவர்களால் காங்கிரஸில் சேர்க்கப்பட்டார். 1958-ல் காங்கிரஸின் எதேச்சாதிகாரப் போக்குப் பிடிக்காமல் விலகி இந்திய தேசிய ஜனநாயக காங்கிரஸில் சேர்ந்தார். அதில் அவர் ஜில்லாத் தலைவராக இருந்து பணியாற்றினார். அதன் பிறகு, தஞ்சை மாவட்ட சுதந்திரக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு மாநிலக் கமிட்டியில் ஓர் உறுப்பினராகவும் இருந்து பெரும் தொண்டாற்றினார். 1962-ல் நடந்த பொதுத் தேர்தலில் வேதாரண்யம் தொகுதியில் சுதந்திரக் கட்சியின் சார்பில் அபேக்ஷகராகப் போட்டியிட்டார். திரு சாமித்துரைத் தேவர் அவர்கள் மறைவு, சுதந்திரக் கட்சிக்குப் பெரும் நஷ்டம். கோவையில் கூடிய சுதந்திரக் கட்சி மாகாநாடு அவர் மறைவுக்கு வருத்தம் தெரிவித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.



திரு சாமித்துரைத் தேவர்

## பர்மாவின் துணிச்சல்

இந்தியாவின் மீது சீன ஆக்கிரமிப்பு ஏற்பட்டதிலிருந்து ஆசிய நாடுகள் திக்கு தெரியாமல் திகைக்கின்றன: இந்நிலையில் பர்மா முதுகெலும்புள்ள அரசாங்கமாகத் தன்னைக் காட்டிக் கொண்டிருப்பதாகச் செய்தி வந்திருக்கிறது.

1962ம் ஆண்டுக்கு பர்மா இரண்டு லட்சம் டன் அரிசி சீனாவுக்குத் தர ஒப்புக் கொண்டிருந்தது. இதில் ஒரு லட்சம் டன் கொடுபட வேண்டியிருந்தது. இதனிடையில் சீனா 1963ம் ஆண்டுக்குப் பர்மாவிடம் மூன்று லட்சம் டன் அரிசி கோரியிருந்தது. அதற்குரிய ஒப்பந்தம் ஆகவில்லை. அதற்குள்ளாக 62ம் வருஷ ஒப்பந்தத்தில் பாக்கியுள்ள ஒரு லட்சம்டன் அரிசியை இமய மலைச் சாரலில் இந்திய எல்லையில் உள்ள சீனத் துருப்புக்களுக்கு அனுப்பும்படி கோரியது. இப்படிச் செய்யக் கோருவது இந்தியா - பர்மா நல்லுறவைப் பாதிப்பதாகும் என்று கருதி, அவ்வாறு அனுப்ப மறுத்துவிட்டதாம். அத்துடன் 63ம் ஆண்டுக்குக் கோரியிருந்த மூன்று லட்சம் டன் அரிசியில் மூன்றில் ஒரு பங்கான ஒரு லட்சம் டன் அரிசிதான் கொடுக்க முடியும் என்றும் கூறி விட்டதாகத் தெரிகிறது.









PEPS



சென்னை தியாகராயநகர் (மாம்பலம்) ஸ்டேஷன் எதிரிலுள்ள "கல்யாண் ஸ்டோர்ஸ் என்னும் ஜவுளிக் கடைக்கு ராஜாஜி அவர்கள் சமீபத்தில் விஜயம் செய்து திரு முருகன் படத்துக்கு விளக்கேற்றி வைத்து கடை முதலாளிக்கும், சிப்பந்திகளுக்கும் ஆசி வழங்கினார். பக்கத்தில் நிற்பவர் கல்யாண் ஸ்டோர்ஸ் அதிபர் திரு வி. கல்யாண சுந்தரம்.

# அறிவுக் கனலே, அருட் புனலே!

## ரா. கணபதி

விசுவநாததத்தர் ராய்ப்பூரிலிருந்த போது கல்வியிற் சிறந்த பலர் அவருடன் சம்பாஷிக்க வருவார்கள். அந்தச் சம்பாஷணைகளை ஆர்வத்துடன் கேட்பதுடன், சிற்சில சமயங்களில் தானுமே அவற்றில் கலந்து கொள்வான் நரேன். தன்னுடைய வாதங்களையும் அவர்கள் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும், சிறுவனின் பேச்சாக எண்ணி அவற்றைப் புறக்கணிக்கக் கூடாது என்பதில் நரேந்திரன் மிகவும் தீவிரமாக இருந்தான். தன்னை அலட்சியப்படுத்துவது தந்தையின் ஆப்த நண்பராயினும் அவனுக்குக் கன கோபம் வந்து விடும். தன்னிடம் மன்னிப்புக் கேட்காத வரை எதிராளியைச் சும்மா விட மாட்டான் நரேந்திரன்.

இரண்டாண்டுகள் ராய்ப்பூர் வாசம் ஆயிற்று.

1879-ம் வருஷத்தில் மீண்டும் கல்கத்தாவுக்குத் திரும்பியது தத்தர் குடும்பம். நரேனை மறுபடியும் பள்ளியில் சேர்ப்பதில் ஒரு சிக்கல் ஏற்பட்டது. இரண்டாண்டுகள் படிப்பு முறிவு பட்டதால் அந்த இரு வகுப்புகளுக்கு மேற்பட்ட வகுப்பில் அவனை அநுமதிக்க ஆட்சேபனை எழுந்தது. எனினும் நரேந்திரனுடைய ஆற்றலை அந்தப் பள்ளியினர் அறிந்திருந்தபடியால் அவன் இரண்டாண்டு இடைக் காலத்துக்குப் பின்பு எந்த வகுப்பில் படிக்க வேண்டுமோ அந்த வகுப்புக்கே அவனை அநுமதித்தனர். அந்த இரண்டாண்டுப் படிப்புடன், தான் சேர்ந்துள்ள மூன்றாவதாண்டுப் படிப்பையும் சேர்த்து மூன்று வருஷப் பாடத்தை ஒரே வருஷத்தில் கற்றுத் தேர்ச்சி பெற்றான் சூரன் நரேன்.

பள்ளியில் இறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்த நரேந்திரன் ஆங்கில, வங்காளி இலக்கியங்களைத் தணியாத தாகத்துடன் பருகிக் கொண்டிருந்தான். இந்திய சரித்திர நூல்களையும் தனி அக்கறையுடன் படித்து வந்தான். இதனாலெல்லாம் வகுப்புப் பாடங்களில் கவனம் செலுத்துவது அவனுக்கு இயலாமற் போயிற்று. பரீட்சைக்குச் சில தினங்களே இருந்தன. அப்போதுதான் நரேன் பாட புத்தகங்களை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

க்ஷேத்திர கணிதப் புத்தகத்தைப் பிரித்த நரேனுக்குத் தலையைச் சுற்றியது. அந்தப் புத்தகத்திலிருந்த வட்டங்கள் இடம் பெயர்ந்து வந்து தன் தலையைச் சுற்றிச் சுழல்வதுபோல், தன் தலையும் சுற்றுவது போல் இருந்தது. ஒருவாறு தன்னைச் சுதாரித்துக் கொண்டான். அன்று இரவு முழுவதும் க்ஷேத்திர கணித அப்பியாசங்களை அடியிலிருந்து தொடங்கிப் படிக்கலானான்.

இருபத்து நாலே மணிகளில் நாலு க்ஷேத்திர கணித நூல்களையும் பயின்று விட்டான். வரி வரியாகப் படிக்காமலே கருத்தைப் புரிந்து கொள்ளும் திறமை நரேந்திரனுக்கு உண்டாகி விட்டது!

இந்தச் சக்தி வளர வளர 'பாரா' 'பாரா'வாகப் படிக்கவும், பிறகு அதற்குங்கூட அவசியம் இல்லாமல் ஒவ்வொரு பக்கத்திலும் முதல் வரியையும், கடைசி வரியையும் படித்தாலே நரேந்திரனால் விஷயத்தைப் பின்பற்ற முடிந்தது.

எஸ். எஸ். எல். ஸி-க்குச் சமமான அநுமதிப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினான் நரேன். அவனுடைய பள்ளியிலேயே அந்த ஆண்டில் அவன் ஒருவன்தான் அவ்வளவு சிறப்பாகத் தேறியிருந்தான்.

முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ற நரேந்திரனுக்குக் கடிகாரம் ஒன்றைப் பரிசளித்தார் விசுவநாத தத்தர்.




குழந்தைப் பருவத்தின் கும்மாளமெல்லாம் ஓய்ந்துவிட்டது. பதினேழு பிராயத்து நரேந்திர நாத தத்தா, கல்கத்தா

மாநிலக் கல்லூரியில் சேர்ந்து விட்டான். ஓராண்டுக்குப் பின் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த மிஷனரி நடத்தி வந்த பொதுச் சபை நிலையத்தில் (General Assembly's Institution) சேர்ந்து படிப்பைத் தொடர்ந்தான்.

1881-ம் ஆண்டு எஃப். ஏ. பரீட்சைக்குச் சமமான முதல் கலைப் பரீட்சையில் இரண்டாம் வகுப்பில் தேர்வு பெற்றான் நரேந்திரன்.

அந்த ஆண்டுதான் அவனுடைய வாழ்க்கையின் அதிமுக்கியமான சம்பவம் நிகழ்ந்தது. அவனுடைய தனி வாழ்க்கையில் மட்டும் முக்கியத்துவம் வாய்ந்த சம்பவம் அல்ல அது. இந்திய சமய சரித்திரத்திலேயே முக்கியத்துவம் பெற்ற பெரு நிகழ்ச்சி அது. தக்ஷிணேசுவரத்துத் தபோநிதியாகிய பரமஹம்ஸ ராமகிருஷ்ணரை நரேந்திரன் சந்தித்தது அந்த வருஷம் நவம்பர் மாதத்தில் தான்.

பொதுச் சபை நிலையத்தின் முதல்வரான பேராசிரியர் வில்லியம் ஹேஸ்டி நரேந்திரனின் வகுப்புக்கு ஆங்கில இலக்கியம் கற்பித்து வந்தார். வேட்ஸ்வொர்த்தின் 'எக்ஸ்கர்ஷன்' என்ற அற்புதமான காவியத்தை மாணவர்களுக்கு விளக்கி வந்தார் ஹேஸ்டி. இயற்கை அழகை அநுபவித்து வந்த கவி தன் நினைவு மறந்து பரவசமுற்ற நிலை கவிதையில் வந்தது. பரவச அநுபூதி நிலை என்றால் என்ன என்பது மாணவர்களுக்குப் புரியவில்லை. ('மாணவர்களுக்கு' என்பதாக நரேந்திரனையும் சேர்த்துச் சொல்வது தவறாக இருக்கலாம். ஏனெனில் வேட்ஸ்வொர்த் அநுபவித்த பரவச நிலையை நரேந்திரனே ராய்ப்பூர் பயணத்தின்போது துய்த்திருக்கிறானல்லவா?)

தன் வயமிழந்து, தன் கருத்தைக் கவர்ந்த பொருளின் கருவில் கரைந்திருக்கும் பரவச நிலையைப் பேராசிரியர் வார்த்தையால் எப்படி விளக்க முடியும்? அவர் கூறினார்: ''அகத் தூய்மையாலும் ஒருமுகப்படுத்திய உணர்வாலும்தான் இந்தப் பரவச நிலையை அடைய முடியும். இந்தக் காலத்தில் இத்தகைய நிலைக்குச் செல்பவர்கள் மிகத் துர்லபம். எனினும் அப்படிப்பட்ட புனிதமான மன நிலை படைத்த அநுபூதிமான் ஒருவரை நான் கண்டிருக்கிறேன். தக்ஷிணேசுவரத்தில் வாழும் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தான் அவர். நீங்களும் அங்கே சென்று அவரைக் கண்டால் 'பரவசம்' என்றால் என்ன என்று தெரிந்து கொள்ளலாம்.''

எங்கோ தூர தூரத்திலிருந்து ஓர் ஒலி எழுந்து நரேந்திரனின் ஆத்மச் செவியில் புகுந்தது. 'வா, வா' என்று அவனை அழைத்தது.

பாடத் திட்டத்திலுள்ள புத்தகங்களோடு நரேன் தனது படிப்பை முடித்துக்கொள்ளவில்லை. கல்லூரியில் சேர்ந்த முதல் இரண்டாண்டுகளில் மேநாட்டுத் தர்க்க சாஸ்திரம் அவ்வளவையும் கரைத்துக் குடித்தான் அவன். பீ. ஏ. படிக்கும் போது மேநாட்டுத் தத்துவ சாஸ்திரங்களையும், சரித்திரங்களையும் விரிவாகப் படித்தான்.

அநேக பாடங்களைப் பரீட்சை சமயத்தில்தான் தொடக்கத்திலிருந்து முதன் முறையாகப் படிப்பான் நரேன். காப்பியையோ தேநீரையோ விழுங்கியபடி, இராக் கண் விழித்துப் படிப்பான்.

இது போல பீ. ஏ. பரீட்சைக்கு விழுந்து விழுந்து படித்துக்கொண்டிருக்கும்போது பரீட்சைக்கு முதல் நாள் காலை ஒரு விசித்திர எண்ணம் எழுந்தது அவனுக்கு. 'இந்தக் கல்வியினால் என்ன பயன்? மெய்ப்பொருள் எனப்படும் சத்திய தரிசனத்துக்கு இந்தப் படிப்பு உதவுமா?' என்ற வினா அவனுடைய உள்ளத்தில் பிறந்தது. நரேனுக்கும் தெரியாமல் அவன் உள் மனசில் முட்டிக் கொண்டிருந்த எண்ணம் அன்று வெளியாகி விட்டது.

மானஸிகமான ஏதோ ஓர் உலகுக்குச் சென்றுவிட்டான் நரேன். வாசகர்களே! 'மானஸிகம்' என்று கூறியவுடனேயே அது நாம் கண்ணால் காணும் இந்தப் பௌதிக உலகத்தைப் போலச் சத்திய மானதல்லவென்று எண்ணிவிடாதீர்கள். எல்லா மானஸிக உணர்வுகளுமே நம்முடைய அற்ப மனசு புனையும் புல்லிய கற்பனைகள் போன்ற பொய் அல்ல. நாம் வாழும் பௌதிக உலகத்தை விடச் சத்தியமான மானஸிக உலகமும் உண்டு. நமது பௌதிக உலகத்தை உருவாக்கியுள்ள பொருட்களும் ஒரு பேரறிவின் மானஸிக எண்ணங்கள்தாமே!

ஸ்தூல உலகை விடச் சத்தியமானதொரு சூக்ஷ்ம உலகில் உலவிக்கொண்டிருந்தது நரேந்திரனின் உள்ளம். அவனுடைய கால்கள் கல்லூரி மாணவர் விடுதியில் உலவிக் கொண்டிருந்தன. தன் வயம் இழந்தாற் போன்ற தோற்றமும், கொழுந்து விட்டெரியும் முகப் பிரகாசமுமாக நண்பன் ஒருவனின் அறை வாயிலில் நின்றான் நரேன். அவனுடைய இனிய உணர்வுகள் இனியதொரு பாடலாக வடிந்தன:

மலைகாள், முகில்காள்,
மலய மாருதங்காள்!
மூலப்பொருள் மகிமை
பாடி மகிழுங்கள்!
சூரியர்காள், சந்திரர்காள்,
சுடர் வீசும் தாரகைகாள்!
சத்தியப் பொருள் பெருமை
பாடி மகிழுங்கள்!
பாடி மகிழுங்கள், மகிழ்ந்
துணர்ந்து பாடுங்கள்!

மலையும், முகிலும், மலயமாருதமும், சூரியனும், சந்திரனும், சுடர்த் தாரகையும் பாட வேண்டியதை யெல்லாம் நரேந்திரனே பாடினான். பாடி மகிழ்ந்தான்; மகிழ்ந்து உணர்ந்து பாடினான்.

மணி ஒன்பதாயிற்று. நரேந்திரனுக்கோ இவ்வுலகப் பிரக்ஞையே இல்லை. அவனுடைய நண்பன் ஒருவன் தான் அவனது நினைவை இவ்வுலகுக்குத் திருப்பினான். ஆனால் அந்தப் பரீட்சை சமாசாரம் மிகவும் அற்பமாகவே பட்டது நரேந்திரனுக்கு. ஏனோ தானோ வென்று மறு நாள் பரீட்சை எழுத அமர்ந்தான்; தேறியும்விட்டான்.

நரேந்திரனுக்கு அடிநாளிலிருந்தே தன் தனித் தன்மை தெரியும்; தனது எண்ணங்களும் இலட்சியங்களும் மற்றவர்களுடையதைப் போன்றவை அல்ல என்பது தெரியும்; தான் தனியொரு முறையில் உருவாகப் போகிறோம் என்பதையும் அவன் அறிந்திருந்தான். பகுத்தறிவின் வழியே சென்று சாசுவத சத்தியத்தை அறிய உள்ளூறத் துடித்தான் நரேன். உடல் நலம் பேணுவதிலும், லௌகிகக் கல்வியிலும் கவனம் காட்டினானெனினும் போகங்களில் அவன் மனம் செல்லவில்லை. அக இயற்கை, புற இயற்கை இரண்டின் அந்தரங்கத்தையும் ஊடுருவி, வென்று ஆதாரத் தத்துவத்தைக் காண அவன் தவித்தான்.

இயற்கை வேகத்தை அடக்குவது தானே பிரம்மசரியம்? எனவே நரேந்திரனுக்குப் பிரம்மசரியத்தில் ஆழ்ந்த நாட்டம் இருந்ததில் வியப்பில்லை அல்லவா? பிரம்மசரியம் என்பதை வெறும் உடல் தூய்மையாக மட்டும் அவன் கருதவில்லை. சரீரத்தைப் போலவே செயல், சொல், சிந்தனை யாவற்றிலும் தூய்மையாக இருப்பதையே நரேந்திரன் பிரம்மசரியம் எனக் கருதினான். இளமையில் ஆளாகக் கூடிய எந்தச் சபலத்துக்கும் இடம் தராது மிகவும் ஜாக்கிரதையாக வாழ்ந்த நரேன், 'ஏதோ ஒன்று' தன்னைத் தவறான மார்க்கத்தில் செல்ல விடாமல் பிடித்திழுத்துக் காத்து வருவதாக உணர்ந்தான். நரேந்திரன் அறியாவிட்டாலும் அவனுக்காகவே காத்திருந்த பரமஹம்ஸ தேவரின் ரக்ஷண சக்திதானே அது?

நரேந்திரனுக்குக் கல்யாணம் செய்து வைத்துக் கண் குளிரக் காண வேண்டும் என்று விசுவநாத தத்தர் விரும்பிய போது அவனது பிரம்மசரியம் அதற்கு அஞ்சியது. நல்ல நல்ல வரன்கள் வந்தன. நரேந்திரன் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ்.ஸுக்குப் படிக்க வசதி தரும் அளவுக்கு வரதட்சிணை தரக் கூடியவர்களெல்லாம் இந்த அற்புத இளைஞனுக்கு வலை விசினார்கள். ஆனால் கலெக்டர் பதவிக்காகப் பிறந்தவனல்லவே நரேந்திரன்? ஞான சாம்ராஜ்யத்தின் சிம்மாசனமே அல்லவா அவனுக்குக் காத்துக் கொண்டிருந்தது? எப்படியோ அவனுடைய முயற்சி யில்லாமலே கலியாணப் பேச்சுக்களும் முறிந்தே வந்தன. அதற்கும் காரணம் பரமஹம்ஸரின் காப்புச் சக்திதான்! புவநேசுவரி நரேந்திரனின் மூலம் பேரன் பேத்தி எடுக்க ஆசைப்பட்டாள் எனில் ராமகிருஷ்ண தேவரோ, அவன் மூலம் உலகம் பரவிய ஞானப் பரம்பரையைப் பிறப்பிக்க அல்லவா துடித்துக் கொண்டிருந்தார்?

வாலிபப் பருவத்தில் நரேந்திரன் துயில் கொள்ளு முன் அவன் மனக் கண்ணுக்கு முன்னால் இரண்டு சித்திரங்கள் தோன்றும். சுக போகமும், செல்வமும், அதிகாரமும், பெயரும், புகழும், பெண்டிரும், பிள்ளையும் சூழ்ந்த வாழ்க்கை ஒன்று. உடைமை எதுவுமே இன்றிப் பெரிய உலகிலே, தன்னந் தனியாக, ஒரே உடையைச் சுற்றியபடித் திரியும் பரதேசியின் சித்திரம் இன்னொன்று. பரந்த வானத்தையே கூரையாகக் கொண்டு, திறந்த வெளியில் உறங்கி, நீர் நிலை கண்ட இடத்தில் ஸ்நானமும், கனியோ, காயோ, கனிந்த உள்ளத்தோடு பிட்சை யிடுவாரோ கிடைக்கும்போது மட்டிலுமே உண்டு, பரமாத்மாவில் உள்ளத்தைப் பதித்துச் சஞ்சரிக்கும் சந்நியாச வாழ்க்கை நரேனின் முன்பு ஓவியமாக விரியும். இவ்விரு சித்திரங்களையும் நரேந்திரன் கூர்ந்து கவனிக்கக் கவனிக்கப் பின்னதே அவனை ஆகர்ஷிக்கும். முதலில் கண்ட ஓவியத்தின் வண்ணங்கள் மெல்ல மெல்ல மங்கி அடியோடு தேய்ந்து போகும். பிரம்மசரியத்திலேயே நிலை நிற்பான் அவன்.

இயற்கை உந்தல்களை எடுத்த எடுப்பில் அடக்குவது என்பது இயலாத காரியம். ஒரு மடையை அடைத்து இன்

ஒரு மடையில் நீர் பாய்ச்சுவது போல, வேகங்களையும் ஒரு துறை இல்லாவிடில் வேறொன்றில் செலுத்தினால் ஒழிய அவை உள்ளேயே பம்மிக் கொண்டு மனிதனைச் சிதிலமாக்கிவிடும். இதனால்தான் சமயமானது மனிதனது வேகங்களையெல்லாம் தெய்வத்தினிடம் திருப்பி அவற்றைப் புனிதமாக்குகின்றன. கண்ணால் தெய்வ மூர்த்தத்தைக் காண்பது, காதால் தெய்வத்தின் கீர்த்தியைக் கேட்பது, நாவால் தெய்வத்தை ஏத்துவது, கையால் தெய்வத்தை அர்ச்சிப்பது, காலால் பிரதட்சிணம் செய்வது, உடலால் வணங்குவது என்றெல்லாம் புலன்களைப் பரம்பொருளிடம் திருப்பி விடுகிறது. இந்த நிலையில் வேகங்கள் எல்லாம் பாவனமான முறையில் நிறைவு பெற்று, அதன் பின் மலர்ந்த பின் மலர் தானாகவே உதிர்வது போல ஆத்மாவிலிருந்து நழுவி விடும்; ஞானக் கனி தோன்ற ஆரம்பிக்கும். கொழுந்து விட்டெரியும் வேகங்களைத் தெய்வம் என்ற தைலத் தடாகத்தில் முங்கவைத்தால் அவை முதலில் முன்னிலும் தீவிரமாக ஜ்வலிக்கும். எனினும் தீயில் வற்றும் தைலமல்ல பரம்பொருள். பிரவாகமாகப் பெருக்கெடுத்து அந்தத் தீயையும் விழுங்கிவிடும் தைலம் அது. தீ அவிந்த பின் கண்ணாலும், காதாலும், நாவாலும், கையாலும், காலாலும், உடலாலும் எந்தப் பொருளைப் புறத்தே வழிபட்டோமோ அந்தப் பொருள் நமக்குள்ளேயே இருக்கிறது என்ற உணர்வு வரும்.

ஒவ்வொரு அங்கத்தையும் இறைவன் பணியில் ஈடுபடுத்தித் 'தலையே நீ வணங்காய், கண்காள் காண்மின்களோ, வாயே வாழ்த்து கண்டாய், நெஞ்சே நீ நினையாய், கைகாள் கூப்பித் தொழீர்' என்றெல்லாம் திரு அங்க மாலை பாடிய திருநாவுக்கரசுப் பெருமான் அப்பதிகத்தின் இறுதியிலேயே, இவ்வாறெல்லாம் வெளியே வழிபட்ட 'தேவனை என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன்' என்று பாடுவது இதைத்தானே விளக்குகிறது? புலன்களுக்குக் கோசரமாகும் முறையில் முதலில் பரம்பொருளைக் கிரகித்துக் கொண்டு அதன் பின்னர் புலன்களுக்குப் பிடிபடாத கேவலப் பொருளாக அதனை அநுபவிக்க வழி வகுப்பது இந்து மதம்.

நரேந்திரன் வேகங்களிலிருந்து தப்ப விரும்பினான். இயற்கையாக அவை வெளிப்படத் தலைப்படும் மார்க்கங்களை அடைத்து விட்டான். ஆத்ம வாழ்வுக்கு ஏங்கினான். எனினும் அவன் இயல்பாகவோ அல்லது தந்தையிடமிருந்து பிதிரார்ஜிதமாகவோ, பெற்றிருந்த பகுத்தறிவு மனோபாவம் காரணமாகத் தன் வேகங்களைப் பக்திமயமாக்கி தேவதா ஆராதனம் செய்வதில் உள்ளத்தைச் செலுத்தவில்லை. உருவமற்ற பரம்பொருளிடத்தே தனது வேகங்களைத் திருப்பிவிடத் துடித்துக் கொண்டிருந்தான். இந்த இரண்டும்கெட்டான் நிலை நரேந்திரனுக்கு ஓயாத உள்ள உளைச்சலைக் கொடுத்து உருக்குலைத்தது. குலைந்து போன உருவை ஒரு சிறிது கட்டிப் பிடித்துக் காக்க ஒரு வாய்ப்பாக அவனுக்குக் கிட்டியது பிரம்ம சமாஜம்.

சென்ற நூற்றாண்டில் ஆங்கிலப் படிப்பின் காரணமாகவும், கிறிஸ்துவ மதப் பிரசாரம் காரணமாகவும், படித்த இந்துக்களிடையே இந்து மதத்தைப் பற்றிப் பல தவறான கருத்துக்கள் எழுந்தன. எந்த மதத்திலுமே உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட அம்சங்களும், பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட அம்சங்களும் பின்னிப் பிணைந்துள்ளன. இந்து மதத்திலும் இவ்வாறே உள்ளது. இதில் உணர்ச்சியைத் தள்ளிவிட முடியாது. தள்ள வேண்டிய அவசியமும் கிடையாது. பகுத்தறிவின் எல்லைக்கு அப்பாற்பட்ட விஷயங்களில் உணர்ச்சிதான் உரைகல்லாகிறது. உதாரணமாக அன்பும், அழ



கும் புத்தி பூர்வமான காரணங்களால் நிலைநாட்ட முடியாதவை. ஆனால், இதயத்தாலும் காரணம் காட்ட முடியும். எந்த வழியில் சென்றால் இதயம் நிறைவு காண்கிறதோ அந்த வழிக்கு அநுகூலமாக உள்ள எதுவும் ஏற்று அநுசரிக்கப்பட வேண்டியதே என்பதுதான் இதயம் காட்டும் காரணம். அதாவது அநுபவபூர்வமாகப் பெறும் ஆனந்தமே இதயம் காட்டும் காரணம். 'இதயத்துக்கெனக் காரணங்கள் உண்டு; அது அறிவுக்கு எட்டாது' என்று இதனைத்தான் பாஸ்கல் கூறுகிறார். இத்தகைய அநுபவத்துக்கு வழி கோலுவதுதான் உணர்ச்சி. 'உணர்ச்சி' என்னும்போதே அதன் சக்தியை நாம் **உணர்ந்து**, அதாவது அநுபவித்துப் பார்க்கிறோம் என்றும் ஏற்படுகிறதல்லவா?

ஆனால் பொதுவாக எல்லா மனக் கிளர்ச்சியையுமே உணர்ச்சி என்று எண்ணி விடுகிறோம். அநுபவத்தைக் காரணமாகக் கொண்டு இதய நிறைவில் முடியும் உணர்ச்சியையும், இவ்வித இதய நிறைவுக்குப் பயன்படாமல் எழும் அற்பமான உள்ளக் கிளர்ச்சியையும் ஒன்று என்றே எண்ணி விடுகிறோம். பகுத்தறிவுக்கு உட்பட்ட விஷயங்களிலும் கிளர்ச்சிக்கு முதலிடம் கொடுத்துவிடுகிறோம்.

ஞான பக்தர்களின் அறிவாராய்ச்சியாலும், பக்த ஞானிகளின் உணர்ச்சிகளாலும் இசைவு பெற்ற நம் மதம் ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக, கோடானு கோடி மக்களின் அநுஷ்டானத்தில் இருந்து வந்திருக்கிறதல்லவா? அந்த ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளில் வாழ்ந்த கோடானு கோடி மக்களும் ஞான பக்தர்களாகவோ, பக்த ஞானிகளாகவோ இருந்திருக்க முடியாது அல்லவா? எனவே இவர்கள் தங்கள் வேகங்களை ஆண்டவனின் வசமாக்க முயலும்போது உணர்ச்சிகளை மட்டுமின்றி, புல்லிய மனக் கிளர்ச்சிகளை ஆதாரமாகக் கொண்ட



பல அம்சங்களும் நமது மதத்தில் இடம் பெறலாயின. பகுத்தறிவுக்கு மேம்பட்ட விஷயங்களில் மட்டுமின்றிப் பகுத்தறிவுக்கு உட்பட்ட விஷயங்களிலும் பகுத்தறிவின் அணுகையை மறுத்ததால், அர்த்தமற்ற பழக்க வழக்கங்கள், சடங்குகள், கட்டுக் கதைகள் இவை இந்து சமய விருக்ஷத்தில் புல்லுருவியாகப் பாய்ந்தன.



புல்லுருவிகளைக் களைய வேண்டும் என்று எண்ணாமல் இந்து மதம் என்ற ஜீவ விருக்ஷத்தையே வெட்டத் துடித்தனர் இங்கு வந்து புகுந்த மேநாட்டினர் — அதாவது அவர்களில் பெரும்பான்மையானவர்கள். அவர்கள் சொல்லையே மகாமந்திரமாகக் கொண்டனர் நம் நாட்டுப் படித்த மேதைகள். நம் நாட்டின் துர்ப்பாக்கிய வசத்தால் இந்து மதத்தில் மட்டுமே மூட நம்பிக்கைகள் இருப்பதாகவும், இந்து மதத்தில் மூட நம்பிக்கைகள் மட்டுமே இருப்பதாகவும் மயங்கினர். கிறிஸ்துவ மதத்தில் நம்பிக்கை வைத்தார்களோ இல்லையோ, இந்து மதத்தில் நம்பிக்கை இழக்கலானார்கள். புல்லுருவிகளைக் களைந்து விருக்ஷத்தைக் காப்பாற்றாமல் புதிய விருக்ஷத்தையே நாடினர். நம் தாயிடம் சில தகாத குணங்கள் இருப்பதாக எண்ணி வேறு தாயை நாடினர். ஒவ்வொரு மதமுமே அந்தந்த மதத்தினருக்கு ஞானப் பாலூட்டும் அன்னை தான். ஆனால் ஒரு சிசுவின் அன்னை வேறொருத்தி பெற்ற குழந்தைக்கு எப்படித் தாயன்பைக் காட்ட இயலும்? ஒவ்வொரு தேசத்துக்கும் எப்படித் தனிப்பட்ட ஒரு சீதோஷ்ணம் உள்ளதோ, அதுபோல ஒவ்வொரு சமுதாயத்துக்கும் என்று ஒரு மனோபாவம் உண்டு. ஒரு சமுதாயத்தினரின் மனோபாவம் நம்பிக்கை கொள்ளும் தத்துவங்களில் இன்னொரு சமுதாயத்தினரால் நம்பிக்கை கொள்ள இயலாது. இப்படித்தான் கிறிஸ்துவ சமயத்தைத் தழுவ முற்பட்ட இந்தியர்களும் நம்பிக்கை யற்ற ஒரு சூனிய உணர்ச்சியை அநுபவித்தனர். எனவே இந்து மதத்தையும் கிறிஸ்துவ மதத்தையும் இணைத்துப் புது மதங்கள், அல்லது சங்கங்கள் நிறுவினர். இவற்றில் ஒன்றே பிரம்ம சமாஜம். (தொடரும்)

## கலைமகளுக்கு ஒரு கோயில்

"பொதிகைமலைப் பிறந்தமொழி
வாழ்வறியும் காலமெல்லாம்
புலவோர் வாயில்
துதியறிவாய் அவர் நெஞ்சின்
வாழ்த்தறிவாய் இறப்பின்றித்
துலங்குவாயே"

என்று நம்முடைய தேசியக் கவியால் புகழப்பெற்ற தமிழ்த் தாத்தாவின் சிறப்பு வாய்ந்த நூல் நிலையம் இப்போது அடையாறு கலாக்ஷேத்திரத்தின் பிரிவுகளுள் ஒன்றாக இலங்கிவருகிறது. கலாக்ஷேத்திரம் அடையாறில் இப்போதுள்ள இடத்திலிருந்து திருவான்மியூரில் விரிவான இடத்துக்கு மாறும்போது தமிழ்த் தாத்தாவின் நூல் நிலையமும் அங்கே இடம் மாறும். திருவான்மியூரில் தமிழ்க் களஞ்சியமான இந்நூல் நிலையம் அமைகிற பகுதியைக் கட்டி முடிக்கச் செலவாகும் ஒன்றரை இலட்சம் ரூபாயில் பாதி மத்திய சர்க்கார் மான்யமாக அளிக்கிறார்கள். பாக்கி எழுபத்தையாயிரத்தைத் தமிழ்ப் பெருமக்கள் உவந்து அளிக்க முன் வர வேண்டும். தமிழ்த் தாத்தா தேடிய சுவடிகளும், நூல்களும் அடங்கிய இந்த நூல் நிலையம் உருவாவதற்காகச் செய்யப் பெறும் முயற்சிகளை வாழ்த்தி ஸ்ரீ அனந்தராம தீட்சிதர் அவர்கள் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களை அகத்தியரோடு ஒப்பிட்டுப் பாராட்டியிருக்கிறார்கள். தமிழ்ப் புத்தாண்டு நன்னாளை யொட்டி தமிழ்த் தாத்தாவின் நூல் நிலையத்துக்குத் தேவையான தொகையைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில் உள்ள அன்பர்கள் அனுப்பித் தந்து இந்த நற்பணியை நிறைவேற்றி வைக்கவேணும். நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:



**கௌரவ அமைச்சர், டாக்டர் சாமிநாதய்யர் நூலகம், அடையாறு, சென்னை–20**

# போகிற போக்கில்..

சிட்டுக்குருவி

**கா**ங்கிரஸ் ஆட்சியில் அத்தனே பேரும் காஷாயம் அணிந்து கமண்டலம் தான் தூக்க வேண்டுமென்று திரு சசிவர்ணத் தேவர் பேசியிருக்கிருர். திரு தேவர் இப்படிப் பேசியதைக் கண்டு காவி உடைக்காரர்கள் பயப்படுகிருர்கள். ஏனெனில் இந்தப் பேச்சு திரு மொரார்ஜியின் காதில் விழுந்தால் அவர் காஷாயத்துக்கும், கமண்டலத்துக்கும் இப்போதே வரிப் போட்டு விடுவாரென அஞ்சுகிருர்கள்.



ஃ ஃ ஃ

சென்னை சர்க்காரின் வரியில்லா பட்ஜெட்டைக் கண்டு ஒரு திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் ''இது உப-தேர்தலுக்காகப் போடப்பட்டிருக்கிற பட்ஜெட்டாகும்'' என்று கூறியிருக்கிருர். இந்தப் பேச்சைக் கேட்கும் பொதுமக்கள், உப-தேர்தல் நடக்கும் பிராந்திய மக்களுக்கு நன்றி தெரிவிப்பார்கள். ''நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோருக்கும் பெய்யும் மழை'' என்பது மூதுரை. இப்போது அந்த ஒருவர் பல லட்சமாகப் பெருகியிருக்கிருர்கள். அவ்வளவுதான்! ஆகவே தி.மு.க. அங்கத்தினர் கூறியபடி அவர்கள் காரணமாக இருந்தால், அவர்களுக்குத் தமிழகத்தின் நன்றி உரித்தாகும்.

ஃ ஃ ஃ

நன்றியைக் கூறும்போது இன்னொரு விஷயத்தையும் நாம் மறந்துவிடக் கூடாது. நஞ்சை புஞ்சை நிலங்களுக்கு இப்போது தீர்வைகள் ஏறியிருக்கின்றன. இது பொது பட்ஜெட்டில் இல்லாமல் சற்று முன்னதாக வந்தது. இதுபோல், இந்த உபதேர்தல்கள் முடிந்த பிறகு உப-பட்ஜெட்டாகப் புது வரிகள் வரக் கூடுமல்லவா? ஆகவே பொதுமக்களுக்கு ஓர் ஆண்டுக்கு ஒரு முறைதான் வரி ஆபத்து இருப்பதாகக் கருத முடியாது. அநேகமாக இரண்டு தடவை ஏற்படுகிறது. ஆகவே ஆபத்து முற்றிலும் நீங்கவில்லை என்பதை உணர வேண்டும்.



ஃ ஃ ஃ

வரி போடாமல் பட்ஜெட்டைக் கொடுத்தது சென்னை ஒன்றுதானே என்று நினைக்க வேண்டாம். வேறு பல மாநிலங்களும் வரி போடாமல் பற்றுக்குறையைச் சரிக்கட்டிக்கொள்ளலாமென்று முடிவு கட்டியிருக்கிருர்கள். ஆகவே பல மாகாணங்கள் சேர்ந்து செய்திருக்கும் முடிவு இது. இந்த முடிவை மத்திய சர்க்காரே கூறியிருக்கும் என்பதில் ஐயமில்லை. மத்திய சர்க்கார் எந்த அடிப்படையில் இப்படிச் செய்தது என்ருல் எங்கெங்கு காங்கிரஸ் பலவீனமாக இருக்கிறதோ அங்கெல்லாம் இப்படிச் செய்திருக்கிறது. இதுதான் ரகசியம். ஆளும் கட்சியினர் தங்கள் கட்சியை எவ்வளவு கண்ணும் கருத்துமாகக் கவனிக்கிருர்கள், ஆரியக் கூத்தாடினுலும் காரியத்தில் கண்ணுக இருக்கிருர்கள் என்பதெல்லாம் மற்றக் கட்சிகளுக்கு ஒரு பாடமாகும். அவசர காலம் கட்சிக்கு உட்பட்டதுதானே யொழிய மேற்பட்டதா என்ன?

ஃ ஃ ஃ

கிரோஸின் புட்டிக்குப் பத்து புதுக் காசு விதம் உயர்ந்திருக்கிறது. இது ஏழைகளை வருத்துவது பற்றித் திரு மொரார்ஜி கவலைப்படுவதாகத் தோன்றவில்லை. இந்த விலை உயர்வு கிராமப்புற மக்களையும் குடிசைகளில் வாழ்வோரையும்தான் பாதிக்குமெனப் பொதுவாகக் கருதப்படுகிறது. இந்தக் கருத்தில் தவறு இல்லை. ஆனல் நகர்ப்புறவாசிகளும் இதிலிருந்து தப்ப வில்லை என்பதை யாரும் மறந்து விடக் கூடாது.

முன்பு வெள்ளையர் காலத்தில் ஐந்து அணுவுக்கும் ஆறு அணுவுக்கும் ஒரு குண்டு என விற்ற விறகு இன்று தர்மவான்களின் கைங்கரியமாக ரூபாய் இரண்டே காலுக்கு விற்கிறது. அதுவும் இஞ்சின் புகை விடுகிறதோ என்று பயப்படுகிற அளவுக்குப் புகையைக் கக்கும் ஈரக் கட்டைகள். ஆகவே வெகு பேர் விறகுக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு கிரோஸின் ஸ்டவ்வுக்குப் போய் விட்டார்கள். இது பெருவாரியாக உபயோகிக்கப்படுகிறது. எனவே இனி இவர்

களுக்கும் கஷ்டம்தான். ஆகவே திரு மொரார்ஜி யாரையும் விட்டுவைக்க வில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

ஃ ஃ ஃ

காமன்ஸ் சபையில் ஒரு தமாஷ் நடந்திருக்கிறது. திரு கெயிட்ஸ்கெல் எதிர்க் கட்சித் தலைவராக இருந்து காலமானு ரல்லவா? அவருக்குப் பதிலாகத் திரு வில்ஸன் வந்திருக்கிறார். திரு வில்ஸனின் முழுப் பெயர் ஹெரால்ட் வில்ஸன். இவருக்கு எதிராக இருக்கும் கன்ஸர் வேட்டிவ் கட்சித் தலைவரும் பிரதமரு மாகிய திரு மாக்மில்லனின் முழுப் பெயரும் ஹெரால்ட் மாக்மில்லன்! இந்த இரு ஹெரால்டுகளும் இப்படி மோதிக் கொண்டார்கள்.

பிரதமர்: எதிர்க் கட்சித் தலைவராகப் புதிதாக வந்திருக்கும் உங்களைப் பாராட்டுகிறேன். நீங்கள் நீண்ட காலம் வாழ்ந்து உங்கள் ஆசனத்தை அலங் கரிப்பீர்கள் என்றும் நம்புகிறேன்....

திரு கெய்ட்ஸ்கெல் காலமாகிய பிறகு தான் வில்ஸன் தலைவராக வந்திருக் கிறார். அதைக் குறிப்பிடுவது மாதிரி யாகவும் நீண்ட காலத்துக்கு எதிர்க் கட்சியாகவே இருங்கள் என்றும் சிலே டையாகப் பேசியிருக்கிறார் பிரதமர்.

ஆனால் அவரை வில்ஸன் எப்படி மடக்கினரென்று பாருங்கள்.

வில்ஸன்: உங்கள் பாராட்டுக்கு நன்றி! நீங்கள் இங்கே வந்து உட்காரு கிறவரை இந்த ஆசனத்தை உங்களுக் குத் தயாராக வைத்திருக்கிறேன்—கவ லைப்படாதீர்கள்...!''

சபையிலே எழுந்த சிரிப்பொலி வெகு நேரம் நீடித்தது.

'பிரிட்டன் — பிரிட்டன்தான்' என்று கூறத் தோன்றுகிறதல்லவா? அந்த பிரிட்டிஷ் மக்களைப் பற்றி ராஜாஜி கோவையில் ஒரு ரசமான விவரத்தைக் கூறினர்.

ஃ ஃ ஃ

இங்கிலாந்தில் தபால் கார்டின் விலையை ஒரு பென்னி உயர்த்தினார் களாம். உடனே தேசமெங்கும் கிளர்ச்சி எழுந்து சர்க்காரைப் பணிய வைத் தார்கள் என்பதைப் புது வரிகள் பற்றிப் பேசுகையில் ராஜாஜி குறிப்பிட்டார்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் ஒரு நண்பர் நீண்ட பெருமூச்சு விட்டார்.

## விநோத விளையாட்டு!



**"டா**ட்டா!" சொல்லிச் சொல்லி அலுத்துவிட்டது சோபனாவுக்கு. "பிர்லா! பிர்லா!" என்று கூறித் தோழிகளிடம் விடை பெற ஆரம்பித்தாள் அவள் மாறுதலுக்காக. கடைசி கடைசியாகக் கல்லூரிக் கட்டிடத்தை ஒரு முறை பார்த்தாள் அவள். தலைக்கு மேலே கரங்களை உயர்த்திப் பெரிய கும்பிடாகப் போட்டாள். படிப்பு ஒரு பெரிய தலைவேதனைதான்; ஆனால் அந்தக் கல்லூரியைப் பற்றிய இதர இனிய நினைவுகளும் உள்ளத்தில் பசுமையாக இருந்தனவே! வீடு நோக்கி மோட்டார் விரைகையில் கல்லூரி நாட்களைப் பற்றிய மனத்துக்குகந்த பல விஷயங்களும் மனக் கண் முன் தோன்றி அவள் நெஞ்சை நெகிழ வைத்தன. கண்களில் நீர் மல்கவும் ஆரம்பித்தது. அந்த மாதிரி அரை மணி நேர அரட்டைக் கச்சேரிகளை இனி யாருடன் நடத்த முடியும்? லெக்சரரை ஏமாற்றிக் கடைசி பெஞ்சியில் உட்கார்ந்து துணிச்சலுடன் கதைப் புத்தகம் படிப்பதில் ஓர் அலாதி ஆனந்தம் இருக்கத்தான் செய்தது. லீவு நாட்களில் ஏழெட்டுப் பேர்களாக இதே காரில் ஆட்டு மந்தை போல் அடைந்து கிடந்து 'பிக்னிக்' கிளம்புவோமே? இனிமேல் என்னுடன் 'பிக்னிக்'குக்கு யார் வரப் போகிறார்கள்?

ஏன், அவர் வருவாரே!

அந்த 'அவர்' யாரோ? என்ன பேரோ? எந்த ஊரோ?

அந்த 'அவர்' ஏன் 'அவராக' இருக்கக் கூடாது? சோபனாவின் உடல் சிலிர்த்தது. 'ஷெட்'டிலே கொண்டு போய்க் காரை நிறுத்துகிற வரை ஏதேதோ இனிய கற்பனைகளில் ஈடுபட்டிருந்தாள் அவள். அந்தப் பகற் கனவுகளிலே அச் சுந்தர முகமும் அடிக்கடி எட்டிப் பார்க்கத் தொடங்கியது. கலை சொட்டும் அழகிய வதனம் தோள்பட்டை ஓரங்களிலும் பித்தான் போடுகிற இடத்திலும் லேஸ் வைத்துத் தைக்கப்பட்டிருந்த மெல்லிய ஜிப்பாவும் இடையில் ஊங்கியும் அணிந்திருந்த வாட்டசாட்டமான உடல், 'எக்ஸ்ரே' கண்கள் என்பார்களே அதுபோன்று ஊடுருவிப் பார்க்கும் திறன் படைத்த கண்கள், இவற்றுடன் கூடிய அந்த அழகிய தோற்றத்தை அவளால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை.

அந்த எக்ஸ்ரே கண்களை அவள் தன் சிநேகிதிகளுக்கு அறிமுகப்படுத்தி வைத்த விதம் இதுதான்: "என்னவோ பட்டிக்காட்டான் தெருவிலே கார்ப் பார்ப்பது போல் திருதிருவென்று விழிக்கிறானே!" அதைக் கேட்டு அனைவரும் கலகலவென்று சிரித்தார்கள்.

**ப**ரீட்சைகளெல்லாம் முடிந்த பிறகு அவள் தோழிகளில் பலர் தங்கள் ஊருக்குத் திரும்பிவிட,விருந்தார்கள். அதற்கு முன்னால் கோஷ்டியாக மாமல்லபுரத்துக்குப் 'பிக்னிக்' போக வேண்டும் என்று திட்டம் போட்டு அதைக் காரியத்திலும் நிறைவேற்றுகின்ற போது அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. கல்லூரியில் அவளுக்காகக் காத்திருந்த அனைவரும் காரில் ஏறியதும், "ஐ ஆம் வெரி ஸாரி! இந்த வாரம் வெளியான 'லேடீஸ் ஓன்' பத்திரிகை பார்த்தீங்களா? அதிலே இந்த 'லேடஸ்ட் ஹேர்டு' இருக்கு. அதன்படி கட்டிக்கத்தான் இத்தனை நேரமாயிடுத்து" என்றாள் சோபனா, நூதனமான தன் கூந்தல் அலங்காரத்தைமெல்லத் தட்டிக் கொடுத்தபடியே. 'பேஷா இருக்கே, பூக்குடலையைத் தலையில் கவிழ்த்தாற்போல!' என்றாள் ஒரு குறும்புக்காரி. எல்லாரும் 'கொல்'லென்று நகைத்தார்கள்.

சாவியைத் திருப்பி மோட்டாரைக் கிளப்பிய சோபனா பெட்ரோல் குறைவாக இருப்பதைக் கவனித்தாள்.

பெட்ரோல் நிரப்பியானதும் நாலு டயர்களிலும் ஸ்டெப்னியிலும் காற்றுப் பிடித்துக் கொண்டிருந்தான் பெட்ரோல் பங்கிலிருந்த சிறுவன்.




அப்போதுதான் அந்த ஹெரால்ட் கார் அங்கே வந்து நின்றது. சோபனாவின் தோழிகளிடையே ஒரு பரபரப்பும் உண்டாயிற்று.

"யார் தெரிகிறதா?" என்றாள் ஒருத்தி.

"தெரியாமல் என்ன? புரொட்யூஸர், டைரக்டர் நடிகர், கதை வசன கர்த்தா, ஆர்ட் டைரக்டர், காமிரா மேன் எல்லாமாகச் சேர்ந்து ஓர் உருவெடுத்த நாராயணன் அவர்களை அடையாளம் கண்டு கொள்வதுதானா கஷ்டம்?" என்றுபதிலளித்தாள் மற்றொருத்தி.

அப்போதுதான் அவனைப் பட்டிக்காட்டானுக்கும் தன்னை தெருவிலேகார்ப்புடக்கும் ஒப்பிட்டுப் பேசினாள் சோபனா.

சிரிப்பைக் கேட்டு நாராயணன் புன்னகை புரிந்தான். நாலே எட்டில் அவர்களை நெருங்கி வந்து விட்டான்.

"எக்ஸ்க்யூஸ் மீ! உன்னைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் உன்னைப் பார்த்த மறு கணமே என்னுடைய அடுத்த படத்தில் கதாநாயகியாக நடிக்கத் தகுதி பெற்றவள் நீயேதான் என்று தீர்மானித்து விட்டேன்.

என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான் நாராயணன்.

சோபனாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ''நீங்கள் ஆட்டி வைக்கிற படியெல்லாம் ஆடுவதற்கு நான் தயாராக இல்லை! அதற்கு வேறு ஆளைப் பாருங்கள்!'' என்று கடக் கடக் கூறிவிட்டுக் காரைக் கிளப்பினாள். அது பாய்ந்த வேகத்தில் டயருக்குக் காற்றுப் பிடித்துக் கொண்டிருந்த சிறுவன் மிரண்டு ஒதுங்கினான்.

''ஒண்டர்புல் சோபனா! போட்டையே ஒரு போடு! நல்ல சூடு கொடுத்தாய்!'' என்றெல்லாம் புகழ் மாலைகளைத் தோழிகள் சூட்டியபோதிலும் சோபனாவின் மனம் நிதானமிழந்து படபடத்தது. ஐயோ! ஆத்திரத்துடன் பேசிவிட்டோமே! 'மன்னிக்க வேண்டும். தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய என்னால் முடியாது' என்று நாகரிகமாகக் கூறி யிருக்கலாமல்லவா? இப்படி எண்ணி வருந்தினாள் சோபனா. பிக்னிக் ஒன்றும் அவளுக்கு ரசிக்கவில்லை. எல்லாவற்றையும் சீக்கிரமாக முடித்துக்கொண்டு சினேகிதிகளை மீண்டும் கல்லூரிக் காம்பவுண்டுக்குள்ளேயே இறக்கி விட்டாள். அங்கிருந்து தனித் தனியே பிரிந்து போன அனைவருக்கும் டாட்டா — பிர்லா கூறிவிட்டுப் புறப்பட்டாள் வீட்டுக்கு.

இந்த மன நிலையில் காரை ஷெட்டிலே நிறுத்திவிட்டு வீட்டு வாசலில் நுழைந்த அவளிடம் தகப்பனார் மாசிலாமணி கேட்டார்: ''ஏனம்மா! மகாபலிபுரம் 'டிரிப்' எப்படி இருந்தது?''

''என்னமோ தோழிகளின் வற்புறுத்தலுக்காகப் போய் வந்தேனப்பா, எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை.''

''ஏன் இப்படி அலுத்துக் கொள்கிறாய்? பரீட்சை யெல்லாம் நன்றாக எழுதியிருக்கிறாயோ இல்லையோ?''

''நிச்சயமாகப் பாஸாகி விடுவேன், அப்பா! விசாரப்படாதீர்கள்! கஷ்டம்! மறுபடியும் காலேஜுக்குள் — அது டுடோரியல் காலேஜா யிருந்தாலும் சரிதான் — அடியெடுத்து வைக்கிற மாதிரி நடந்துகொள்ள எனக்கென்ன பைத்தியமா?''

''நல்ல வேடிக்கை இது! ஸ்கூல் பைனல் பாஸ் பண்ணியதுமே உன் அம்மா காலேஜும் வேண்டாம் கத்தரிக்காயும் வேண்டாம் என்று அடிச்சண்டாள். அப்போ அவள் வாயை அடக்கினாய். இப்போது காலேஜைச் சனியன், சனியன் என்று நாளைக்கு எட்டுத் தரம் வைகிறாய்.''

இதைக் கேட்டுக் கொண்டே அந்தப் பக்கம் வந்த போது சோபனாவின் தாயார், ''என்ன தர்க்கம் இது? நாலு ஜாதகத்தை வாங்கிக் கொண்டு வந்து பாருங்க என்று நாலு வருஷமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதைக் கேட்காமல் மன மாற்றத்துக்குக் காரணம் என்ன என்ற ஆராய்ச்சியிலே இறங்கிவிட்டீர்களே'' என்றாள்.

''நம் சோபனாவுக்கு அப்படி என்ன அவசரம்? பத்தொன்பது வயதுதானே ஆகிறது?'' என்றார் மாசிலாமணி. பின்னர், ''பார்த்தாயா! மறந்தே விட்டேன். யாரோ நாராயணன் என்று ஒரு சினிமா புரொட்யூஸராமே. அவன் டெலிபோன் பண்ணினான். இன்னும் சற்று நேரத்தில் இங்கே வருகிறானாம். எதற்காகவோ தெரியவில்லை. சினிமா டிராமா எல்லாம் பற்றி எனக்கும் உன் அம்மாவுக்கும் ஒரு இழவும் தெரியாது. அவனுடன் பேசக் கொடுக்க நீதான் வந்தாக வேண்டும்'' என்று தகப்பனார் கூறிய போது சோபனாவின் கால்கள் நடுக்கமெடுக்க ஆரம்பித்தன. அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, ''அப்பா! ஒரு தவறு நேர்ந்து விட்டது'' என்றாள். நடந்ததை யெல்லாம் விவரமாகக் கூறினாள். ''நாலு பேர் எதிரில் அவரை அவமதித்து விட்டதால் கோபித்துக் கொண்டிருக்கிறாரோ என்னவோ?'' என்று கவலையுடன் கேட்டு முடித்தாள்.

''அதெல்லாம் ஒன்றுமேயிராது. அவன் நடந்து கொண்டது மட்டும் ரொம்ப ஒழுங்கோ? ஆகட்டும் ஒரு கை பார்க்கலாம்'' என்று தைரியம் சொன்னார் மாசிலாமணி.

சோபனா தன் இப்போதைய அலங்காரத்தைக் கலைக்க அரை மணி நேரமும், வேறு புது விதமாகச் சிங்காரித்துக்கொள்ள இன்னும் முக்கால் மணி நேரமும் எடுத்துக் கொண்டாள். பழைய கோலத்திலேயே அவரெதிரே நிற்கலாமா? அதுவும் அவர் புரொட்யூஸர். எத்தனையோ அழகிகளுடன் பழகி யிருப்பவர். கண்ணைக்கவரும் விதமாக அமைய வேண்டாமா என் தோற்றம்?

கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டுப் பத்து நிமிஷம் கழித்துத்தான் மாடியிலிருந்து கீழே இறங்கினாள் சோபனா. அவரைச் சந்திக்க ரொம்பவும் ஆவலாய் இருப்பதாகக் காட்டிக்கொள்ளக் கூடாது!

நாராயணன் சொல்லிக் கொண்டிருந்தான்: ''நீங்கள் வழக்கமாகக் காருக்குப் பெட்ரோல் போடுகிற அந்த பங்கில் விசாரித்தேன். இன்னாரென்று தெரிந்து கொண்டு வந்தேன். உங்கள் குமாரியைப் பார்த்ததுமே நான் தீர்மானித்துவிட்டேன், ஸார்! அப்புறம் அவள் தன் தோழியிடம் ஏதோ சொல்லிச் சிரித்தாள். அற்புதமாக இருந்தது. பிறகு என்னிடம் கோபித்துக் கொண்டபோது... அடடா! என்ன முக பாவம்! லட்சம் தடவை தலைகீழாக நின்று சொல்லிக் கொடுத்தாலும் யார் கற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்? டைரக்டர்களுக்கு அவசியமில்லை என்று ஸ்டார்கள் தீர்மானித்துவிட்ட காலம் இது. நான் புது முகங்களாகப் பொறுக்கிப் போட்டுப் புரட்சி பண்ணப் போகிறேன், ஸார்! இந்த மாதிரி நாலு பேர் செய்தால் தான் இந்த சினிமா உலகம் உருப்படும்!''

சோபனாவுக்கு ஒரே ஏமாற்றம். மறுபடியும் சினிமாவில் நடிப்பது பற்றிப் பேசத்தானா வந்திருக்கிறார்? தன் தாயும் தந்தையும் அப்படியே தேன் குடித்த நரிபோல் முகத்தை வைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவளுக்கு ஆத்திரம் வந்தது.

''அம்மா! அப்பா! சினிமாவில் என்னால் நடிக்க முடியாது. ரொம்பவும் ஆசையாக இருந்தால் நீங்கள் இரண்டு பேரும் போய் நடித்துவிட்டு வாருங்கள்!'' என்றாள் சோபனா.

எவ்வளவோ வாதாடிப் பார்த்தார் நாராயணன். பெற்றவர்களும் அவனுக்குப் பரிந்து பேசினார்கள். சோபனா அசைந்து கொடுப்பதாயில்லை. ஏமாற்றத்துடன் அவன் திரும்பியதும் சோபனா ஆத்திரம் தீரப் பொரிந்தாள். ''அப்பா! உங்களுக்கு அம்மா எவ்வளவோ சொல்லியும் புத்தி வரவில்லை. இப்போது அம்மாவும் என்னைக் கைவிட்டு விட்டாள். என் வாழ்க்கையே குட்டிச்சுவராகி விடுமோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது. உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். எனக்கு உடனே கல்யாணம் பண்ணி வையுங்கள்!''

சோபனா இப்படிக் கூறியதும் மாசிலாமணி அயர்ந்து போய் விட்டார். 'லேடீஸ் ஹோம்' பத்திரிகையில் உள்ள நவநாகரிக நங்கையின் படம் உயிர் பெற்று எழுந்து வந்ததுபோல் தம் பெண் தோற்றமளித்தது தம் அகக் கண்களைக் குருடாக்கிவிட்டிருப்பதை உணர்ந்தார் அவர். கல்லூரியில் படித்து உல்லாசமாய்க் காலம் கழியும்போது தானே அவள் இம்மாதிரி யெல்லாம் சிங்காரித்துக் கொள்ள முடியும்? அதே சமயத்தில் கல்யாணம் செய்து கொண்டு அடக்க ஒடுக்கமாய்ப் பாங்காகக் குடித்தனம் நடத்த வேண்டும் என்ற ஆசை தம் மகளுக்கு இல்லாமல் போய்விடுமா? வெட்கத்தை விட்டு அவளே இப்படிக் கேட்கும்படியாக நாம் வைத்துக் கொண்டோமே?

''என்ன யோசனை? காரில் ஏறிக் கொண்டு மாப்பிள்ளை தேடக் கிளம்புங்கள்'' என்றாள் அவர் மனைவி.

''திடுமென்று என்னை எங்கே போகச் சொல்லுகிறாய்?'' என்று வினவினார் அவர்.

''ஏன்? சற்று முன்னால் இங்கே வந்திருந்தாரே அவர் வீட்டுக்கே வேணுமானாலும் போய்க் கேளுங்கள். எனக்கு ஆட்சேபனை இல்லை. வீட்டிலேயே உட்கார்ந்திருந்தால் மாப்பிள்ளை உங்களைத் தேடி வருவானா?'' என்று காரசாரமாய்ப் படபடத்து விட்டுத் தன் அறைக்குச் சென்றாள் சோபனா.

ஃ ஃ ஃ

திருமணமெல்லாம் ஆன பிறகு ஒரு நாள் சோபனா கிண்டலாகக் கூறினாள்: ''நான் ஏதோ கோபமாகச் சொன்னதை அப்பா உண்மையென்றே நினைத்துக்கொண்டு அன்றைக்கு உங்கள் வீட்டைத் தேடிக்கொண்டு வந்துவிட்டார்!''

''கோபமாகச் சொன்னாயா? அல்லது கோபமாகப் பேசுவது போல் நடித்து அவர் உள்ளத்தில் அந்த எண்ண விதையை ஊன்றினாயா?'' என்று கேட்டான் நாராயணன்.

''நீங்கள் பெரிய டைரக்டராயிற்றே உங்களை ஏமாற்ற முடியுமா?'' என்றாள் சோபனா.

''நான் ஆட்டி வைத்தபடி யெல்லாம் ஆட நீ தயாராக இல்லை என்றாயே அன்றைக்கு?''

''அத்தனை வார்த்தைகளையும் வாபஸ் வாங்கிக்கொள்கிறேன், இன்றைக்கு. போதுமா?''

''நிஜமாகவா?''

''நிச்சயமாக!''




''அப்படியானால் என்னுடைய அடுத்த படத்தின் நாயகியாக நீதான் விளங்க வேண்டும்'' என்றான் நாராயணன்.

சோபனாவுக்குத் தலையைச் சுற்றுவதுபோல் இருந்தது. இருந்தாலும் கணவன் மனம் கோணாமல் நடந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வத்தில் தலையாட்டி வைத்தாள்.

மனைவியாகத் தன்னை வரித்துக் கொண்ட பிறகு சினிமாவில் நடிக்கச் சொல்லித் தன்னை நாராயணன் வற்புறுத்துவார் என்று சோபனா எதிர்பார்க்கவேயில்லை. தன் மாமியார், மாமனாருக்கு அது பிடிக்கப் போவதில்லை; ஷூட்டிங் என்று நினைக்கவே அருவருப்பாயிருந்தது அவளுக்கு. கடவுளே இது என்ன சோதனை? மனம் கசந்துபோன போதிலும் மறு நாள் நாராயணன் குறிப்பிட்டிருந்த நேரத்தில் தயாராக இருந்தாள்.

மாடியில் தன் அறைக்கு அவளை அழைத்துப் போனான் நாராயணன். ''இதோ பார்த்தாயா?'' என்று அவன் சுட்டிக் காட்டிய இடத்தில் ஒரு திரைச் சீலையில் அழகான தாமரைக் குளத்தின் சித்திரம் தீட்டப்பட்டிருந்தது. ஆனால் முற்றுப் பெறாத ஓவியமாகத் தென்பட்டது.

நாராயணன் தொடர்ந்தான்: ''ஓவியத்தில் எனக்குள்ள ஆர்வம்தான் உனக்குத் தெரியுமே? நேற்று இரவு ஒரு மணிக்கு இந்தக் குளத்தை வரைந்து முடித்தேன். இந்தக் குளத்தினருகில் சகுந்தலையின் படம் வரைய வேண்டும். நீதான் சகுந்தலையின் வேஷத்தில் வந்து 'போஸ்' கொடுக்க வேண்டும் எனக்கு! சரிதானா?''

''ஏதோ 'ஷூட்டிங்' என்றீர்களே?'' என்று தயக்கத்துடன் சோபனா கேட்டாள்.

நாராயணன், ''நான் அப்படிச் சொன்னேனா என்ன? என்னுடைய அடுத்த படத்தின் நாயகியாக நீ விளங்க வேண்டும் என்றேன். மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பது போல நீ ஏதேதோ கற்பனை செய்து கொண்டால்?'' என்றான்.

சோபனா செல்லமாக அவன் காதைத் திருகியபடியே, ''உங்கள் சொற்படி கேட்டு நடக்கிறேனா என்று என்னைச் சோதிக்கத்தானே இந்த நாடகம் நடத்தினீர்கள்?'' என்றாள்.

''நீ திரைப்பட டைரக்டரின் மனைவியாயிற்றே. உன்னை இனியும் ஏமாற்ற முடியுமா?'' என்றான் நாராயணன்.






# தக்ஷயக்ஞம்

பல வருஷங்களுக்கு முன்னால் நடந்த ஒரு ரஸமான சம்பவம். படப் பிடிப்புக்காக ஒரு நடிகர் குழு பூனாவுக்குப் புறப்பட்டது. குழுவினர் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வந்து பம்பாய் மெயிலில் ஏறி விட்டனர். குழுவினரை அழைத்துச் செல்லும் பொறுப்பை ஏற்றிருந்த சினிமாக் கம்பெனி மானேஜர் இருவருக்குள் ஏதோ தகராறு வந்து விட்டது. அவர்கள் தகராறைத் தீர்த்துக்கொண்டு ரயிலில் ஏறுவதற்குள் அது புறப்பட்டு விட்டது. நடிகர் குழு வண்டியில் இருந்தது. கம்பெனி மானேஜர்கள் இருவரும் வண்டியில் ஏறவில்லை என்பதை அந்தக் குழுவினர் அறிந்து கொள்வதற்குள் வண்டி வேகமாக ஸ்டேஷனைத் தாண்டி வெகு தூரம் போய் விட்டது. குழுவினர் அனைவரும் குழம்பித் தவித்தனர். அவர்களைச் சேர்ந்த ஒரு வாலிபர் எல்லோருக்கும் தைரியம் சொல்லி அமைதியாயிருக்கும்படி கேட்டுக் கொண்டார். ஒவ்வொருவரிடமும் எவ்வளவு பணம் இருக்கிறது என்று விசாரித்தார். மண் குதிரையை நம்பி நட்டாற்றில் இறங்குவது போல், மானேஜர்களை நம்பி ரயில் ஏறிய அவர்களிடம் என்ன பணம் இருந்து விடப் போகிறது? ஒரு பெண்மணியிடம் ரூபாய் தொண்ணூறு இருந்தது. அதை அந்த வாலிபர் பெற்றுக்கொண்டு, பூனாவுக்குப் போனதும் கம்பெனிக்காரர்களிடமிருந்து வாங்கித் தருவதாகக் கூறினார். ரயிலில் சாப்பாட்டுச் செலவுக்கு அந்தப் பணம் பெரிதும் உதவியாக இருந்தது. பூனாவில் நடிகர் குழுவுக்கு ஏற்பாடு செய்திருந்த பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தனர்.



ராஜா சந்திரசேகர்

அங்கு பாத்திரங்கள் இருந்தன; அடுப்பும் இருந்தது. ஆனால் உணவுப் பொருள்கள் மட்டும் இல்லை! கம்பெனி மானேஜர்கள் இருவரும் தகராறு தீர்ந்து மறுநாள் ரயிலில்தானே வருவார்கள்? அதுவரை உணவு, சிற்றுண்டி முதலியவைகளுக்கு என்ன செய்வது? அந்த வாலிபர் மீண்டும் அந்தப் பெண்மணியை அணுகி நகைகளைக் கொடுக்குமாறு கேட்டார். மானேஜர்கள் வந்ததும் ரயிலில் வாங்கிக் கொண்ட தொண்ணூறு ரூபாய்க்கும் இந்த நகைகளுக்கும் ஏற்பாடு பண்ணி விடுவதாகக் கூறினார். 'மறுபடியும் என்னையே ஏனையா கேட்கிறீர்கள்?' என்று அப் பெண் வினவியதற்கு 'உன்னிடம்தானம்மா எதையும் கேட்கத் தோன்றுகிறது!' என்று கூறி அந்த வாலிபர் நகைகளை வாங்கிக் கொண்டு போய் உணவுப் பொருள்களாக மாற்றிக்கொண்டு வந்தார். எல்லோருக்கும் உணவும், சிற்றுண்டியும் கிடைத்தன. மூன்றாவது நாள் பிலிம் கம்பெனி மானேஜர்கள் இருவரும் பூனா வந்து சேர்ந்தனர். அவர்கள் வந்ததும் அந்த வாலிபர் தாம் பொறுப்பேற்றுக் கொண்டபடி அவர்களிடமிருந்து பணம் வாங்கிக் கொண்டு போய் நகைகளை மீட்டு வந்து அவற்றுடன் தொண்ணூறு ரூபாயையும் சேர்த்து அந்தப் பெண்ணிடம் கொடுத்தார்.

அந்த வாலிபர் யார் தெரியுமா? என். எஸ். கிருஷ்ணன். அந்தப் பெண் மதுரம்தான் என்று சொல்லவும் வேண்டுமா?

அந்தச் சம்பவத்திலிருந்துதான் மதுரம் – கிருஷ்ணன் இருவரும் படத்தில் மட்டும் அல்லாமல் வாழ்க்கையிலும் ஒன்றுபட்டனர்.



சந்திரன் இல்லாத வானம், தாமரையில்லாத தடாகம், நீர் இல்லாத ஏரி, திரைப் படம் ஓடாத தியேட்டர், இவற்றுடன் என். எஸ். கிருஷ்ணன், மதுரம் இல்லாத தமிழ்ப் படத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அந்த நாளிலேயே அவர்கள் இருவரும் 'நகைச் சுவைக்கு நாங்கள் இருக்கிறோம்' என்று ஒவ்வொரு தமிழ்ப்படத்திலும் இன்றியமையாத அம்சமாகி விட்டனர்.

கிருஷ்ணன், மதுரம் இருவருடைய புகழையும் மிகவும் உயர்த்திய படம் ''தக்ஷயக்ஞம்''. சிரித்துச் சிரித்து எல்லோரும் ரசித்தனர். ''மழையில்லாச் சீமையில் மாடுகள் பூட்டி'' என்ற பாட்டும், ''சிவானந்த ரஸம் இதுவே ...கூடி மருந்தரைப்போம்!'' என்ற பாட்டும் மிக மிகப் பிரசித்தமானவை. படத்தின் நகைச்சுவைக் காட்சிகளில் கிருஷ்ணன் மன்மதனாகவும், மதுரம் ரதியாகவும் வந்தனர். பபூன் சங்கரய்யர் வசந்தன். வசந்தனும் மன்மதனும் திருக்கயிலைக்குப் போய்விட்டுத் திரும்பியபோது ரதி ஆண் வேஷம் போட்டுக்கொண்டு அவர்களைத் திகைக்க வைத்த காட்சி தமாஷாயிருந்தது.

எத்தனையோ படங்கள் பார்க்கிறோம். எல்லாமே மனத்தில் பதிந்து விடுவதில்லை. பார்த்ததும் தாமாகவே மறந்துபோய்விடும் படங்கள், கட்டாயம் நாமாகவே மறந்துவிட வேண்டிய படங்கள், என்றுமே மறக்க முடியாத படங்கள் என்று படங்களைப் பிரித்துக் கொள்ளலாம். அப்படிப் பிரித்துக்கொள்வோமானால் மறக்க முடியாத படங்கள் குறைவாகத்தான் இருக்கும். இந்த வரிசையில் நான் சமீப காலத்துப் படங்களைச் சேர்த்துக் கொள்ளவில்லை. சுமார் இருபத்தைந்து ஆண்டுகள் பின்னோக்கிச் சென்று படத்தொழில் ஆரம்ப தசையில் இருந்த போது பல வசதிக் குறைவுகளுக்கு இடையில் தயாரிக்கப்பட்ட படங்களாக நினைத்துக் கொண்டேன். 1937–38ல் கல்கத்தாவில் பி. எல். கெம்காவினால் தயாரிக்கப்பட்ட பழைய ''தக்ஷயக்ஞம்'' என் நினைவுக்கு வந்தது. (ஆம். புதிய தக்ஷயக்ஞம் ஒன்று உண்டு. தேவிகா—மனோகர் நடித்து நான்கு வாரங்கள் ஓடிவிட்டுப் பிறகு ஓடியேவிட்ட படம் அது!)

இந்தப் படத்தில் நடித்த நடிகர்களைத் தெரிந்து கொள்ளலாமா?

காலஞ் சென்ற வி. ஏ. செல்லப்பா சிவபெருமானாகவும், எம். ஜி. நடராஜப் பிள்ளை தக்ஷனாகவும் வந்தனர். சி. எஸ். ரத்தினம் பிள்ளை நாரதர். வி. நடராஜன் பிரம்மதேவர். இன்று புரட்சி நடிகராக விளங்கும் எம். ஜி. ராமச்சந்திரன் என்ன வேடம் ஏற்றார் தெரியுமா? மகாவிஷ்ணு! இது என்ன புரட்சி என்று தோன்றுகிறதல்லவா? என். எஸ். கிருஷ்ணன், மதுரம், பி. ஜி. வெங்கடேசன் ஆகியவர்களும் நடித்திருந்தனர்.

அந்தக் காலத்தில் படத்தைப் பற்றிய விளம்பரங்களிலெல்லாம் 'தமிழ் பேசும், பாடும்' படம் என்று போடுவார்கள். பாடல்களின் எண்ணிக்கையைக் கொண்டுதான் படம் ஓடக் கூடிய நாட்களை எண்ணுவார்கள். 'அறுபத்தெட்டு இனிய கானங்கள்' ' என்று விளம்பரம் செய்வார்கள். ''தக்ஷயக்ஞத்தில்'' மொத்தம் பத்தொன்பது பாடல்கள்! மிகவும் பிரபலமடைந்து எங்கு பார்த்தாலும் ஒலித்த பாட்டு ''பவானி! பவானி!'' என்பதுதான்.

காட்சி நிர்மாணங்களிலும் படம் குறைந்து போய்விடவில்லை. குறிப்பாகக் கூறவேண்டுமானால் கயிலையங்கிரி, தக்ஷயக்ஞம் நடைபெற்ற யாகசாலை இரண்டும் தத்ரூபமாக அமைக்கப்பட்டிருந்தன. சந்திரனுடைய தேவிமார்களான இருபத்தியேழு நட்சத்திரங்களையும் இருபத்தியேழு கன்னிகைகளாகக் காண்பித்ததை அந்த நாள் பட உலகிலேயே ஒரு புரட்சி என்று கூறலாம்.

பழம்பெரும் சினிமா டைரக்டரான ராஜா சந்திரசேகர்தான் ''தக்ஷயக்ஞ''த்தின் டைரக்டர். கலை நுணுக்கங்களைத் திறமையாகக் கையாளுவதில் கைதேர்ந்தவர்.

அந்நாளைய வெற்றிப் படங்கள் பலவற்றை டைரக்ட் செய்தவர் ராஜா சந்திர சேகர். தக்ஷயக்ஞம் இருபத்தைந்து வாரங்கள் சென்னையில் ஓடி 'ரிக்கார்டு' ஏற்படுத்தியதென்றால் 'சிங்கம்' ராஜா சந்திரசேகருக்கே அப்பெருமை சாரும். ஆம்! அவரைக் கண்டதுமே செட்டிலிருக்கும் அனைவரும் 'சிங்கம் வருகிறது' என்றுதான் சொல்வார்கள். இல்லாமலா எழுபத்திமூன்று நாட்களுக்குள் அவரால் தக்ஷயக்ஞம் படத்தைத் தயாரிக்க முடிந்தது? டைரக்டர்களிடம் இத்தனை மதிப்பும் மரியாதையும் மிகுந்திருந்த அந்த நாள் மீண்டும் வருமா?



-விஜயம்

# சில நினைவுகள்

## பாபு ராஜேந்திர பிரசாத்

மாலை வேளையில் எனக்கு முன் நேரத்திலேயே தூக்கம் வந்துவிடும். இதனால் சாய்ந்தாடுவதை மௌல்வி சாஹேப் எங்காவது பார்த்து விட்டு அடிப்பாரோ என்ற அச்சம் எப்போதும் உண்டு. ஓடிக் குதித்து விளையாடுவதில் யமுனாபாயி லீடர். விரைவில் விடுதலை பெறுவதற்கு வழி தேடுவதிலும் அவர்தாம் லீடர்: படிப்பதற்காக எண்ணெய் விளக்கு ஏற்றி வைத்திருக்கும். யமுனாபாயீ பகலிலேயே சாம்பல் அல்லது புழுதியைக் கொஞ்சம் எடுத்துத் துணியில் முடித்துச் சிறு பொட்டணம் செய்து ஒளித்து வைத்துக் கொள்வார். என்றாவது விளக்கில் எண்ணெய் அதிகமாய் இருப்பதாய்த் தோன்றினால், விளக்கைத் தூண்டும் சாக்கில் தான் ஒளித்துவைத்திருந்த பொட்டணத்தை விளக்கில் வைத்து விடுவார். அது எங்கள் கண் முன்னிலையிலேயே எண்ணெயை உறிஞ்சி விடும். விளக்கும் சடுதியில் அணைந்துவிடும். மௌல்வி சாஹேப் வேலைக்காரி எண்ணெயைக் குறைவாக விட்டாள் என்று அவள் மீது கோபம் கொள்வார். இந்த நிர்ப்பந்தத்தால் புத்தகத்தை மூடும்படி கட்டளையை விரைவில் இடுவார்.

### குற்றம் என்ன ?

பியூன் வந்து தலைமை ஆசிரியர் என்னைக் கூப்பிடுகிறார் என்று உபாத்தியாயரிடம் சொன்னான். நான் நடுங்கிக் கொண்டு அவரிடம் சென்றேன். எந்தப் பையன்களின் மேல் குற்றம் சாட்டப்பட்டதோ அவர்களைத்தான் தலைமை ஆசிரியர் சாதாரணமாகக் கூப்பிடுவார். அங்கே போய்ச் சேர்ந்தவுடன் பயம் அகன்றுவிட்டது. ''நீ டபிள் பிரமோஷன் பெற்று ஏழாவதுக்குப் பதிலாக ஆறாவது வகுப்புக்குப் போகிறாயா?'' என்று அவர் கேட்டார். எனக்குக் கொஞ்சம் தலை கிறுகிறுப்பது போல் இருந்தது. ஒரு பக்கம் மகிழ்ச்சி; ஒரு பக்கம் வியப்பு; மேலும் ஒரு முழு ஆண்டின் பாடத்தை எப்படித் தாண்டுவது என்ற கவலையால் அச்சமும் உண்டாயிற்று. ''என் அண்ணனைக் கேட்டுச் சொல்கிறேன்'' என்று கூறினேன். ஒரு வகுப்பைக் கடந்து செல்வதினால் நான் பிற்காலத்தில் படிப்பில் பலம் குன்றிவிடுவேன் என்றும் மேலே சரியாகப் படிக்க முடியாது என்றும் என் அண்ணன் கவலைப்பட்டார். அவர் என்னுடன் தலைமை ஆசிரியரிடம் வந்து தம் கருத்தைத் தெரிவித்தார். தலைமை ஆசிரியர் சிரித்துக் கொண்டு, ''என்னைவிட உனக்கு விஷயங்கள் எல்லாம் அதிகமாகப் புரியுமோ?'' என்றார். ஏழாவது வகுப்பைக் கடத்தி ஆறாவது வகுப்புக்கு என்னை அனுப்பி விட்டார்.

(இவ்விதமாக வகுப்பு முறையைத் தலைகீழாகக் கணக்கிடும் வழக்கம் பீகாரில் இருந்து வந்தது.)

### மாப்பிள்ளை பார்க்க......

என் மாமனார் ஆராவில் ஒரு வக்கீல்; அவருடைய தம்பி ஒருவர் பலியாவில் பிளீடராய் இருந்தார். இரண்டு சகோதரர்களும் ஜீராதேயீக்கு வந்தார்கள். தாயாருடன் உள்ளே இருந்த என்னை அப்பா கூப்பிட்டு அனுப்பினார். அவர்கள் என்னைப் பார்த்தார்கள். சில கேள்விகளும் கேட்டார்கள். பிறகு திருப்தி அடைந்து சென்றார்கள். சில நாட்களுக்குப் பின் திலக் (பெண் வீட்டு வரிசை) வந்தது. அதில் வழக்கத்தை ஒட்டி, துணிமணிகள், பாத்திரங்கள் முதலியனவும் அவற்றைத் தவிர பணமும் வந்தது. என் நினைவுக்கு எட்டிய வரையில் அப்பா பணத்தைப் பற்றி அதிகக் கண்டிப்பாக இருக்கவில்லை. இருந்தாலும் ரொக்கமும் சாமான்களும் சேர்ந்து ஏறக்குறைய இரண்டாயிரத்துக்கு அவர்கள் அனுப்பினார்கள். அப்போது என் வயது பன்னிரண்டுக்குச் சற்று அதிகம். அந்தக் காலத்தில் இரண்டாயிரம் ரூபாய் வரிசை மிகவும் சிறந்த வரிசை என்று கருதப்பட்டது.

### சித்திரமும் கைப்பழக்கம் !

பல்கலைக் கழகத்துப் பரீட்சைக்குமுன் பள்ளிக்கூடத்துப் பரீட்சை என்று நடக்கும். நான் இந்தப் பரீட்சையில் நிறைய மார்க்குப் பெற்று எல்லாருக்கும் தலைமையாய் வந்தேன். பல்கலைக் கழகப் பரீட்சை எழுதுவதற்கும் அனுமதி கிடைத்தது. ஆனால் சித்திரப் பாட உபாத்தியாயர் மட்டும் பல்கலைக் கழகப் பரீட்சையில் சித்திரப் பரீட்சையில் கலந்துகொள்ள அனுமதி அளிக்க மறுத்து

விட்டார். மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொண்டபின் அந்த ஆசிரியர் ஒரு நிபந்தனை போட்டு அநுமதி கொடுத்தார். அதாவது, அன்றிலிருந்து பரீட்சை நாள் வரையில் நான் குறைந்தது ஒரு மணி நேரமாவது தினந்தோறும் சித்திரம் வரைய வேண்டும் என்பதுதான்!

## பரீட்சையில் தேறினால் அபராதம்!

எப். ஏ. பரீட்சை எழுதுவதற்கு முன் ஒரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. அநேகமாக ஒவ்வொரு பாடத்திலும் நான் நிறைய மார்க்குகள் பெற்றிருந்தேன். ஆயினும் கல்லூரிப் பரீட்சையின் முடிவு அறிவிக்கப்பட்ட போது பல்கலைக் கழகத்துப் பரீட்சைக்குப் போவதற்கு எனக்கு அநுமதி அளிக்கப்பட வில்லை என்று கூறப்பட்டது. அப்போது கல்லூரிக்கு ஓர் ஆங்கில பிரின்ஸிபல் வந்து விட்டார். பரீட்சையின் முடிவைச் சொல்வதற்குத் தாமே வந்தார். அவர் ஒவ்வொரு பெயராகக் கூப்பிட்டு வந்தார். என் பெயரை மட்டும் கூப்பிட வில்லை. பெயர்ப் பட்டியலில் என் பெயர் தவறாக விடுபட்டுப் போய்விட்டது. என் பெயர் சொல்லப் படாததைக் கண்டு எல்லாருக்கும் வியப்பு உண்டாயிற்று. நான் மிகவும் பயந்து போனேன். என் பெயரைப் படிக்கவில்லையே என்று கேட்டேன். பிரின்சிபல் எப். ஏ.க்குப் பாடம் கற்பித்ததில்லை. ஆகையால் எந்தப் பையனையும் அவருக்குத் தெரியாது. நான் கேட்டவுடன் ''நீ தேறவில்லை. ஆகையால்தான் உன் பெயர் வரவில்லை'' என்று சட்டென்று விடையளித்தார். ''அப்படியிருக்க முடியாது. நான் தேறியிருப்பேன்!'' என்றேன். ''அப்படி யிருக்க முடியாது. நீ தேறி யிருந்தால் கட்டாயம் உன் பெயர் இங்கு இருக்கும்'' என்று விடை அவரிட மிருந்து கிடைத்தது. நான் மேலும் ஏதோ கூற விரும்பினேன். அவர் கோபித்துக் கொண்டு, ''வாயை மூடு! இல்லா விட்டால் அபராதம் போடுவேன்'' என்றார். நான் மீண்டும் தைரியமாக ஏதோ சொல்ல விரும்பினேன். ''உனக்கு ஐந்து ரூபாய் அபராதம் போட்டிருக்கிறேன்'' என்று கூறினார். மறுபடியும் ஏதோ சொன்னேன். ''ரூபாய் பத்து அபராதம்'' என்று கூறினார். இப்படியாக ஐந்து ஐந்து ரூபாயாகப் பெருகி ஏலம் கூறுவது போல இருபது அல்லது இருபத்தைந்துக்கு எட்டி விட்டது! இதற்குள் என்னை நன்றாகத் தெரிந்த கல்லூரிக் குமாஸ்தா அவருக்குப் பின்னால் இருந்து கொண்டு 'பேசாமல் இரு! எல்லாம் சரியாகி விடும்' என்று சைகை காட்டினார். நான் அடங்கி விட்டேன். பரீட்சைக்கு எழுதிக் கொடுக்கவேண்டிய விண்ணப்பம் முதலியவற்றை அடுத்த நாள் எழுதிக் கொடுத்து விட்டேன். யாரும் ஒன்றும் கேட்கவில்லை. அந்தக் குமாஸ்தா பிழையைத் திருத்தி விட்டார்.

## கணிதப் பேதை!

பி. ஏ.வில் சேர்ந்த பிறகு டாக்டர் பி. சி. ராயைப் பார்த்தேன். ''நீ ஏன் விஞ்ஞானத்தில் சேரவில்லை?'' என்று கேட்டார். 'கணிதத்தில் பலவீனம்' என்று விடையளித்தேன். ''என்னை ஏன் கேட்கவில்லை? எனக்கும்தான் கணிதம் குறைவாகத் தெரியும். அதற்காக நான் விஞ்ஞானத்தைக் கண்டு ஓடவில்லையே ?'' என்றார். அவருக்கு வருத்தமாயிருந்தது. ஆனால் காலம் கடந்து விட்டதால் மாற்றுவது கடினமாயிருந்தது.

## கோகலே சந்திப்பு

பாரிஸ்டர் ஸ்ரீ பரமேசுவரலால் என்னைப் பார்த்து, ''நீயும் ஸ்ரீ கிருஷ்ணனும் சென்று ஹானரபிள் கோகலேயைப் பாருங்கள். அவர் உங்கள் இருவரையும் வரச் சொன்னார்'' என்று கூறினார். நாங்கள் மேன்மை பொருந்திய ஸ்ரீ கோகலேயை அவர் தங்கியிருந்த இடத்துக்குச் சென்று சந்தித்தோம். அவர் சிறிது காலத்துக்கு முன்புதான் சர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டியை ஆரம்பித்திருந்தார். பீகாரின் சிறந்த இளைஞர்கள் சிலர் அதில் சேர வேண்டுமென விரும்பினார்.

''உங்கள் வக்கீல் தொழில் பெரிதாக விருத்தி யடையலாம். மிகவும் உல்லாசமாகவும் சர்வ சம்பத்துடனும் வாழலாம். ஆனால் சில இளைஞரின் மீது நாட்டுக்கும் உரிமை உண்டு. நீங்கள்





படிப்பில் திறமைசாலிகளாக இருப்பதால் உங்கள்மேல் அதிக உரிமை உண்டு'' என்று அவர் கூறினர். நாங்கள் இருவரும் அவர் கூறியதைப் பற்றிச் சிந்திக்கலானோம். எனக்குப் பல நாட்கள் வரை தூக்கம் வரவில்லை. சாப்பாடு கீப்பாடு எல்லாம் பேருக்கு மட்டும்தான் என்ற அளவுக்கு ஒடுங்கிவிட்டன.

## காந்திஜி தரிசனம்

கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் குழுவின் கூட்டத்துக்கு நானும் சென்றிருந்தேன். தற்செயலாக நான் காந்திஜிக்குப் பக்கத்திலேயே ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். வலியச் சென்று எவருடனும் பழக்கப்படுத்திக் கொள்வது எனக்கு எப்போதுமே பிடிக்காது. ஆகையால் நான் காந்திஜியுடன் ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை. குழுவின் வேலை முடிந்தவுடன் காந்திஜி வெளியே வந்தார். ராஜ்குமார் சுக்லா அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அன்றிரவே அவர் ராஜ்குமார் சுக்லாவுடன் பட்னுவுக்கு நேரே சென்று விட்டார். நான் பீகாரில் இருப்பவன் என்பதும் ராஜ்குமார் சுக்லா அவரைப் பட்னுவில் என் வீட்டுக்குத்தான் அழைத்துப் போகப் போகிறர் என்பதும் காந்திஜிக்குத் தெரியாது. ஆகையால் அவரும் என்னுடன் ஒன்றும் பேச வில்லை. நான் கல்கத்தாவிலிருந்து ஜகந்நாத் பூரிக்குப் போய் விட்டேன். என் வீட்டில் ஒரு வேலைக்காரனைத் தவிர வேறு யாருமில்லை. வேலைக்காரன் யாரோ ஒரு கிராமத்துக் கட்சிக்காரர் வந்திருக்கிறர் என்று இவரை நினைத்துக் கொண்டான். ஆகையால் அவன் அவரை வெளியே உள்ள ஓர் அறையில் உட்கார்த்தி வைத்து விட்டுச் சிறிதளவு அசட்டை செய்வது போலவும் நடந்து கொண்டான். இதற்குள் மஜஹறுல் ஹக்குக்குச் செய்தி எட்டியது. அவர் வந்து காந்திஜியைத் தம் வீட்டுக்கு அழைத்துப் போனர்.

## தில்லி காங்கிரஸ்



தில்லி காங்கிரஸில் ஒரு மிக வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது. நாங்கள் அங்கு போய்ச் சேர்ந்தோம். ஸ்டேஷனில் தொண்டர்களைக் கண்டோம். ஆனல் அவர்களில் எவரும் பீகாரின் பிரதிநிதிகள் தங்குவதற்கு இடம் எது என்று சொல்ல முடியவில்லை. ''நீங்கள் பட்டௌடி ஹவுசுக்குப் போங்கள்'' என்று அவர்களுடைய தலைவர் கூறினர். நாங்கள் அங்கு போய்ச் சேர்ந்தோம். முதல் மாடியில் ஒரு நல்ல அறை இருந்தது. அதைப் பிடித்துக் கொண்டோம். சிறிது நேரம் கழித்து வரவேற்புக் குழுவின் துரை ஒருவர் வந்தார். எங்களை வீட்டை ஒழிக்கும்படி உத்தரவிட்டார். வேறு இடம் கிடைக்காத வரையில் அங்கிருந்து நகரக்கூடாது என்று நாங்களும் உறுதி செய்துவிட்டோம். அவருடைய சொல்லைக் கேட்காவிட்டால் வரவேற்புக் குழுவின் சமையற்கூடத்தில் உணவுக்கு ஏற்பாடு செய்ய முடியாது என்று எச்சரிக்கை செய்தார். இந்த மிரட்டல் எங்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. வரவேற்புக் குழுவில் ஒரு நாளைக்கு ஏறக்குறைய இரண்டு ரூபாய் கொடுக்க வேண்டும். ஆகையால் நாங்கள் உடனே சில பாத்திரங்கள் வாங்கி வந்து செங்கல்லால் அடுப்பு அமைத்து வெண் பொங்கல் சமைத்து விட்டோம். அதற்குச் செலவு நான்கைந்து அணுவுக்கு மேல் ஆகவில்லை. மிகவும் கெடுபிடி செய்யப்பட்டது. ஆனல் தனி அடுப்பு வைத்தபின் யார்தாம் நகருவார்கள்?



## பிரார்த்தனையின் பலன்

இனி காத்திருப்பது அபாயமாகும் என்று டாக்டர் அன்சாரி முடிவு செய்தார். இதை அவர் மகாத்மாவிடம் கூறினர். உபவாசத்தை உடனே விட்டுவிட வேண்டும் என்றும் எச்சரிக்கை செய்தார். சில மணி நேரத்தில் காந்திஜி நினைவு இழந்து விடக் கூடும் என்று அஞ்சினர். காந்திஜி டாக்டர் அன்சாரியைப் பார்த்து ''நீங்கள் எல்லாவற்றையும் கணக்குப் போட்டு விட்டீர்கள். ஆனல் பிரார்த்தனையின் பலனைக் கணக்குப் போடவில்லையே! இன்றுமட்டும் என்னைச் சும்மா விட்டு விடுங்கள்'' என்றர். டாக்டர் சாஹேப் ஒப்புக் கொண்டார். அடுத்த நாள் சிறுநீரைப் பரிசோதித்துப் பார்த்து விட்டு, ''இனி அஸிடோன் அபாயம்

இல்லை'' என்று கூறிவிட்டுக் காந்திஜிக்கு உணவளிக்க வேண்டும் என்று வற்புறுத்துவதை விட்டுவிட்டார்.



### லண்டன் வக்கீல்கள்

நான் மற்றொரு விஷயத்தையும் கவனித்தேன். அது நம் நாட்டாரால் பின்பற்றத் தக்கதாகும். நாம் கோர்ட்டுக்கு வந்ததிலிருந்து வீட்டுக்குத் திரும்பும் வரையில் நாம் வாதாட வேண்டிய வழக்கில் கழிந்த நேரம் போக எஞ்சிய பொழுதை வீணாகவே கழிக்கிறோம் என்பதை நான் வக்கீல் தொழில் புரிந்துவந்த காலத்தில் கண்டிருக்கிறேன். தம்முடைய வழக்குகள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப் படாத போது வக்கீல்கள் வெறும் அரட்டை அடித்துப் பொழுதை வீணாகக் கழிக்கிறார்கள். நம்முடைய வழக்குகளை வீட்டிலேயே தயார் செய்து கொண்டு வருகிறோம். இங்கிலாந்திலோ பாரிஸ்டர்கள் தம் வேலை முழுவதையும் நூல் நிலையத்திலோ தமது சேம்பரிலோதான் செய்து முடிக்கிறார்கள். வீட்டுக்கு வழக்கின் காகிதங்களை எடுத்துச் செல்வதே கிடையாது. அவர்களுடைய கொள்கை என்னவென்றால் வீடு நமது இல்லம்; அங்கே குழந்தை குட்டிகளோடு உறவாடுதல், உல்லாசமாகப் பொழுது போக்குதல், விரும்பிய புத்தகங்களைப் படித்தல் இவைதான் செய்ய வேண்டும் என்பதுதான்.

### தடி சுழற்றும் தந்திரம்

பீகார் மாகாணத்தில் கடற்கரை இல்லை. ஆயினும் எல்லா இடங்களிலும் ஏதாவது உப்பு மண் கிடைத்து வந்தது. அதைச் சேகரித்துத் தண்ணீரில் வடிகட்டி அந்நீரைப் பானையில் காய்ச்சிச் சுண்ட வைத்து அதைக் காய வைத்தால் உப்பு போன்ற பண்டம் கிடைக்கும். நான் எவ்விடத்திலும் உப்பு தயார் செய்யவில்லை. ஆனால் சென்ற இடங்களில் தயார் செய்த உப்பைச் சபைகளில் ஏலம் போடுவேன். எங்கெங்கு மக்கள் கூடி உப்பு செய்தார்களோ அங்கு போலீசார் வருவார்கள். பானையையும் அடுப்பையும் உடைத்தெறிந்து விட்டு ஓரிருவரைக் கைது செய்து கொண்டு மற்றவர்களைத் தடியால் புடைத்து விட்டுப் போய் விடுவார்கள்.



எல்லாவற்றையும்விட வேடிக்கையான விஷயம் ஒன்று நடந்தது. போலீஸ்காரர்களுள் இரண்டு கட்சிகள் உண்டாகி விட்டன. சிலர் தடிகளை உபயோகிப்பது சரியல்ல என்று நினைத்து மிகவும் தந்திரமாகத் தடிகளைச் சுழற்றி வந்தார்கள். ஒரு போலீஸ் அதிகாரி இரவில் என்னை வந்து சந்தித்தார். கண்களில் நீர் சொரிய அவர் என் பாதத்தைப் பற்றிக் கொண்டார். அவர் அந்த ஜில்லாவிலேயே இருந்து வந்தும்கூட நான் தடியால் அடிக்கப்பட்டேனே என்றும் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லையே என்றும் வருந்திக் கூறினார்.

### கறுப்புக் கொடியும் சிரிப்பு ஒலியும்

மதராஸ் மாகாணத்தில் பிராமணரல்லாதார் கட்சி என்று ஒன்று நிறுவப்பட்டிருந்தது. அது தன்னைச் சுயமரியாதைக் கட்சி என்று சொல்லிக் கொண்டது. எனக்கு வரவேற்பு நடந்த போது சில இடங்களில் அக்கட்சிக்காரர்கள் கறுப்புக் கொடியைத் தூக்கிக் கொண்டு ''திரும்பிப் போ!'' என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். நான் சிரித்துக் கொண்டே கூட்டத்தைப் பார்த்து, ''எத்தனை பேர் நான் போகக் கூடாதென்று விரும்புகிறார்கள்?'' என்று கேட்டேன். நான் அதன் மேல் என் பேச்சை இவ்வண்ணமாய்த் தொடங்கினேன்: ''இதோ இத்தனை நிறைய பேர்கள் நான் போகக் கூடாதென்று விரும்புகிறார்கள். இவ்வளவு குறைந்த பேர்கள் போக வேண்டு மென்கிறார்கள். இந்த நிலைமையில் நான் என்ன செய்வது?'' என்று கேட்டேன். நான் கேள்வியைக் கேட்டதுமே கூட்டம் முழுவதிலும் சிரிப்பு எழுந்தது. எல்லாரும் இப்படிச் சிரிப்பதைப் பார்த்துப் போகச் சொன்னவர்களுக்கும் தங்கள் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவர்களும் கூடச் சேர்ந்து சிரிக்கலானார்கள். அதற்குப் பின் கூட்டம் அமைதியுடன் நடந்தது.





# கோவை மகாநாடு

— விசேஷ நிருபர்

"மலர்ந்த முகத்தோடு வரி கட்டுங்கள்" என்று இரண்டாம் தேதியன்று ஜலந்தரில் திரு மொரார்ஜி தேசாய் பேசியிருக்கிறார். மக்கள் எந்த அளவுக்கு மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள் என்பதைக் காணத் திரு தேசாய் மூன்றும் தேதியன்று கோவை மாநகருக்கு வந்திருக்க வேண்டும்.

'எல்லா ரஸ்தாக்களும் ரோமாபுரி நோக்கிச் சென்றன' என்று சொல்வார்கள். மூன்றும் தேதி ஞாயிறு காலை கோவை நோக்கி வந்த எல்லா ரயில்களிலும் பஸ்களிலும் வந்திறங்கிய மக்கள் வி.எஸ்.டபிள்யூ மில் கல்யாண மண்டபத்தை நோக்கித்தான் வந்தார்கள். கோவை மாவட்ட சுதந்திரக் கட்சி நடத்திய விவசாயி — வர்த்தகர்கள் மகாநாடுதான் இதற்குக் காரணம். திரு லோபோ பிரபு தலைமையில் மகாநாடு காலை 9—30 மணிக்குச் சிறப்பாகக் கூடியது. திரு சுந்தரம் வந்திருந்தோர் அனைவரையும் வரவேற்பதற்கு முன்பு, தேசத்துக்குப் பேரிடி போல் வந்திருக்கும் ராஜன் பாபு மரணச் செய்தியை அறிவித்து நெஞ்சுருகப் பேசித் துக்கத் தீர்மானம் ஒன்று பிரேரித்தார். சபையின் அக்ர புருஷராக அமர்ந்திருந்த ராஜாஜி அவர்களும் எழுந்து நின்று ராஜன் பாபுவுக்குத் தம் மரியாதையைச் செலுத்தினார்கள். அந்த இரண்டு நிமிடமும் சபையில் நிலவிய அமைதி அனைவருடைய உள்ளமும் கலங்கியதை எடுத்துக் காட்டியது.

பின்னர் வரவேற்புரை நிகழ்த்திய திரு ஜி. கே. சுந்தரம் அவர்கள் அற்புதமாகச் சில உண்மைகளை எடுத்துக் காட்டினார். "திறமைக்கும் சிக்கனத்துக்கும் முன்பு பாராட்டு இருந்தது. இன்றோ, திறமைசாலியும் சிக்கனக்காரனும் கண்டனத்துக்கு உள்ளாகிறார்கள். கண்டனம் அமித லாப வரியாக வந்திருக்கிறது. இந்த வரி, திறமையாக நடக்கும் கம்பெனிகளையும் சிக்கனமாக நடக்கும் தொழில் நிலையங்களையும் இடிப் பொடித்துவிடும். அதே சமயம் ஊதாரித்தனமாகச் செலவு செய்யத் தூண்டும். எப்படி ஆட்சிமுறை நடக்கிறதெனப் பாருங்கள்'!" என்று திரு சுந்தரம் கூறியபோது சபையின் முதல் கரகோஷம் எழுந்தது.

அவர் பேச்சை முடிக்கும்போது கேட்டார்: "சர்க்காரின் கொள்கைகள் மாற நாம் கோர வேண்டும். மாற்ற முடியாதென அவர்கள் கூறுவார்களானால், சர்க்காரே மாற வேண்டுமென்று நமது ஜீவாதார உரிமைப்படி கேட்டாக வேண்டும்."

மகாநாட்டுக் கொட்டகையே அதிரும்படி கைத்தட்டல் எழுந்தது. பேச்சை உன்னிப்பாகக் கவனித்து வந்த ராஜாஜியும் கரகோஷம் செய்தார்.

கொடியேற்று விழாவும், அதை நடத்திய திரு மாரிசாமி அவர்களின் பேச்சும் முடிந்த பிறகு கம்பன் புகழ் பாடும் திரு சா. கணேசன் மகாநாட்டைத் தொடங்கி வைத்தார்.

"நிலத்தை முன்பு பிரித்தார்கள். கூடாது என்றோம் கேட்கவில்லை. சரி, நிலம் பிரிந்தாலும் நாட்டை விட்டுப் போகாது என்றிருந்தோம். இன்றோ 'எடு தங்கத்தை' என்கிறார்கள். எடுத்துக் கொடுக்கப் போகும் தங்கம் என்ன ஆகப் போகிறது தெரியுமா? நாட்டை விட்டே ஓடப்போகிறது. அதுவும் கப்பலிலோ' ரயிலிலோ அல்ல. விமானத்தில் ஏறி வேகமாக ஓடப் போகிறது. பிறகு நாட்டிலே என்ன இருக்கும்? முன்பு வறுமை இருந்தது என்றால் இனி வெறுமைதான் இருக்கும்" என்று தமக்கே இயல்பான இலக்கிய மெருகுடன் பேசினார். சமீபத்தில் வந்திருக்கும் நஞ்சை—புஞ்சை நிலவரி உயர்வுகளையும் கடுமையாகத் தாக்கினார்.

திரு லோபோ பிரபுவைத் தமிழ் நாட்டார் அனைவரும் அறிவார்கள். "அக்கிரமத்துக்குத் தலை வணங்கா கலெக்டர்" அவர் என்பதைச் செங்கற்பட்டு, நீலகிரி மாவட்ட மக்கள் இன்றும் கூறுவார்கள். உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற திரு லோபோ இன்று சுதந்திரக் கட்சியில் வட்டியும் முதலுமாகச் சேர்த்து எறும்பை விடச் சுறுசுறுப்பாக உழைத்து வருகிறார்.

தலைமை உரையை நிகழ்த்திய திரு லோபோ பிரபுவின் பேச்சு பொருளாதாரப் பிரியர்களுக்கு ஒரு பொங்கல் விழாவாகும். வெள்ளையர்கள் காலத்திலிருந்து சர்க்காரின் வருமானம் எப்படி வளர்பிறையாக இருந்து வருகிறது என்பதைப் புள்ளி விவரங்களோடு எடுத்துக் காட்டி அதே சமயம் மக்களின் "க்ஷேம நலம்" எப்படித் தேய்பிறையாக ஆகி இன்று அமாவாசை இருட்டாகியிருக்கிறது என்ற விவரங்களை அற்புதமாக எடுத்துக்காட்டினார்.



சிறுமிக்குக் கையெழுத்துப் போட்டு ஆசி பகர்கிறார்

''1951-ல் இருந்த சர்க்கார் வருமானம் இன்று ஆறரை மடங்கு பெருகியிருக்கிறது. மக்களின் வருமானம் அப்படிப் பெருகியிருக்கிறதா என்பதை நீங்களே கூறுங்கள். வேண்டுமானால் அதிகார பீடத்தினருக்கும் அவர்களுக்கு வேண்டியவர்களுக்கும்....''

திரு லோபோ பிரபு வாக்கியத்தை முடிக்கும் முன்னரே சபையினர் 'ஆம், ஆம்' என்ற விதத்தில் கரகோஷம் செய்தனர்.

''பெட்ரோலுக்கு வரி என்றால் ஏழைகளுக்கு என்ன? மோட்டார் வைத்திருக்கிற பணக்காரன்தானே பாதிக்கப்படுவான் என்று கேட்கிறார்கள். நாமும் அதை நம்புகிறோம். ஆனால் அது உண்மையா?

''லாரிகளில் சாமான்கள் வருகின்றன. லாரி தண்ணீரிலே ஓடாது. பெட்ரோல் டீஸல் தேவை. இதற்குக் கட்டணம் உயருகிறது. உயருகிற கட்டணத்தை லாரிக்காரர் என்ன செய்வார்? சரக்குக் கட்டணத்தை உயர்த்துவதன் மூலம் சமாளிப்பார். அனுப்புகிற செலவு அதிகமாகி விட்டதே என்று வியாபாரி விலையைக் கூட்டுவார். விலை கூடினால் யாரைப் பாதிக்கும்?....''

திரு லோபோவின் வாதங்கள் இப்படியாக ஒன்றன் பின் ஒன்றாக வந்துகொண்டே இருந்தன. ராஜாஜியின் கரகோஷம் திரு லோபோ பிரபுவுக்கும் கிடைத்தது.

நில உச்ச வரம்பு, விவசாயிகள் படக்கூடிய இதர கஷ்டங்கள், தண்ணீர்த் தீர்வை அதிகரிப்பு, மின்சார வசதி போன்ற காரியங்களையெல்லாம் விளக்கித் திரு ரா. கிருஷ்ணசாமி கவுண்டர் — மாவட்டச் செயலாளர்— ஒரு தீர்மானத்தைப் பிரேரித்து, விரிவான உரை ஆற்றினார். சர்க்காரின் அறியாத்தனங்களை அவர் எடுத்துக் கூறிய விதமும் விவரங்களும் சிறப்பாக இருந்தன. நோயால் பலவீனப்பட்டிருந்தாலும் உணர்ச்சியால் உந்தப்பட்டுக் கோவை திரு அ. அய்யாமுத்து இத்தீர்மானத்தை ஆதரித்தார். அதே போல் வர்த்தகர்கள் படக்கூடிய துன்பங்களையுட் தங்கக் கட்டுப்பாடு உத்தரவுகள் நடத்தியிருக்கும் திருவிளையாடல்களையும் தெளிவுற விளக்கித் திரு எஸ். வெங்கட்ராம் பிற்பகலில் ஒரு தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றினார். நியாயமான இந்த தீர்மானங்களை மிகச் சுருக்கமாகவும் அழுத்தமாகவும் விளக்கிப் பேசிய திரு வெங்கட்ராமும், சர்க்காரின் சிறுபிள்ளைத்தனங்களைப் 'புட்டுப் புட்டுக்' காட்டினார்.

பிற்பகல் நிகழ்ச்சி 'எரிபொறி — நெரிபொறி' என்பார்களே அப்படி இருந்தது. கல்யாண மண்டபத்தின் முன் பகுதி முழுவதும் நிற்க இடம் இல்லை. பிரம்மாண்டமான கூட்டம். தாய்மார்கள் பெரும் எண்ணிக்கையில் வந்திருந்தனர். காங்கிரஸ் அன்பர்கள் ஓரிருவரும் பிரசன்னமாயிருந்தனர்.

அகில இந்திய சுதந்திரக் கட்சிப் பொதுச் செயலாளர் திரு எம். ஆர். மசானி தம் பேச்சை பட்ஜெட் விமர்சனத்தோடு ஆரம்பித்தார்.

''இந்த பட்ஜெட் ஜனவிரோதி பட்ஜெட்; இந்த வரவு செலவுத் திட்டத்தை மக்கள்மீது சர்க்கார் தொடுத்திருக்கிற போர் என்று தான் கூறவேண்டும்.

''புது வரிகளால் ஏற்கனவே ஆகாய அளவுக்கு உயர்ந்திருக்கும் அகப் பொருள்கள், அன்றாடத் தேவைக்கான சாமான்கள், துணிமணிகள் எல்லாமே இன்று வான்முகட்டுக்கே போய்விடும்.

''இதே நேரத்தில் அமிதலாப வரியால் ஒரு புதுத் தொழில்கூடக் கிளம்பாது. வேலையில்லாத் திண்டாட்டமும் பட்டினியும் பசியும் தலைவிரித்தாடும்.

''சண்டைக்காக வரி என்கிறார்கள். இந்தக் கதையையும் நாம் பார்க்க வேண்டும். பாதுகாப்புக்கென இன்று கூடுதலாக 332 கோடி ரூபாய் வரி போடப்பட்டிருக்கிறது. இதில் 166 கோடி ரூபாய் துப்பாக்கி பீரங்கி முதலியவை வாங்கவாம். பிரிட்டனும் அமெரிக்காவும் இந்த ஆயுதங்களை நமக்கு இனாமாகத் தருவதாகக் கூறும்போது நாம் ஏன் விலை கொடுத்து வெளியே வாங்க வேண்டும்? ஆகவே அர்த்தமற்றுப் போன நமது அயல் நாட்டுக் கொள்கையை மாற்றினால் இந்த 166 கோடி ரூபாய் மிச்சமாகும். வரிகளும் அவசியமில்லை. பாக்கியுள்ள 166 கோடி ரூபாய் சிப்பாய்களின் பராமரிப்புக்காகத் தேவை யென்கிறார்கள். இதற்காகப் புதிய வரி போடவேண்டிய அவசியமே இல்லை. இப்படியிருந்தும் 'வரி போடுவேன்' என்றால் அது அவர்களின் கொடூரத் தன்மையைத் தான் காட்டுவதாகும்.....''

திரு மசானியின் பட்ஜெட் விமரிசனம் மிகப் பிரமாதமாக அமைந்திருந்தது. சர்க்காரின் வழுவழுப்பான கொள்கைகளை அற்புதமாக அலசிக் காட்டி விட்டு நேருவின் பஞ்சசீலத்துக்கு வந்தார்.

''காவலுக்காக நாம் கட்டி வளர்த்த நாய்க்குப் பைத்தியம் பிடித்து விட்டால்

என்ன பண்ணுவீர்கள்?'' என்ற கேள்வியோடு ராஜாஜி பேச்சைத் தொடங்கினார்.

''பாதுகாப்புக்கு இருக்கிறதுதான் ஆட்சி. ஆனால் அது பாதுகாப்புச் செய்கிறதா அல்லது பாதகம் செய்கிறதா என்றுபாருங்கள். இந்த வரிகள் அனாவசியமானவை, அவசியமே இல்லாதவை, மக்களை வருத்தக்கூடியவை என்பதை யாரும் மறுக்க முடியாது. இப்படி ஒரு பட்ஜெட்டைக் கொண்டு வந்திருக்கும் சர்க்காருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றுதானே அர்த்தம்?''



சுதந்திரக் கட்சித் தொண்டர்களும் திருவாளர்கள் மசானி, லோபோ பிரபு, ஜீ.கே. சுந்தரம் ஆகியோரும்

எல்லோரும் செய்த பட்ஜெட் விமர்சனத்துக்குச் சிகரம் வைத்தது போலிருந்தது ராஜாஜியின் பேச்சு. நடுநிலைமைக் கொள்கைக்கு ஒரு சின்ன உதாரணம் தந்தார் ராஜாஜி.

''மேல் வீடு கட்ட வேண்டுமெனத் திட்டம். சரியான திட்டம்தான். பக்கத்து வீட்டுக்காரர் இனமாகச் செங்கல் தருவதாகக் கூறுகிறார். வாங்கிக் கட்டிக் கொள்ளலாம். ஆனால் நேருஜி என்ன சொல்லுகிறார் — 'அப்படி வாங்குவது அவமானம். அதற்கு ஒரு நூதன வழியில் ஏற்பாடு செய்ய வேண்டும்' என்கிறார். என்ன ஏற்பாடு என்றால், 'மேல் மாடி கட்டக் கீழ் மாடியை இடித்து அதில் கிடைக்கும் செங்கலைக் கொண்டு மேல் மாடியைக் கட்டுவது' என்கிறார்.

தாய்மார்களும் மற்றவர்களும் சிரித்த சிரிப்பு ஓயச் சிறிது நேரம் பிடித்தது.

மேற்கொண்டு இரண்டு நிமிடங்கள்வரை பேச முடியவில்லை ராஜாஜியால். காரணம் அப்போது எழுந்த கரகோஷம் நின்றால்தானே பேசுவார்!

''இந்த வரியைப் பாருங்கள்! இதென்ன பட்ஜெட்டா அல்லது மஞ்சள் கடுதாசியா? மஞ்சள் கடுதாசி என்றால் மக்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். மேற்கொண்ட காரியத்தை இனிமேல் தொடர்ந்து நடத்த முடியாது என்று தெரிந்தவுடனேயே தனது இயலாமையை அறிவித்து ''பாப்பர்'' எனக் கூறி மனுப் போடுவான். அதற்குப் பெயர்தான் 'மஞ்சள் கடுதாசி'. இப்போது மொரார்ஜி அந்த மாதிரி கடுதாசியை நீட்டியிருக்கிறார்.

''தங்கக் கட்டுப்பாடு சட்டத்தின் காரணமாகப் பாதிக்கப்பட்டவர்கள் வேலை கேட்கிறார்கள். இதற்கு என்ன பதில் தருகிறார்கள்? எல்லோருக்கும் வேலை கொடுக்க எங்களிடம் வசதியா இருக்கிறது என்று எரிந்து விழுகிறார்கள். வசதி இல்லை என்றால் ஏன் தொழிலைப் பறிக்கிறார்கள்? இப்படிப் பேசுகிறவர்களைப் பதவியிலிருந்து கீழே இறக்கியாக வேண்டும். கேரளாவில் இவர்கள் செய்யவில்லையா? ஆகாத சர்க்கார் - கம்யூனிஸ்ட் அரசாங்கம் வந்தது என்றதும் எல்லாக் கட்சிகளையும் சேர்த்துக் கொண்டு அந்த ஆட்சியை விரட்டவில்லையா? அப்படித்தான் இவர்களையும் விரட்ட வேண்டும்...''

ராஜாஜியின் உரையில் வழக்கத்துக்கு மாறாகச் சிறிது ஆவேசம் இருந்தது. குழுமியிருந்த கூட்டத்தினரின் துயரம் மிகுந்த தோற்றத்தையும் முன்னால் பேசியவர்கள், வந்திருக்கும் வரிகளின் அக்கிரமத்தையும் எடுத்துக் கூறியதையும் கேட்ட ராஜாஜி

மகாநாட்டின் ஒரு தோற்றம்



அவர்கள் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்கள் என்றுதான் கூறவேண்டும்.

''வீதிக்கு வீதி கண்டனக் குரல் எழ வேண்டும். சர்க்கார் செவிட்டுக் காதைத் திருப்பினாலும் நாம் ஓயக் கூடாது. எதிர்க் கட்சிகளெல்லாம் தைரியமாகப் பேசவேண்டும். சில்லறை மனப் பூசல்களை விட்டு ஒன்றுபடவேண்டும். அப்போதுதான் வரிக்கு வரியாகப் போடும் இந்த ஆட்சிக்குப் புத்தி வரும்'' என்று ராஜாஜி முடித்தார்.

திரு நாயக் அவர்கள் நன்றி கூறத் தேசிய கீதத்தோடு மகாநாடு இனிது முடிந்தது.

ஒரு நாள் மகாநாடு என்றாலும் சமீப காலத்திய எல்லா மகாநாடுகளையும் மிஞ்சக் கூடிய தன்மையில் கோவை சுதந்திரக் கட்சி வீரர்கள் இம் மகாநாட்டை ஏற்பாடு செய்திருந்தார்கள். திருநெல்வேலி, மதுரை, திருச்சி, சேலம், நீலகிரி, சென்னை முதலிய மாவட்டங்களிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகளெல்லாம் 'கோவையை நாமும் பின்பற்றவேண்டும்' என்ற உறுதியோடு செல்லும்படி ஏற்பாடுகள் இருந்தன.

இப்படியாக மகாநாட்டு வெற்றிகளோடு சென்ற பிரதிநிதிகளுக்கும் மகாநாட்டுக்கு வராத மற்றவர்களுக்கும் கோவை நகரக் கமிட்டி மற்றொரு விருந்தைத் தயாராக வைத்திருந்தது. ஆர். எஸ். புரம் இளப் மைதானப் பொதுக்கூட்டத்தையே இவ்வாறு குறிப்பிடுகிறேன்.

திரு சுப்ரி அவர்கள் தலைமை வகிக்க, திரு சா. கணேசன் முதலில் முழங்க, திரு மசானி பொதுக் கூட்டத்தில் பேசினார். எதிரே பல்லாயிரக் கணக்கில் (அரை லட்சம்) திரளாக வந்திருந்த ஆண்கள் — பெண்கள் கூட்டத்தைக் கண்டதும் மசானிக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது.

''இவ்வளவு பிரும்மாண்டமான கூட்டத்தில் பேச வாய்ப்பளித்த கோவை மாவட்டத் தோழர்களுக்கு என் நன்றி'' என்று பேச்சின் ஆரம்பத்திலேயே கூறினார். அவ்வளவு பெரிய கூட்டம். அதற்கு மேலாகக் கட்டுப்பாடாகக் கூட்டம் அமர்ந்திருந்த காட்சி ஒரு திருக் காட்சி.

ராஜாஜி பேச வந்தபோது, திரு சுப்ரி, ராஜாஜியைச் சற்று நீளமாகப் பேசும்படி கோரினார்.

''நீளமாகப் பேசுவது என் வழக்கமல்ல. சுருங்கச் சொன்னாலே போதுமென நம்புகிறவன் நான். அதிலும் அதி புத்திசாலிகளான கோவைவாசிகளுக்கு நீளப் பேச்சு தேவையே இல்லை....(சிரிப்பு)

''வரிகளைக் குறைக்க மாட்டோம் என்று மொரார்ஜி கூறுகிறார். பொற் கொல்லர்கள் வேலை கேட்டால் வேலையாவது ஒன்றாவது என்று எரிந்து விழுகிறார். இதுவும் ஆண்டவன் செயல்தான் (சிரிப்பு)

''நம்மைவிடப் பலசாலி எதிரி. ஆகவே துணையோடு போய்ச் சண்டைபோட்டு அவனை விரட்ட வேண்டும் என்கிறோம். துணையாவது ஒன்றாவது. இப்படிப் பேசுவதே தப்பு என்கிறார்கள்.

''வேறு இரண்டு பேர் அடித்துக்கொள்ளும்போது நடுநிலைமை பேசியது சரி. நாமே அடிபட்டுக்கொண்டிருக்கும்போது நடுநிலைமை பேசினால் எப்படி இருக்கும்? (சிரிப்பு)

''வரிகளைப் பார்த்தால் குடும்பஸ்தர்கள் சம்சாரிகள் வாழ முடியாது. தனிக் கட்டைகள் வேண்டுமானால் இந்த வரிகளில் சந்தோஷமாக இருக்கலாம். (நீண்ட சிரிப்பு)

''இந்தக் கஷ்டத்திலிருந்து எப்படி மீளுவது என்று கவலைப்படுகிறீர்கள். இதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. அதாவது நமது ஆட்சேபணையைப் பலமாக ஆட்சியாளர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்....''

ராஜாஜி நாற்பத்தெட்டு நிமிடங்கள் பேசினார். பயமுறுத்திக் கொண்டிருந்த மழை வரவில்லை. ஆனால் ராஜாஜியின் சொல் மழை 'சோ'வெனக் கொட்டி அனைவரையும் இன்ப வெள்ளத்தில் மூழ்கச் செய்தது.

கூட்டத்துக்காக இரவு பகலாகப் பாடுபட்ட சுதந்திரக் கட்சி ஊழியர்கள் வெற்றிகரமாக முடிந்த கூட்டத்தைக் கண்டு பூரித்தே போனார்கள். அவர்கள் வாழ்க!

---

# ஈறு உபாதைகள், பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து

# *வியக்கத்தக்க பலன்கள்*

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் பற்களுக்கு

நற்பலனளிக்கும் **போர்ஹான்ஸ்** பற்பசையின்

தன்மையை நிரூபிக்கின்றன.



பல ரகமான பற்பசைகளை உபயோகித்த பின்னர், எனது 50 வது வயதில் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கத் தொடங்கினேன். கடந்த 20 வருடங்களுக்கு மேலாக அதை உபயோகித்து நல்ல பலன் அடைந்துள்ளேன். ஒருவேளை, என் 72-வது வயதில் என்னுடைய பற்கள் இயற்கையானபடி வலுவாகவும், சீராகவும் இருப்பதற்குக் காரணம் போர்ஹான்ஸின் மாயவித்தையாகவும் இருக்கலாம்.

ஜி. என்., மதுரை

---

நான் தங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை கடந்த 20 வருடங்களுக்கு மேலாக உபயோகித்து வருவதால், எனக்கு இன்று 65 வயதும் 5 மாதங்களும் வயதாகியும் என்னுடைய 32 பற்களும் இன்னமும் வலுவுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கின்றன. நாளது தேதிவரை நான் எவ்விதமான பற்கோளாறினாலும் அவதிப்பட்டதில்லை.

டி. என். டி., அஸ்ஸாம்

---

எனக்கு போர்ஹான்ஸினால் ஏற்பட்ட நல்ல பலனைக்கண்டபின், இப்போது என் குடும்பத்தில் எல்லோரும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள். அதற்கு முன்னால், நான் எப்பொழுதும் பல்வலி மற்றும் ஈறு உபாதையால் அவதிப்பட்டுவந்தேன். இப்போது போர்ஹான்ஸின் பயனாக, என் பற்கள் வெண்மையாகவும், உறுதியாகவும், ஈறுகள் வலுவாகவும் இருக்கின்றன பல வருடங்களாகவே, எனக்கு ஈறுகளில் புண் ஏற்பட்டதில்லை. அப்பப்பா! நான் வேறிறந்தப் பற்பசையை உபயோகிப்பதாகக் கனவுகூட காணமாட்டேன்.

ஜி. எஸ்., டில்லி

---

* இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட், கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

**ஓர் பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட பற்பசை**

இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு,
**போர்ஹான்ஸ்** *டபிள் ஆக்ஷின்* டூத் பிரஷ் உபயோகியுங்கள்.

இந்த டூத் பிரஷ் மட்டுமே உங்கள் பற்களைச் சுத்தம் செய்வதோடு, ஈறுகளையும் இதமாகத் தடவிக் கொடுக்கிறது.







மாதங்கள் நகர்ந்தன. கன்னி தாயானாள்
காதல் காவியமான அவரது கடிதங்களைப் போல ஏதும் வருவதில்லை. ஒரு வேளை என்னை மறந்து விட்டாரோ? மகள் பிறந்து....




கடிதமே வரவில்லை என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறாயே, இதோ!




பயந்தது போலவே ஆகிவிட்டது. கடிதத்தின் போக்கே ஒரு மாதிரியாக இருக்கிறதே..
மாப்பிள்ளை என்ன எழுதி இருக்கிறார்?
ஒன்றுமில்லேம்மா. பர்மாப் போர் முனைக்குப் போகப் போகிறாராம். போகுமுன் இங்கு வருவதாக எழுதி இருக்கிறாரம்மா...




நீண்ட நாட்களுக்குப் பின் வருபவர் குழந்தையைக் கண்டு திகைப்பார் என்று எண்ணினாள். ஆனால்...
அத்தான்! ஏன் என்னவோ போல மாதிரி இருக்கிறீர்கள்? இதோ பாருடா, உன் அப்பாவை!
போதும், உன் சாகசம். கிட்ட வராதே அப்படியே நில்!




ஐயோ! ஏன் இப்படிக் கோபமாகப் பேசுகிறீர்கள்? நான் என்ன குற்றம் செய்தேன்?
என்ன குற்றம் செய்தேன் என்று கேட்கிறாய்? குழந்தை....!




ஐயோ, ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள். எனக்குப் பயமாக இருக்கிறது. நீங்கள் வரப் போகிறீர்கள் என்று எத்தனை ஆசையாகக் காத்திருந்தேன்?
பாசாங்குக்காரி! நீ ஆடிய நாடகம் போதும், நிறுத்து. உனக்கு டவுனில் அடிக்கடி என்ன வேலை? கேட்டதற்குப் பதில்...!
தொடரும்



# காணிக்கை



**வா**ழ்க்கையே அர்த்தமற்றதாகத் தோன்றியது பொன்னுத்தாளுக்கு.

அன்றாடப் பிழைப்புக்கு உழைத்துக் கூலி பெறும் கேவலம் ஒரு வேலைக்காரிக்கு வாழ்க்கையின் அர்த்தத்தைப் பற்றிய அவசியம் என்னவோ தெரியவில்லை. நிம்மதியாய் உழைத்து விட்டு ஒரு நாள் அமைதியாகக் கண்ணை மூடினால் குப்பை மேட்டுக் குடியிருப்புக்களினின்று யாராவது அவளைத் தெருவில் இழுத்துப் போட, அநாதை அடக்கம் நடைபெற்று விடும். இதற்கு மேல் கவலை ஏன் ?

ஆனால் பொன்னுத்தாளுக்கு என்னவோ தெரியவில்லை, ஒரு நாள் அந்தச் சிந்தனை உள்ளத்துள் புகுந்து விட்டது. நாட்டுப் பற்று, தேச பக்தி என்று அவளுக்கு மேடையேறிப் பேசத் தெரியாது. அத்தகைய வெள்ளை உள்ளத்திலே ஒரு சலனம் தோன்றி விட்டது.

ஒரு நாள் அவள் தன்னைப் போன்ற மற்றத் தொழிலாளிகளிடம் ''இந்தத் தரமும் நம்மை வழக்கம் போல எலெக்ஷனில் ஓட்டைப் பத்திக் கத்தச் சொல்லுவாங்களில்லே?'' என்றாள்.

வள்ளி உதட்டைப் பிதுக்கினாள். ''அதான் என்னமோ எலெக்ஷனே இல்லியாமே, நாம எங்கே கத்தறது?''

''அதென்ன! எப்பவும் கட்சி கூடிக் கூட்டத்திலே பேசிச் சண்டை போடறாப்பலே நிப்பாங்களே?''

''அதான் விசயம். இப்போ நிசமாவே சண்டை வந்திருக்குதில்லே? அதுக்காகத்தான் இந்த எலெக்ஷன் அது இது எல்லாத்தையும் ஒத்தி வைச்சுட்டாங்க.''

'அது என்ன சண்டை? நிசச் சண்டையா?''

''வெளியூர்க்காரன் ஒருத்தன் ஒரு காரணமும் இல்லாம நம்ம தேசத்திலே படையெடுத்திட்டான்.''

''அட, பாவி மவனே!'' என்று கன்னத்தில் கை வைத்தாள் பொன்னுத்தாள்.

அச்சிறு தொழிலாளர் கூட்டத்தில் பரபரப்புத் தோன்றியது. ஏதோ பிடிபடாத கலவரம். அவர்களுள் சற்றுப் படித்திருந்த மாரிதான் சண்டையைப் பற்றி விவரமாய்ச் சொல்லி ஒரு தமிழ்ப் பத்திரிகையினின்று செய்தித் துணுக்கை இன்னும் உடைந்த துண்டுகளாய் விநியோகம் செய்தான். மற்றவர்கள் சுற்றி உட்கார்ந்து கேட்டார்கள். புரிந்ததோ, புரியவில்லையோ, கவலையும் ரோசமும் பெருகின.

''அந்தச் சீனிக்காரன் அக்குரும்பைப்பார்த்தியா மச்சான்?'' என்று கண்களை அகல விரித்தாள் மாரியின் பெண்சாதி வடிவு.

''ஆமாம். நம்ம சிப்பாய்ங்க இப்போ நாட்டுக்காகப் போராடிச் செத்துக்கிட்டிருக்காங்க, பாவம்!''

பொன்னுத்தாளுக்கு நெஞ்சின் ஒரு மூலையில் என்னமோ துடித்தது. உடம்பு பறந்தது.

இந்த இனம் விளங்காத சலனத்தால் அவள் நிம்மதி இழந்தாள்.

இத்தனை நாட்கள் சிந்தனையில்லாத வாழ்வுதான். நினைவு தெரிந்ததிலிருந்து அவள் ஓர் அநாதை. பிறந்ததும் வளர்ந்ததும் கூட்டத்தோடு நடந்த செயல்கள். அவற்றில் தனித்துவம் இல்லை. ஆகவே ஞாபகமும் ஏக்கமும் இல்லை. வாழ்ந்த இந்த நாற்பத்தைந்து ஆண்டுகளில் பொருளோடு கூடிய ஓர் அம்சம் கூடக் கிடையாது.... தவறு. செங்கோடனை மறந்து அவள் அப்படிச் சொல்லலாமா?

செங்கோடன் அவளது மகன். அப்போது அவளுக்கு என்ன வயது இருக்கும்? தெரியவில்லை. அது ஏதோ ஒரு காலம். தனக்கு மணமானதாகப் பொன்னுத்தாளுக்கு நினை

வில்லை. ஆனால் அந்தக் குழந்தை நினைவிருந்தது. அதை அவள் மறந்தாலும் அவள் வயிறும் உயிரும் மறக்க முடியுமா? செங்கோடன் - அவளுக்கு அந்தப் பெயர் பிடித்திருந்தது. அதனால் அது அவனுக்குப் பெயராயிற்று. மற்றப்படி நாமகரணச் சடங்கு ஏதும் நடக்க வில்லை. அவன் பெயர் செங்கோடன் என்பது இந்த உலகில் — இந்தப் பெரிய பரந்த உலகத்தில் — அவளைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

அவனது சின்னஞ் சிறு உடல் ரோஜா வண்ணமாய் இருந்தது. வலது கன்னத்தின்மேல் தாமரை வடிவில் ஒரு கரு மச்சம். தலை நிறையக் கற்றையாய்ச் சடை. இத்தனை அழகோடும் இரண்டு மாத உறவோடும் அவன் உள்ளத்துள் அவன் குடிபுகுந்து விட்டான் ஒரு நாள். காய்ச்சலில் கிடந்த குழந்தை கண் திறந்து விடும் என்று அவள் காத்திருந்தபோது சிறு உடலில் மூச்சு நின்றது. அவளும் ஒரு விநாடி இறந்தாள். பிறகு அந்த உடலை ஒரு தரம் மார்புறத் தழுவிக் கீழே விட்டாள். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் தனியே நடந்து விட்டாள். சிறிது சிறிதாக அத்துயரமும் மழுங்கித் தேய்ந்தது.

தனிப் பாதையில் பொன்னுத்தாளுக்கு எவ்விதக் குறையும் தெரியவில்லை. பிழைப்பே பிரச்னையாகி விட்டால் மற்றக் குறைகளுக்கு இடமேது? அப்படியே வாழ்ந்து கொண்டு வந்து விட்டாள். சலனமற்ற, லட்சியமற்ற, கவலையற்ற வாழ்வு. இப்போது?

இப்போது இதயத்தில் இது என்ன புரியாத ஆவேசம்? ஆழமான துடிப்பு?

ஊரில் எங்கும் ஒரு விதப் பரபரப்பு ஓடுவதை அவள் கவனித்தாள். அவள் வேலை செய்து வந்த வீடுகள் பலவற்றில் எஜமானர் என்னமோ மாதத்தில் ஒரு நாளையச் சம்பளப் பணத்தைச் சண்டைக்காக அனுப்புகிறார்களாம். ஆங்காங்கு ஏலங்கள், எக்ஸிபிஷன்கள் பொன்னுத்தாள் மிகவும் பழக, ஓட்டை என்று கருதிய பொருள்கள் எவ்வளவு விலைக்குப் போயின, அடேயப்பா! அவள் பிரமித்து விட்டாள்! அந்தப் பணமெல்லாம் என்னமோ 'ஃபண்ட்'டாமே, அதற்குப் போகிறதாம். அவள் பார்த்துப் பழக்கப்பட்ட அம்மாமார்கள் பலர் முன்பு அணிந்திருந்த ஆபரணங்கள் எதுவும் இன்றி முகத்தின் ஒரு நகை மட்டுமே பொலியக் காட்சி தந்த அதிசயத்தைப் பார்த்து வியந்தாள். முன்பெல்லாம் பகலில் ஒருவர் வீடு மாற்றி ஒருவர் வீடாக ஒன்று கூடி வம்பிலும் சீட்டாட்டத்திலும் பொழுதைக் கழித்து வந்த பெண்களில் பலர் இப்போது நீள ஊசிகளும் கம்பளி நூலுமாக மணிக்கணக்கில் முதுகு வளைத்து உட்காரும் கோலம் அவளுக்குப் புதுமையாயிருந்தது. பால்மணம் மாறாத பவளச் சிறு இதழ்கள் ''அப்பா, நீ எனக்குக் காத்தாடிக்காகக் குடுத்த துட்டை எங்க ஹெட்மாஸ்டர் கிட்டே குடுத்து 'டிஃபன்ஸ் பண்ட்'டுக்கு அனுப்பிடச் சொல்லிட்டேம்பா!''—என்று வீரம் மிழற்றும் ஒலிகள் அவளைச் சிலையாய் நிற்கச் செய்தன. 'பச்சைப் புள்ளைங்களுக்குக்கூட எத்தனை ரோசம், உணர்ச்சி!'

இந்த எண்ணம் முற்றுப் பெறுமுன், அவளுடைய தெளிவற்ற தவிப்பு வடிவும்சக்தியும் கொண்டு திடீரென்று விசுவரூபமெடுத்தது.

வெறியதாய் நீண்டிருந்த கருவான ஓரத்திலே சட்டென்று ஒரு தாரகை முளைத்தாற் போல் அவள் நெஞ்சில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. அன்றாட வாழ்வே கண்கண்ட உண்மையாய் வயிற்றுப் பிழைப்பிலேயே வாழ்வையும் சாவையும் முடித்துக் கொள்ளும் ஏழையிடம் ஓர் உயர்ந்த எண்ணத்துக்கு என்ன வேலை? அவள் யோகியல்ல, அதை முக்தியாய்ச் சாதிக்க; விஞ்ஞானியல்ல, அதைச் சக்தியாய் உருவாக்க; கவியல்ல, அதைக் காவியமாகத் தீட்ட. ஆயினும் ஏழை கண்டெடுத்த புதையலாக, பாலையிலே பூத்த மலராக, வழி தவறி உள்ளே நுழைந்து நெஞ்சை அணைத்த சிறு குழந்தையாக, அவளிடம் ஓர் எண்ணம் வந்து விட்டது.

''நாட்டுக்காக நானும் ஏதாவது தரவேண்டும்!'' அன்றிலிருந்து பொன்னுத்தாள் புது மனுஷியாகி விட்டாள்.

எதைத் தரலாம்? எல்லாரும் பணமும் நகையும் தருகிறார்கள். வாழ்வில் முதன் முதலாக அவள் தன் வறுமையை எண்ணி நொந்தாள்.



அவள் மெள்ளத் தன் ஊதியத்தில் மிச்சம் பிடிக்கலானுள். பெரிய தொகையாக ஒரு பத்து ரூபாய் சேர்ந்ததும் என்னமோ ஃபண்ட் என்றார்களே, அதற்கு அனுப்பி விடலாம்.

பத்து ரூபாயும் ஒரு நாள் சேர்ந்தே விட்டது. பெருமிதமாகப் பொன்னுத்தாள் அவ்வளவு சில்லறையையும் சேலைத் தலைப்பில் முடிச்சுப் போட்டுக் கொண்டாள். எங்கே, யாரிடம் கொடுக்க வேண்டும் பணத்தை? அடடா, தெரியவில்லையே! சரி, அந்தப் போலீஸ்காரரை விசாரித்தால் தெரியும்.

அவள் பத்தடி நடந்திருப்பாள்.

''என்னும்மா, பொன்னுத்தா! நம்ம துட்டை எப்போ தரப் போறே?''

அவள் அதிர்ந்து நின்றுள். எதிரே ஆடம்பரமாக நின்றார் வட்டிக் கடைச் செட்டியார்.

''தந்துடறேனுங்க.''

''வட்டியே பதிமூணே முக்கால் ரூவா ஆவுது.''

''சரிங்க. அப்புறமா....''

''இப்படியே எத்தினி நாளா சாக்குச் சொல்லிக்கிட்டிருக்கிறே நீ?''

''நிச்சயமா அடுத்த மாசம் தந்துடறேனுங்க. கொஞ்சம் பெரிய மனசு....''

''புளுகாதே. நீ ஏதோ துட்டைத் தலைப்பிலே முடிஞ்சிட்டதை நான் பார்த்தேன். எங்கே காட்டு, அதை'' என்றார்.

''அது.... அது ஒண்ணும் இல்லேங்க....'' அவளுக்கு உடலெல்லாம் வேர்த்து விட்டது.

''ம், கொண்டா, இப்படி!''

''அது.... ஒரு விஷயத்துக்காக.....''

''எந்த விஷயம்?''

''சண்டைக்காக. நான் தரப் போறேன்.''

''பலே! பலே! என்னை ஏமாத்த முடியாது. கொண்டா, அதை இப்படி.''

''ஐயா! நான் பொய் சொல்லலீங்க. நிஜமாகவே இந்தப் பத்து ரூபாயை....''

அவள் பிரித்தெடுத்துக் காட்டிய பணத்தைச் சட்டென்று செட்டியார் பிடுங்கிக் கொண்டார். ''பத்துரூபாயா? சரி,பாக்கியைக் கண்டிப்பாய் அடுத்த மாசம் கொடுத்திடு!''

''ஐயா, கொஞ்சம் நின்னு கேளுங்களேன், ஐயா... ஐயா...!''

அவர் போய் விட்டார். அவள் கூனிப் புலம்பியவாறு தெருவில் உட்கார்ந்தாள்.

கண்களைச் சுற்றிக் கரு வளையங்கள் அழுந்தின. பொன்னுத்தாள் ஏதோ பிரமை பிடித்தாற் போல் இருக்கிறுள் என்று மற்றவர்கள் பேசிக் கொண்டார்கள்.

அவள் எஜமானிகளுள் ஒருத்தியான நிர்மலா ஒரு நாள் வேலைக்காரி தன் எதிரில் தயங்கித் தயங்கி நிற்பதைக் கண்டு ''என்ன வேணும் பொன்னுத்தா?'' என்றுள்.

பொன்னுத்தாளின் கண்கள் எஜமானியின் கைகள் மீதே இருந்தன. என்ன லாகவமான வேலை! இரண்டு நீள ஊசிகளும் அவள் விரல்களிடை எப்படி நர்த்தனமாடுகின்றன!

''நான் போடற ஸ்வெட்டரை என்ன அப்படிப் பார்க்கறே?''

''வந்துங்க.... ஏம்மா. இந்த மாதிரி சட்டை நீங்களும் மத்த அம்மாமாரும் பின்னிக்கிட்டிருக்கிங்களே, எதுக்கும்மா?''

''நம்ம தேசத்திலே இப்போ சண்டை நடக்குது. தெரியுமா? நம்ம சிப்பாய்க்குக் குளிராம இருக்க இப்படி எல்லாஊரிலேயிருந்தும் போட்டு அனுப்பறுங்க. இது நாட்டுக்காகப் பெண்கள் செய்யற சேவை மாதிரி.''

''எனக்கும் இப்படி இந்த ஊசியாலே சட்டை போடச் சொல்லித் தரீங்களா?''

''உனக்கா!.... ஏன் பொன்னுத்தா?''

''நானும் ஊருக்காக ஏதாச்சும் செய்ய வேணும்.''

'' 'நிட்டிங்' கஷ்டமில்லே, பொன்னுத்தா.''

''கத்துக்கிறேனுங்க.''

''சரி.'' வேறேதும் நிர்மலாவால் சொல்ல முடியவில்லை.

அடுத்த நாளே பொன்னுத்தாளின் கைகளுக்கு இரு நீளமான பிளாஸ்டிக் ஊசிகள் வந்து விட்டன. கண்களை இடுக்கிக் கொண்டு அவற்றை ஆர்வமாய்ப் பற்றினுள்.

ஏதேதோ பாடப் பயிற்சி. 'நிட்' என்றும், 'பர்ல்' என்றும் நிர்மலா என்னமோ சொன்னதெல்லாம் அவள் வாயில் மட்டுமல்ல, நெஞ்சிலும் நுழைய வில்லை. பார்வை இத்தனையா மங்கிப் போயிருந்தது? ஊசிகளைத் தூக்கிப் பிடித்தால் விரல்களின் நடுக்கத்தால் அவை தாறுமாருய் எங்கெங்கோ மாட்டி இழுத்தன.

நிர்மலா ஒரு நாள் தோல்வியை ஒப்புக் கொண்டு விட்டாள். ''பொன்னுத்தா! உனக்கு 'நிட்டிங்' வரலே! நான் என்ன செய்யறது சொல்லு.''

கண்களில் நீர் உறுத்தியது. பொன்னுத்தாள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். இது எதிர்பார்த்ததுதான். ஆயினும்....ஆயினும்....

''சரிங்கம்மா.....''

பாழாய்ப் போன வயது. அதனுல்தான் இந்த நூல் வேலை புரிபடவில்லையோ?

அப்படியும் அவள் ஆர்வம் குறைய வில்லை. முயற்சி தளரவில்லை.

அறிவில்லாமல் வெறும் தேக உழைப்பால் உரமேறி மலை போல் நின்ற தன் உடம்பை ஒரு நாள் அவள் பெருமிதத்துடன் பார்த்துக் கொண்டாள். ஆம்; மூளைதான் இல்லாவிட்டாலும் அந்த உடல் பலமாயிருக்கிறதல்லவா? அதில் ஓடும் ரத்தத்துக்கு மூளை இருக்க வேண்டுமென்று அவசியமில்லையே!

அவள் உற்சாகமாய்க் கிளம்பினுள், இந்த விஷயத்தைக் கேள்விப்பட்டபோது. சண்டைக்காக ரத்தம் கூடக் கொடுக்கலாமாமே?

''அடே, அடே! நம்ம பொன்னுத்தாள் ரத்தம் கொடுக்கப் போறுளாம் டோய்!'' என்று குப்பை மேட்டில் முனியன் கூனி நையாண்டி செய்தான்.

''என்ன பொன்னுத்தா, நிசம்மாவா!'' என்று வள்ளி ஆச்சரியப்பட்டாள்.

பொன்னுத்தாள் திரும்பிக் கூடப் பார்க்காமல் கர்வமாய் நடந்த போது மற்றவர்களின் சிரிப்பு அவளைத் தீண்டவே இல்லை.

ஆனுல் அவள் அடி மேல் அடி வைத்துத் தலை குனிந்து சோர்ந்து திரும்பிய போது அந்தச் சிரிப்பு அவளைத் தீயாய்ப் பற்றிக் கொண்டது.

''டே, நல்ல ரத்தமில்லேயாண்டா!''

''ஆ, அப்பிடியா!''

''ஏதோ வியாதி புடிச்சதாம். சுத்தமா இல்லேயாம்.''

பொன்னுத்தாள் வெறுப்புடன் எல்லோரையும் விழித்துப் பார்த்து விட்டுத் தன்

குடிசைக்குள் வந்து தரையில் விழுந்தாள்: உணர்ச்சி மரத்திருந்த நிலை தாண்டியவுடன் கண்ணீர் கரை புரண்டு எழுந்தது.

பாழும் உடல்! இதுவும் போலிதானா? உரமேறியது போல் தோன்றினாலும் இதுவும் வெறும் சுமைதானா? நாட்டுக்குப் பயன் படாதா? ஐயோ, அவன் உதவுவதற்கு எதுவுமே இல்லையா?

இப்படிப் பல வகையில் ஏமாற்றமடைந்த பிறகுதான் பொன்னுத்தாளுக்கு வாழ்க்கை அர்த்தமற்றதாய்த் தோன்ற ஆரம்பித்தது. சென்ற காலத்தில் யாதொரு சிறப்புமில்லை. வருங்காலத்தில்யாதொரு நம்பிக்கையுமில்லை. அவளுக்குத் திடீரென்று ஆயாசம் மிஞ்சியது. பித்துப் பிடித்தவள் போல் ஆகி விட்டாள்.

தெரு ஓரத்தில் பிரமை பிடித்துக் குந்தி விட்டால் நேரம் போவது தெரியாது. மண்ரல்தா. அவளது பார்வை அதன் மீது பதியும். மண். வெறும் மண்ணா இது?

மெள்ளக் கை நீட்டி அதைத் தொட்டு எடுத்துப் பார்ப்பாள். தடவி அளைவாள்.

''என்ன ஆயா, என்ன சும்மா மண்ணிலே விளையாடிக்கிட்டிருக்கே?''

நிமிர்ந்து பார்த்த அவளுக்கு எதிரே நின்ற உருவம் தெளிவுபடச் சிறிது நேரமாயிற்று.

''உன்னைத்தான் ஆயா! ஏன் அப்படிப் பார்க்கறே? பட்டினியா?''

அவனுக்கு முப்பது வயசுக்குள்தான் இருக்கும். சிரிப்பில் நட்பு இழையோடியது.

''நீ யாரப்பா?''

''சிப்பாய் ஆயா, சிப்பாய்.''

பொன்னுத்தாளின் மங்கிய கண்களில் சுவாரஸ்யம் பிறந்தாற் போலிருந்தது. அவனைக் கூர்ந்து பார்த்தாள். அழுக்கேறிய காக்கி 'பாண்ட்'. ஒரு வெள்ளைச் சட்டை.

''மண்ணிலே விளையாடுறியே ஆயா, சின்னப் புள்ளையா நீ?''

''இந்த மண்ணு.... இந்த மண்ணு எனக்குப் பிடிச்சிருக்குது.'' அவள் குழப்பத்துடன் அவன் கண்களுள் தேடினாள். ''உனக்குப் பிடிக்கலே?''

அவன் முகம் சட்டென்று கம்பீரமாயிற்று.

''பிடிக்குது ஆயா, பிடிக்குது. இந்த மண்ணை மிஞ்சி எங்களுக்கு எதுவுமே இல்லை. எனக்கு மட்டும் சண்டையில் ஒரு கால் போகல்லேன்னா....''

அவன் நிறுத்தினான். பொன்னுத்தாள் அப்போதுதான் நன்கு கவனித்தாள். தரை மேல் ஒரு பாதம்தான் இருந்தது. தொடைக்குக் கீழ் அவனது இடது பக்கத்தில் நிஜார் கயிறாய்த்தொய்ந்து காற்றில்ஆடியது. அருகில் நீளமாய் இரு கம்புகள் கூட இருந்தனவே! இத்தனை நேரம் அவள் கவனிக்கவில்லை.

மறுபடியும் அவள் பார்வை அக்கட்டைகள் மேல் நிலைத்தது.

''நீ திரும்பவும் சண்டைக்குப் போவியா?'' என்று கேட்டாள்.

''ஆ, இனிமேல் எங்கே ஆயா! கால்தான் போயிடுச்சே. வடக்கே ஒரு ராணுவ சிகிச்சை முகாமிலே கிடந்தேன். ஆபரேஷன் முடிஞ்சுது. கட்டையைக் கொடுத்திட்டு, 'இனிமேல் நீ சண்டைக்கு லாயக்கில்லே தம்பி, விட்டுக்குப்போ'ன்னு அனுப்பிச்சிட்டாங்க'' என்றான் அவன் கம்மிய குரலில்.

> **அன்னை கஸ்தூரிபா**
>
> கஸ்தூரிபா ஆகாகான் அரண்மனையில் மகாத்மாஜியுடன் இருந்தார். நெடுநாட்களாக நோயுற்றிருந்தார். கடைசியில் போய்விட்டார். காந்திஜியின் வாழ்க்கைத் துணைவியாக இருக்கும் நற்பேறு அவருக்குத் தம் வாழ்வின் இறுதி நாள் வரையில் இருந்து வந்தது. காந்திஜியின் மடியில்தான் அவர் மீளா வழிச் சென்றார். அப்படிப்பட்ட சௌபாக்கியவதி வேறு யார் இருக்க முடியும்? அவரை எல்லாரும் 'பா' என்று அழைப்பார்கள். அவர் உண்மையிலேயே எல்லோருக்கும் தாயாக இருந்தார். ஒரு முறை காந்திஜி ''பா''வை ''பா''வென்று அழைப்பதில் தமக்குக்கூடப் பெரு மகிழ்ச்சி உண்டாகிறது என்று என்னிடம் கூறினார். ''பா'' உண்மையிலேயே அவருக்கும் தாயாகவே இருந்து வந்தார்.
>
> — ராஜன்பாபு.

''ஒண்ணும் விசனப்படாதே அப்பா. அதான் ஏற்கனவே சண்டை போட்டிருக்கியே?''

''உயிரையே கொடுக்கிறவங்க இருக்காங்களே ஆயா, எங்க டிவிஷன்லே ஒரு சிப்பாய் பாரு, இருபத்தஞ்சு வயசு இருக்கும். என்ன வீரமாய்ச் சண்டை போட்டான் தெரியுமா? கடைசியிலே எதிரி கைத் துப்பாக்கி அந்த வீர உயிரை எடுத்துக்கிட்டே போயிடுச்சு. உயிர் போனப்புறமும் அந்த முகத்திலேதான் என்ன கம்பீரம், என்ன அழகு! வலது கன்னத்து மேலே இருந்த தாமரை வடிவமான அந்தக் கறுப்பு மச்சம் அவனுக்குக் கடவுளே கொடுத்த வீரப் பரிசு மாதிரி இருந்தது.... ஆயா, ஆயா, ஏன் அப்பிடி விழிக்கிறே? ஏன் அப்பிடி ஆடறே? ஐயையோ, மூர்ச்சை விழுந்திட்டாளே....''

**அ**தன் பிறகு—பொன்னுத்தாளைப் பார்த்துப் பார்த்து எல்லோரும் அதிசயித்தார்கள்.

இப்போது அவளுக்குச் சென்ற காலம் இருந்தது. ஏனென்றால் அச் சென்ற கால ஆண்டுகளில் அவன் வாழ்ந்திருக்கிறான். எங்கோ, எப்படியோ, யாராலோ மூர்ச்சை தெளிவிக்கப்பட்டு வளர்க்கப்பட்டு, இத்தனை ஆண்டுகளும் அவள் மகன் செங்கோடன் வாழ்ந்திருக்கிறான்!

கடும் வேதனையிடையே துன்ப மய நிறைவு மலைபோல் வளர்ந்த உடல் என்று அவள் நொந்து கொண்ட தேகம் ஒரு பெரும் கடமையை இயற்றி விட்டது. பாழும் வயிறு என்று அவள் சபித்தது உண்மையில் பாக்கியம் செய்த வயிறாகி விட்டது. பணத்தைவிட, கம்பனிச் சட்டையை விட, ரத்தத்தைவிட, அவள் தந்தது இன்னும் மகத்தானது. பிறந்த மண்ணுக்காக உயிர் கொடுக்க அவள் ஒரு மகனை நாட்டுக்கு அளித்து விட்டாள்.

அழுகையும் சிரிப்பும் அவளிடம் ஒன்றியன.

# கண்ணாடி

மனிதன் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பல பொருள்களை உண்டாக்கினான். அவைகளில் ஒன்று ரொம்ப அபூர்வமானது. நீராலும் நெருப்பாலும் அது பாதிக்கப்படாதது. எலி, பூச்சி புழுக்களால் அதை அரிக்க முடியாது. அநேக அமிலங்கள் இதை அசைக்க முடியாது. மின்சாரம் இதில் பாயாது. இத்தனைக்கும் மேலாக இது அழகானது. இதன் வழியாக ஒளி ஊடுருவிச் செல்லும். இதுதான் கண்ணாடி. இந்த அற்புதப் பொருளான கண்ணாடியை மனிதன் கண்டு பிடிக்காதிருந்தால்? கண்ணாடியே இல்லாத உலகத்தைக் கற்பனைசெய்து பாருங்கள்!



கண்ணாடி யாரால் எப்போது கண்டு பிடிக்கப்பட்டது என்பதற்கு ஆதாரங்கள் ஏதுமில்லை. ஆனால் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே புராதன எகிப்தியர்கள் கண்ணாடி செய்யும் கலையில் கை தேர்ந்தவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது மட்டும் தெரிகிறது. கண்ணாடியைப் பலவித உருவங்களில் ஆக்கி ஆண்ட பெருமை ரோமானியர்களுக்குண்டு.

கண்ணாடியை எப்படிச் செய்கிறார்கள்? மணல், சுண்ணாம்பு, சோடா இம் மூன்றையும் குறிப்பிட்ட அளவில் கலந்த கலவை உருகும் வரை இதற்கென்று கட்டப்பட்ட பிரத்தியேகமான உலையில் இட்டுக் காய்ச்சுவார்கள்.

மணல் உருக வேண்டுமானால் எத்தனை உஷ்ணம் தேவைப்படும் என்று கற்பனை செய்து கொள்ளுங்கள். தேனைப் போலக் கெட்டியான சிவந்த திரவமாகக் கண்ணாடிக் குழம்பு தகதகக்கும்.



இந்தக் குழம்பில் ஒரு நீண்ட குழலை முக்கி எடுப்பார்கள். அதில் தேன் பாகு போல் உருண்டையாகக் கண்ணாடிக் குழம்பு ஒட்டிக் கொண்டு வரும். குழாயின் மறு நுனியை வாயில் வைத்துப் பலமாக ஊதுவார்கள். கண்ணாடிக் குழம்பு பலூன் போல உப்பி விரியும். சோப்புக் கரைத்த நீரில் வைக்கோல் குழாயை முக்கிப் பலூன் ஊதி விளையாடுவீர்களே அதே போலத்தான். விதம் விதமான உருவமுடைய பாத்திரமாக ஆக்கும் திறமை கண்ணாடிக் குழம்பை ஊதி உப்ப வைக்கும் தொழிலாளியிடம் தான் இருக்கிறது.

ஜன்னல்களுக்குப் பயன்படும் கண்ணாடிப் பலகைகளை எப்படிச் செய்கிறார்கள்? முன் காலத்தில் செய்த முறை வேறு. இப்போது செய்யும் முறை வேறு. முன்பு உருகிய கண்ணாடிக் குழம்பை ஊதுகுழலின் நுனியில் எடுத்துக் கொஞ்சம் ஊதிப் பேரிக்காயைப் போலச் செய்வார்கள். இன்னொரு இரும்புக் குழாயின் நுனியில் மற்றொரு உருண்டைக் கண்ணாடிக் குழம்பை எடுத்து, பேரிக்காய் உருவத்தின் கெட்டியான நுனிப் பகுதியில் அதை அமுக்குவார்கள். அதில் இது ஒட்டிக் கொள்ளும். கண்ணாடி பேரிக்காயின் மெல்லிய பகுதி ஊதுகுழலிலிருந்து உடைந்து பிரிந்து விடும். இதை மறுபடி உலையில் வைத்துச் சூடாக்குவார்கள். பிறகு இந்த இரும்புக் குச்சியின் மறு நுனியை வேகமாகச் சுழற்றுவார்கள். இந்தச் சுழற்சி குச்சியின் நுனியிலுள்ள கண்ணாடிக் குழம்பை வட்ட வடிவமான பட்டையான தகடு போலச் செய்யும். நான்கடி குறுக்களவுக்கு இந்த வட்டம் வந்ததும் இதை அப்படியே குளிரச் செய்து கெட்டியாக்குவார்கள். பிறகு இதிலிருந்து வேண்டிய அளவுக்குச் சதுரமான தகடுகளை வெட்டிக் கொள்ளுவார்கள். இதற்குக் 'கிரௌன் கண்ணாடி' என்று பெயர்.

இந்தக் காலத்திலோ மிகப் பெரிய, ஒரு சுவர் அளவுக்கான கண்ணாடிகள் செய்யப்படுகின்றன. இது எப்படி? இதைத் தயாரிக்க மிகப் பெரிய தொழிற்சாலை வேண்டும். முதலில் மணல், சுண்ணாம்பு, சோடா இவைகளின் கலவையையும் அத்துடன் உடைந்த துண்டுக் கண்ணாடிக் குவியலையும் போட்டு உருக்குவார்கள். உடைந்த கண்ணாடித் துண்டுகள் மணல் கலவை உருகுவதற்கு உதவுகின்றன. உலையின் ஒரு கோடியில் 1,500 டிகிரி சென்டி கிரேட் உஷ்ண நிலையில் கண்ணாடிக் குழம்பு உருவாகிறது. மறுகோடியில் கண்ணாடிக் குழம்பின் உ. நிலை 900 டிகிரி







யாகக் குளிர்விக்கப்படுகிறது. பெரிய கண்ணுடித் தகடுகளை உருவாக்க இந்த நிலைதான் தேவை. உருகித் தளதளக்கும் இதில் உலோக வலைச்சட்டத்தை இறக்குவார்கள். இதை மறுபடி மேலே தூக்கும்போது இதன் அடிப்பரப்பில் கண்ணுடிக் குழம்பு ஜவ்வைப் போல ஒட்டிக்கொண்டுவிடும். இப்படி மேலிழுக்கப்படும் ஜவ்வுக் கண்ணுடி ஆஸ்பஸ்டாஸ் உருளைகளிடையே அழுத்தப்பட்டு வெளிவரும். இதன் வழி உஷ்ணம் நிறைந்ததாக இருக்கும். இங்கு இந்தத் தகடுகள் மெள்ளக் குளிர்ந்து கெட்டிப்படும். தானுகக் குளிர்ந்து கெட்டிப்படும் கண்ணுடித் தகடுகளுக்கு உறுதி அதிகம். முப்பது அடி உயரத்துக்கு இந்தத் தகடுகள் வந்ததும் அப்படியே அதைக் குளிர விட்டு விடுவார்கள். பிறகு இதை யந்திரங்களில் கொடுத்துத் தேவையான அளவுக்கு வெட்டி அடுக்குவார்கள். இத்தகைய கண்ணுடித் தகடுகளின் கனம், உலையிலிருந்து வலைக் கம்பியை இழுக்கும் வேகத்தைப் பொறுத்தது. வேகமாக மேலே இழுத்தால் மெல்லியதும் மெதுவாக இழுத்தால் கனமானதுமான கண்ணுடித் தகடுகள் கிடைக்கும். ஆனல் இப்படித் தயாரிக்கும் கண்ணுடித் தகடுகளில் குறைகள் காணப்படுகின்றன. சில ஜன்னல் கண்ணுடிகளின் மூலம் பார்த்தால் மறுபக்கமுள்ள காட்சி கோணலாகவும் நெளிந்தும் தெரியுமே, இது தான் குறைபாடுடைய கண்ணுடி. முகம் பார்க்கும் கண்ணுடியில் இதைப் பூதம் காட்டுகிறது என்று சொல்லுவோம். இன்னும் கண்ணுடியில் ஆயிரம் வகைகள் இருக்கின்றனவே. மூக்குக் கண்ணுடி, காமிரா லென்ஸ் ஆகியவைகளைத் தயாரிக்க விசேஷத் திறமையும் கவனமும் வேண்டும். இவைகளுக்கு 'ஆப்டிகல் கிளாஸ்' என்று பெயர். வேலைப்பாடு உடைய கண்ணுடிப் பாத்திரங்கள், கோப்பைகள், ஜாடிகள், பொம்மைகள் இப்படிக் கண்ணுடியாலான பொருள்கள் எத்தனை எத்தனையோ! உடையாத கண்ணுடிகளையும்கூட இப்போது தயாரிக்கிறார்கள். கண்ணுடித் தொழிலைப் பற்றி நீங்கள் விரிவாக மேல் வகுப்புக்களில் படிப்பீர்கள். உடைந்த கண்ணுடி உடலில் புகுந்தால் அபாயம். ஆகவே உடைந்த கண்ணுடித் துண்டுகளை வழியில் காண நேர்ந்தால் நீங்கள் தாண்டிப் போவது மட்டுமல்ல, அதனல் பிறருக்கு ஏற்படும் தீமையையும் தடுக்க அதைப் பொறுக்கி எடுத்து ஓரமாகத் தூர வீசி எறிந்து விட்டுச் செல்ல வேண்டும்.

---

## தப்பிய திருடன் தடுமாற............

சென்ற வாரம் சிறையிலிருந்து திருடன் எப்படித் தப்பினன், தெரியுமா? துண்டுக் கயிற்றின் முறுக்கைப் பிரித்து இரண்டாக்கினன். பிறகு அதை முடி போட்டு ஜன்னலில் கட்டித் தொங்க விட்டு அதன் வழியாக இறங்கினன். இறங்கிய அவனல் சுலபமாக வெளியே போய்விட முடியவில்லை. கோட்டைக் கதவுக்குப் போகுமுன் வழியில் பல தடைகள். அதில் ஒன்று இதோ அருகில் உள்ள மர்மப்பாதை. திருடன் ஜன்னல் வழியாக இறங்குவான் என்று அரசருக்குத் தெரியும். சிறைக் கூடத்தைச் சுற்றிச் சுலபமாகத் தப்பிச் செல்ல முடியாத குழப்பங்களை உண்டாக்கும் பல வளைவுப் பாதைகளை உண்டாக்கி யிருந்தார். திருடன் A என்ற இடத்தில் குதித்தான். அவன் கோட்டைக் கதவுக்கு வர ஒரே வழி (B)தான்.



நேரமோ கும்மிருட்டு. வளைவுப் பாதையோ குறுகலான சுவர்களைக் கொண்டது. சீக்கிரத்தில் சுவரில் முட்டிமோதிக் கொள்ளாமல் திருடன் மர்மப் பாதைகளைக் கண்டு பிடித்து எப்படி வெளியேறுவான்?



### உங்கள் ஆல்பத்துக்கு

ஐரோப்பாவில் உள்ள சிறிய தேசம் ஹங்கேரி. இதற்குக் கடற்கரை கிடையாது. இதன் அண்டை நாடுகள் யுகோஸ்லாவியா, ருமேனியா, செக்கோஸ்லோவேகியா, ஆஸ்திரியா ஆகியவை. 45,237 சதுர மைல் பரப்புடையது. இதன் கொடி நம்முடையதைப் போல் (மூன்று பிரிவாக முறையே மேலிருந்து கீழாக) சிவப்பு, வெள்ளை, பச்சை ஆகிய வர்ணங்களை உடையது. மாக்யார், ஜெர்மன் ஆகிய இரு மொழி பேசும் மக்களும் இங்குண்டு. ஹங்கேரி நாட்டின் தம்பதிகளே தங்கள் தேசிய உடையில் மேலே காட்சி யளிக்கிறார்கள்.

# நாசிக் பஞ்சவடி ராமர்

## தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

சில வருஷங்களுக்கு முன் ஒரு கூட்டம். அக்கூட்டத்தில் ஒரு கம்பராமாயணப் பிரசங்கம். பிரசங்கி ராமாயணத்தில் சொல்லப்படுகின்ற தலங்களை விவரித்தார். கவிச் சக்கரவர்த்தி கம்பன் அத்தனை இடங்களுக்கும் சென்று நேரில் கண்டு அதன்பின்னே தான் விஸ்தாரமாக அவற்றை உரைத்திருக்கிறார் என்பது அவரது சித்தாந்தம். அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தவன் நான். நான் சொன்னேன் — கம்பருக்கும் பூகோளத்துக்கும் ரொம்ப ரொம்பத் தூரம். அவன் கங்கைக் கரைக்குப் போனதில்லை, கோதாவரியைக் கண்டதில்லை. அயோத்தியையோ, மிதிலையையோ, தண்டகாரண்யத்தையோ, பஞ்சவடியையோ பார்த்ததில்லை. காவிரிக் கரையிலே பிறந்து வளர்ந்த அவன் கங்கையைத் தெய்வப் பொன்னியே பொருவும் கங்கை என்றுதான் கூறுவான். சான்றோர் கவி எனக் கிடந்தது கோதாவரி என்பதுதான் அவனது கோதாவரி வர்ணனை. பொதிகையிலிருந்த அகத்தியர் ராமனிடம் பஞ்சவடியைக் குறிக்கும் போது, குற்றால மலையையும் அங்குள்ள மரங்கள் அடர்ந்த பொழில்களையும் மனத்தில் கொண்டே பாடியிருக்கிறான் என்றேன். நமக்குத் தெரியுமே, அவரது பஞ்சவடி வருணனை.

> ‘ஓங்கு மான் ஓங்கி
> மலை ஓங்கி, கழை ஓங்கி
> பூங்குலை குலாவு
> குளிர் சோலை புடை விம்ம
> தாங்கு திறை ஆறு தவழ்
> சூழலதோர் குன்றின்
> பாங்கர் உளதால் உறையும்
> பஞ்சவடி மஞ்ச’

என்பதுதானே அவரது சித்திரம். இப்படியே சான்றோர் கவி போலத் தெளிந்ததாகவும் நிர்மலமானதாகவும் இருக்கும் கோதாவரி என்று எண்ணிக் கொண்டே நாம்கோதாவரிக்கரையை அணுகுகிறோம். ஆனால் அந்தக் கோதாவரியில் நல்ல கலங்கிய தண்ணீரே ஓடிக் கொண்டிருக்கிறது. நமது தல யாத்திரையில் நாசிக் பஞ்சவடி சென்று அங்கு இன்றுள்ள குண்டங்களையும் கோயில்களையும் குடைவரைகளையும் பார்க்க வேண்டாமா?

நாசிக் பம்பாயிலிருந்து நூற்றுப் பதினைந்து மைல் தொலைவில் இருக்கிறது. ரயிலில் சென்றால் நாசிக் ரோட் என்ற ஸ்டேஷனில் இறங்கி ஐந்து மைல் நடந்தால்தான் நாசிக் நகரம் சென்று சேரலாம். நாசிக் நகரத்தை ஒட்டிக் கோதாவரி நதி ஓடிக் கொண்டிருக்கிறது. எதிர்த்த கரையிலுள்ள இடமே பஞ்சவடி. அதனால் நாசிக் பஞ்சவடி என்று இரண்டையும் சேர்த்தே சொல்வார்கள்.

> செந்துவர் வாய்க் கருங்கண்ணினை
> வெண்ணகைத் தேன் மொழியார்
> வந்து வலம் செய்து மாநடம்
> ஆட மலிந்த செல்வக்
> கந்தமலி பொழில் சூழ்பஞ்ச
> வடி நாசிக் அதனை என்றும்
> சிந்தை செய்வாரைப் பிரியா
> திருக்கும் திருமங்கையே

என்ற பாடலில் பஞ்சவடியும் நாசிக்கும் சேர்ந்தே பேசப்படுகிறது. பஞ்சவடி என்றால் ஐந்து மரங்கள் உள்ள இடம் என்று தெரிகிறது. நாசிக் என்றால் அதன் பொருள் என்ன என்று கேட்கத் தோன்றும்: ராமாயணக் கதை நமக்குத் தெரியும். தாயுரை கொண்டு தாதையின் வாய்மையைக் காக்க ராமன் தன் துணைவி சீதையுடனும், தம்பி லக்ஷ்மணனுடனும் கானுளப் புறப்படுகிறான். சித்திரகூடத்தில் சில நாட்கள் தங்கியிருந்துவிட்டுத் தண்டகாரண்யத்தில் புகுந்து அகத்திய முனிவரால் ராமன் தங்கித் தவம் புரிவதற்கு ஏற்ற இடம் என்று சொல்லப்பட்ட பஞ்சவடி வந்து ஒரு பர்ணசாலை அமைத்துக் கொண்டு வாழ்கிறான். அங்கு வருகிறாள் தசமுகன் தங்கையாகிய சூர்ப்பனகை. ராமனது அழகைக் கண்டு மோகித்து அவன் முன்னர் காமவல்லியாம் கன்னி உருவில் தோன்றித் தன்னை மணந்து கொள்ள வேண்டுகிறாள். சூர்ப்பனகை சீதையைத் தூக்க முனைகிறபோது இலக்குவன் இடை புகுந்து இலங்கு வாளால் அவள்தன் முலை, மூக்கை அரிந்து விடுகிறான்.



பிள்ளையார்

அப்படி சூர்ப்பனகையின் நாசி அறுபட்ட இடமே நாசிக் என்று அன்று முதல் வழங்கி வருகிறது. இந்தத் தலம் பழைய புராணங்களில் ஹரிஹர க்ஷேத்திரம் என்றும், பத்மநகரம் என்றும், திரிகாண்டகம் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. மொகலாய சக்கரவர்த்தி அவுரங்கசீப் இந்தத் தலம் ரமணீயமானஇடமென்று கண்டு குல்சனாபாத் என்று அழைத்திருக்கிறார்.

நாசிக் நகரத்தில் நுழைந்து அந் நகரையும்

அங்குள்ள கோயில்களையும் சுற்றிப் பார்க்குமுன் அங்கு ஓடும் கோதாவரி நதியின் பிரபாவத்தைத் தெரிந்து கொள்ளலாம். இக்கோதாவரி நதி கௌரியின் திருமணக் கோலத்தில் பிரமதேவரது கமண்டலத்திலிருந்து வழிந்திருக்கிறாள். அதன்பின் மகாபலிச் சக்கரவர்த்தியின் யாக சாலையில் தோன்றிய வாமனரது பாத கமலங்களைக் கழுவிப் பவித்திரம் அடைந்திருக்கிறாள். சகோதரி கங்கையுடன் சிவபெருமானது சடாமகுடத்திலேயே தங்கியிருக்கும் பெருமையும் பெற்றிருக்கிறாள். பகீரதன் தவத்துக்கு இரங்கிக் கங்கையை வழிய விட்ட சிவனே கௌதமர் விரும்பியபடி கோதாவரியைப் பிரம்மகிரியிலிருந்து பிரவகிக்கச் செய்திருக்கிறார். அதனாலேயே இவளைக் கங்கைக்கு மூத்த சகோதரி என்கின்றனர். விருத்த கங்கை என்றுகூட இவளுக்கு ஒரு பெயரையும் சூட்டியிருக்கின்றனர். ஹரித்துவார் சென்று அங்கிருந்து ராமேசுவரத்தில் உள்ள ராமநாதனுக்கு அபிஷேகம் செய்யக் கங்கையை எடுத்து வருபவர்கள் கோதாவரிக் கரைக்கு வந்ததும் தாம் கொண்டு வந்த கங்கையில் கொஞ்சம் எடுத்து அதனைக் கோதாவரியில் கொட்டி விட்டு அதற்குப் பதிலாகக் கோதாவரி நீரைக் கொஞ்சம் எடுத்து அதையும் கங்கை நீருடன் சேர்த்துக் கொள்வர். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ என்றபடி இப்படி அக்காளும் தங்கையும் கலந்து உறவாடி ராமநாதனுக்கு அபிஷேகம் செய்திருக்கிறார்கள் என்றும் அறிகிறோம்.

நாசிக் பஞ்சவடி நகரங்களுக்கு இடையே தட்சிணவாகினியாய் ஓடும் இந்தக் கோதாவரி பின்னர் கிழக்கு நோக்கித் திரும்புகிறது. நாசிக் கோதாவரிக்கு மேற்கிலும் தெற்கிலும் இருக்கிறது. பஞ்சவடி கிழக்கிலும் வடக்கிலும் இருக்கிறது. நாசிக் நகரத்திலிருந்து பஞ்சவடி செல்லக் கோதாவரியின் மேல் ஒரு நல்ல பாலம் கட்டியிருக்கிறார்கள். அது விக்டோரியா வாராவதி என்று அழைக்கப்படுகிறது. இது 1897ம் வருஷத்தில் கட்டப்பட்டது என்றும் இதைக் கட்டியவர் காசிநாதர் மகாதேவதத்தே என்றும் அறிகிறோம். இந்தப் பாலத்தைக் கடக்குமுன் இக்கரையிலே ஓர் அழகான கோயில் இருக்கிறது. அதுவே சுந்தர நாராயணன் கோயில். பெயருக்கு ஏற்ப அங்கு கோயில் கொண்டிருக்கும் சத்திய நாராயணப் பெருமான் அழகு வாய்ந்தவராக இருக்கிறார். ஸ்ரீதேவி பூதேவி சகிதம் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் நமக்குக் காட்சி தருகிறார். பின்னர் கங்கா தாஸ்வந்த் சந்திரசூடர் என்பவர் 1756ல் இக்கோயிலைக் கட்டினார் என்று தெரிகிறது. இந்தச் சுந்தர நாராயணன் சந்நிதியில் நாம் வணங்கிவிட்டுப் பாலத்தைக் கடந்து பஞ்சவடிப் பிரதேசத்தில் நுழையலாம். நாசிக் பஞ்சவடியில் மொத்தம் அறுபது கோயில்கள் வரை உண்டு. அத்தனைக்கும் உங்களை இழுத்தடிக்க விரும்ப வில்லை. முக்கியமான சில கோயில்களுக்கே அழைத்துச் செல்ல விரும்புகிறேன். பஞ்சவடித் தெருக்கள் எல்லாம் நெருக்கமானவை; சுத்தமாகவும் இராது. ஆதலால் பாலம் கடந்ததும் கோதாவரி கரைப் பக்கமே சென்று அங்குள்ள கோயில்களைக் காணலாம். அங்கு கோதாவரி



ராம குண்டம்

அன்னைக்கு ஒரு சிறிய கோயில் கட்டியிருக்கிறார்கள். அந்தக் கோயில் திறந்திருக்காது. வருஷம் ஒரு முறை மாசி மகத்தன்றுதான் திறந்திருக்கும். ஆதலால் சிலை வடிவில் உள்ள கோதாவரி அன்னையைத் தரிசிக்க வாய்ப்பு கிடையாது. இக்கோயிலை அடுத்தே பல குண்டங்கள். அங்கெல்லாம் ஆடவரும் பெண்டிரும் நீராடிக் கொண்டிருப்பர். கோதாவரி ஸ்நானத்தினால் எவ்வளவோ புண்ணியங்கள் சேரும் என்பார்களே, அங்கு நாமும் இறங்கி நீராட வேண்டாமா? ஆம், பாகீரதியாம் கங்கையில் அறுபதினாயிரம் வருஷங்கள் ஸ்நானம் செய்வதும் பிரகஸ்பதி சிம்ம ராசியில் இருக்கும்போது கோதாவரியில் ஒரு முறை ஸ்நானம் செய்வதும் ஒரே பலனைத் தரும் என்பார்கள். அதற்காக நாம் அந்த நன்னாள் வரும் வரை கோதாவரிக் கரையில் காத்திருக்க முடியுமா? அதற்கெல்லாம் காத்திராமல் விறுவிறு வென ஆற்றுக்குள் இறங்கி அங்குள்ள ராமகுண்டத்தில் ஒரு முழுக்குப் போட வேண்டியதுதான். இங்கு தனுஷ்குண்டம், சீதா குண்டம், லக்ஷ்மண குண்டம், அகல்யா குண்டம் என்று பல குண்டங்கள் இருந்தாலும் அதில் பிரதான குண்டம் ராமகுண்டம்தான். அதில் இறங்கி நீராடி விட்டால் எல்லாக் குண்டங்களிலும் நீராடிய பலன் கிடைக்கும்.

ராமகுண்டம் எண்பத்து மூன்று அடி நீளமும் நாற்பது அடி அகலமும் உள்ள ஒரு பெரிய தொட்டி. மூன்று நான்கு அடியே ஆழம் உள்ளது. அடியில் சிமெண்ட் தளம் போட்டு மணலைக் கொட்டியிருக்கிறார்கள். நீர் கலங்கியதாக இருந்தாலும் ஓடிக் கொண்டே யிருப்பதால் சுத்தமாகவே இருக்கும். தம்பதி சமேதரராகத் தல யாத்திரை வந்திருந்தால் இருவரும் ஒரே வஸ்திரத்தை உடுத்துக் கொண்டு குண்டத்தில் இறங்கி நீராட வேண்டும் என்பர். இதனையே ஏக வஸ்திர ஸ்நானம் என்றும் சொல்லுவர்.

இந்த ராம குண்டத்துக்கு எதிரே ஒரு மண்டபம் காந்திஜியின் அஸ்தியைக் கரைத்த இடத்தில் காந்திஜி ஞாபகார்த்தமாகக் கட்டி யிருக்கிறார்கள். கோதாவரிக்கு முன்னமேயே இருந்த புனிதத் தன்மை இன்னும் எவ்வளவோ புனிதம் அடைந்திருக்கிறது. இந்த ஞாபகார்த்தத்தினால். இந்த ராமர் குண்டத்துக்கு அருகே இரண்டு கோயில்கள். கோதாவரியின் இடது கரையில் இருப்பது கபாலேசுவரர் கோயில். பஞ்சவடியில் உள்ள கோயில்களில் எல்லாம்

### இயற்கை அழகு

நாம் இயற்கையைக் காட்டிலும் அழகான பொருள் எதையும் புனைய முடியுமா? ஆனால் இன்று நம்முடைய கண் கெட்டுப் போயிருக்கிறது. இயற்கையின் அழகை நம்மால் சரியாக உணர முடியவில்லை. நாம் கலையை இயற்கையினின்று வேறுபட்ட ஒரு பொருள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

— ராஜன்பாபு.

புராதனமான கோயில் இதுதான். பிரம்மாவின் தலைகள் ஐந்து என்றும், அதில் ஒன்றையே சிவன் கிள்ளி எறிந்தார் என்றும், அந்தக் கபாலமே அவருடைய கையில் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்றும், அந்தக் கபாலத்தை ஏந்தியே அவர் பிக்ஷாடனராக வருகிறார் என்பதும் புராணக் கதை. சென்னையில் உள்ள மயிலாப்பூரில் நாம் கபாலியைத் தரிசித்து வணங்கியிருக்கிறோம். அதே கபாலீஸ்வரரே இக்கோதாவரிக் கரையிலும் கோயில் கொண்டிருக்கிறார். இக் கோயிலுக்குச் செல்லச் சில படிகள் ஏற வேணும். கோயில் வாயிலில் செந்நிறத்தில் ஓர் அனுமானும் வெள்ளைப் பளிங்கில் ஒரு விநாயகரும் நின்ற கோலத்தில் காட்சி அளிப்பார்கள். இவர்களை வணங்கியபின்பே கோயிலுள் நுழைய வேணும். வழக்கமாக எல்லாச் சிவன் கோயில்களிலும் இருப்பது போல் இங்கு நந்தியம் பெருமான் இருக்க மாட்டார். பிரம்மாவின் சிரசைக் கிள்ளியதால் ஏற்பட்ட பிரமஹத்தி தோஷம் நீங்க நந்தியே குருவடிவில் வந்து உபதேசம் செய்தார் என்பதனால் குருவைத் தமக்கெதிரே வைத்துக் கொள்ளச் சிவன் விரும்பவில்லை போலும்.

இங்குள்ள கபாலேசுவரரை வணங்கிவிட்டுக் கோதாவரியைக் கடந்து எதிர்த் திசைக்கு வந்தால் அங்கு ஒரு விட்டோபா கோயில். பண்டரிபுரத்தில் இருக்க விட்டோபா இங்கு எழுந்தருளியிருப்பதன் காரணம் என்ன என்று அறிய விரும்புவோம். ஆம், இந்த விட்டோபா என்னும் பாண்டுரங்கன் பண்டரிபுரத்தை விட்டு வெளியே வர விருப்பமில்லாதவன் என்பதை ஹம்பியிலேயே பார்த்திருக்கிறோம். அந்த விஜயநகரத்து மன்னன் கிருஷ்ண தேவராயன் ஓர் அழகிய கோயிலைக் கட்டி அதில் விட்டோபாவை இருத்திவிட எண்ணினன் என்பதையும் இந்த விட்டோபா அங்கு செல்ல மறுத்து விட்டார் என்பதையும் முன்னரே அறிந்திருக்கிறோம். அந்த விட்டோபா இங்கு மாத்திரம் எப்படி வந்தார் என்று கேட்கத் தோன்றும் நமக்கு. அதற்கு ஒரு கதையையும் கேட்கலாம். பஞ்சவடியிலிருந்த விசுவநாத சர்மா என்பவர் யாத்திரிகர்கள் பலருடன் பண்டரிபுரம் சென்று பாண்டுரங்கனைத் தரிசிக்க விரும்பியிருக்கிறார். முதுமை காரணமாக உடலில் தளர்ச்சி தோன்றித் தொடங்கிய பயணத்தைத் தொடர்ந்து நடத்தச் சக்தியற்றவராக இருந்திருக்கிறார்; என்றாலும் பண்டரிநாதனும் விட்டோபாவைக் காணும் வரை உண்ணேன், உறங்கேன் என்று சபதம் செய்திருக்கிறார். அன்பன் ஒருவன் பட்டினி கிடக்கிறானே என்று அறிந்த விட்டோபா அந்த அன்பனுக்குத் தரிசனம் கொடுக்கப் பஞ்சவடிக்கே ஓடி வந்திருக்கிறார். வந்தவர் இங்கேயே நிரந்தரமாகத் தங்கியிருக்கிறார், நமக்கும் தரிசனம் தர.

கபாலீசுவரர் கோயிலைப் போல் பெரியதொரு கோயில்தான் காளேராமர் கோயில். அஞ்சன மேனியனை ராமனையே காளேராமர் —கறுத்தராமர் என்று அழைத்திருக்கிறார்கள். நல்ல மதில்களோடு கூடிய கோயில் அது. கருவறையில் நல்ல கறுப்புசலவைக்கல்லில் ராமர், சீதை, லக்ஷ்மணன் மூவரும் இருக்கிறார்கள். அல்லியாண்டு அமைந்த மேனி அழகன்ராமன் மாத்திரம் இல்லை. சிவந்த மேனியை உடைய சீதையுமே இங்கே அல்லியாண்டு அமைந்த அழகியாகத்தான் இருக்கிறாள். இக்கோயிலின் சபா மண்டபம் மிகப் பெரியது. 75 அடி நீளமும் 32 அடி அகலமும் உடையது. நாற்பது தூண்கள் அதைத் தாங்கி நிற்கின்றன. இக்கோயில் கட்டப் பன்னிரண்டு வருடங்கள் பிடித்தன என்றும் பத்து லட்சம் ரூபாய் செலவாயிற்று என்றும் சொல்லுகிறார்கள். இங்கு நிவேதனத்துக்கு மஞ்சள், குங்குமம், எள்ளு சர்க்கரைதான் பக்தர்கள் எடுத்துச் செல்கிறார்கள். எள்ளுருண்டையை உண்டே ராம, லக்ஷ்மணர், சீதை பஞ்சவடியில் காலம் கழித்தார்கள் போலும்.

இந்த ராமர் கோயிலுக்கு அருகில்தான் பஞ்சவடி என்று அந்தத் தலத்துக்குப் பெயர் வரக் காரணமாக இருந்த ஐந்து ஆலமரங்கள் இருக்கின்றன. அதற்குப் பக்கத்திலேதான் சீதா குகையென ஒரு குகையும் இருக்கும். குகை பூமி மட்டத்துக்கும் கீழ் இருக்கிறது. அறுபது அடி நீளம் உள்ள படிகளில் இறங்கிச் சென்றால் பத்தடி சதுரம் உள்ள ஓர் அறை இருக்கிறது. அங்கு ராமர், லக்ஷ்மணர், சீதை மூவரும் சிலை உருவில் இருக்கிறார்கள்.

இந்த நாசிக் பஞ்சவடியில் நாம் பார்க்க வேண்டிய இடங்கள் இன்னும் இரண்டு உண்டு. ஒன்று இரண்டு மைல் தொலைவில் உள்ள தபோவனம், மற்றொன்று, ஐந்து மைல் தூரத்தில் உள்ள பாண்டவ லேணி தபோவனம், கபில நதி வந்து கோதாவரி நதியுடன் சேரும் இடத்தில் இருக்கிறது. இங்குதான் மாரீசன் பொன் மானாக வந்து இராமனையும் சீதையையும் பிரித்தான் என்பார்கள். அவற்றின் நடுவிலே அஷ்ட குண்டம் என்னும் எட்டுக் குழிகள் இருக்கின்றன. அதில் ஒன்றின் பக்கத்திலேதான் லக்ஷ்மணன் சூர்ப்பணகையின் மூக்கைக் கொய்வதுபோல் ஒரு சிலை அமைத்திருக்கிறார்கள். அச்சிலை அழகானதாயில்லை. கலை அன்பர்கள் சென்று காண வேண்டிய இடம் தான் பாண்டவ லேணி என்னும் பஞ்ச பாண்டவர் குகை. மாமல்லபுரத்தில் உள்ள கல் ரதங்களுக்கும் பாண்டவர்களுக்கும் எவ்வளவு தொடர்பு உண்டோ அவ்வளவு தொடர்புதான் பஞ்சபாண்டவர்களுக்கும் இந்தப் பாண்டவலேணி என்னும் குடைவரைகளுக்கும். அடிவாரத்திலிருந்து முந்நூறு அடி உயரத்தில் இருபத்து நான்கு குடைவரைகள் வரிசையாக வடக்கு நோக்கி அமைந்திருப்பதைக் காணலாம்.



## பத்தாவது அத்தியாயம்

தனக்கு வந்திருக்கிற கடிதம் கல்லூரி முதல்வரிட மிருந்தோ, நிர்வாகியிடமிருந்தோதான் வந்திருக்க வேண்டுமென்று தன் தந்தை ஆவலோடு எதிர்பார்த்துத் தவிப்பது சத்தியமூர்த்திக்குத் தெரிந்தது. அப்பா மட்டுமில்லை; அம்மாவும் இப்படி எதிர்பார்த்துத்தான் தவிக்கிறாள். பிறரை எதிர்பார்த்துத் தவிக்க வைத்துவிட்டு வாழ்வதிலுள்ள வேதனையை அந்த விநாடியில் சத்தியமூர்த்தி மிக நன்றாக உணர்ந்தான். இதைக் காட்டிலும் அதிகமாக அவன் மனத்தை வேதனைப்படுத்தக் கூடிய வேறு செய்தி ஒன்றைத் தந்தை அப்போது அவனிடம் கூறினார்:

''முடிந்தால் இன்றைக்குச் சாயங்காலமாவது நாளைக்குக் காலையிலாவது கண்ணாயிரத்தைப் போய்ப் பார். நான் அவரிடம் நேற்றுப் பேசிக்கொண்டிருந்தபோது உன்னைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். இந்தச் சுற்று வட்டாரத்தில் கண்ணாயிரம் மனம் வைத்தால் சாதிக்க முடியாத காரிய

# பொன் விலங்கு

மணிவண்ணன்

யில்லை. மல்லிகைப்பந்தல் கல்லூரி வேலையைப்பற்றி உனக்கே நம்பிக்கையில்லை என்று தோன்றுகிறது. கண்ணாயிரம் யாரிடமாவது வேண்டியவர்கள் மூலம் சொல்லி உனக்கு ஒரு வேலை பார்த்துத் தர முடியும்! ஞாபகத்தில் வைத்துக் கொள். கண்ணாயிரத்தைப் போன்றவர்களின் தயவு நமக்கு என்றைக்கும் வேண்டும்.''

யாருடைய சமூக வாழ்க்கையைப் பற்றி மிகவும் போலியானதென்றும் பொய்யானதென்றும் எண்ணியெண்ணி அவன் வருத்தப்பட்டிருக்கிறானோ அவரிடமே அவனைப் போய் நிற்கச் சொல்கிறார் தந்தை. பொய்யாகவும் வஞ்சகமாகவும் வாழ்ந்தாலும், பணமும், காரியங்களைச் சாதிக்கிற திறமையும் உள்ளவர்கள் சமூகத்தை எவ்வளவிற்கு மயக்கிவிடுகிறார்கள் என்று எண்ணி வியந்தான் சத்தியமூர்த்தி. தன் தந்தையே கண்ணாயிரத்தைப் பெரிய மனிதராக மதிக்கும் அளவிற்குக் கண்ணாயிரம் மயக்கும் தன்மை உள்ளவராக இருக்கிறார் என்பதை அறிந்தபோது வேதனையும் ஏமாற்றமும் அவனுக்கு ஒருங்கே ஏற்பட்டன. மீண்டும் அந்த வாக்கியங்களைத்தான் நினைத்தான் அவன். 'நல்ல மனிதன் வாழ்க்கையில் தன்னுடைய ஒவ்வொரு தேவைக்காகவும் மட்டுமே போராட முடியாது. தன்னுடைய தேவைக்காகவும் நியாயத்துக்காகவும் சேர்ந்தே போராட வேண்டி யிருக்கும்.'




நேர்மையான உணர்ச்சிகளில் ஆழ்ந்து வாழத்தெரியாமல் ஏதோதானோ என்று மிதந்து கொண்டு வாழும் கண்ணாயிரத்தைப் போன்றவர்களைச் சத்தியமூர்த்தி வெறுத்தான். அவனுடைய தந்தையோ கண்ணாயிரத்தைப் போன்றவர்களின் தயவு என்றைக்கும் வேண்டும் என்கிறார்.

''என்ன? நான் சொல்லியது ஞாபகத்தில் இருக்கட்டும். சாயங்காலம் கண்ணாயிரத்தைப் போய்ப் பார்த்து விட்டு வா...'' என்று மறுபடியும் அவன் தந்தை அவனை வற்புறுத்தினார். தன் கையிலிருந்த அந்தக் கடிதத்தை— அதைச் சூழ்ந்து கொண்டு மணக்கும் மல்லிகைப் பூ மணத்தோடு சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு தந்தையின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் சத்தியமூர்த்தி. ''கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதித்தாலும் நான் கண்ணாயிரத்துக்கு முன்னால் போய்க் கையைக் கட்டிக் கொண்டு நிற்கமாட்டேன் அப்பா!'' என்று சொல்லிவிடுவதற்கு நாக்குத் துடித்தது. தான் அப்படி எதிர்த்துப் பேசினால் வாழ்க்கையில் பல காரணங்களால் ஏற்கெனவே நொந்து போயிருக்கிற தந்தையின் மனம் இன்னும் வேதனை கொள்ளும் என்று தன்னை அடக்கிக் கட்டுப் படுத்திக் கொண்டான் சத்தியமூர்த்தி.

கண்ணாயிரம் என்னும் பொய்ம்மைக்கு முன்னால் போய் நிற்கிற துர்ப்பாக்கியம் தனக்கு நேராமலிருப்பதற்காகவாவது உடனே பூபதி அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதிவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான் அவன்.

'அன்பின் பரிபூரணமான தன்மை கனிந்து நிற்கிறாற் போல ஓர் அழகிய சொல்லால் உங்களை அழைக்க விரும்பினேன்' — என்று பூபதியின் மகள் தனக்கு எழுதியிருந்ததை அப்போது நினைத்துக் கொண்டான் சத்தியமூர்த்தி. இன்னொருவரால் விரும்பப்படுகிறோம் என்றோ, இன்னொருவரால் அன்பு செய்யப்படுகிறோம் என்றோ தெரிய வரும்போது இயல்பாக உண்டாகிற உற்சாகம் அப்போது அவன் மனத்திலும் ஓரளவு ஏற்பட்டிருந்தது. சர்க்கஸில் ஓர் ஆளை ஓர் இடத்தில் நிறுத்திவிட்டு முகத்தையும், உடலையும் தவிரச் சுற்றிலும் போய்ப் பதிந்து கொள்கிறாற் போல நெருப்புடன்கூடிய கத்திகளை வீசி எறிவார்களே; அப்படிச் சிந்தனைகளாலும் சூழ்நிலைகளாலும், துன்பங்களே தன்னைக் குறி வைத்து வீசப் பெறுவதாக உணர்ந்து தவிக்கும் வேளையில் நடுவே ஒரு பூச்செண்டும் வந்து விழுந்ததென இந்தக் கடிதம் மல்லிகைப்பந்தலிலிருந்து வந்திருப்பதாக அவன் எண்ணினான். நண்பகல் நேரத்தின் ஒடுங்கி ஒய்ந்த அமைதி வீட்டில் சூழ்ந்திருந்தது. அப்பா ஊஞ்சல் பலகையில் படுத்துத் தூங்கத் தொடங்கியிருந்தார். 'கல்யாணி! கல்யாணி!' என்று கிணற்றடியிலிருந்து ஏழெட்டு முறை இளைய பெண்ணைப் பெயர் சொல்லி அழைத்து அலுத்துப் போன

# பாமாலிவ் லவண்டர்

## வசீகரிக்கும் நறுமணம்....

## பெருமிதத்தையும், அழகையும் அளிக்கிறது!




வசீகரம்...பாமாலிவ் லவண்டர் டால்கம
பெருமிதத்திற்கும், அழகிற்கும் உற்ற நண்பன்.
சிறிது பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொண்டால், அதன் இனிய நறுமணம்
உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள். பாமாலிவ்
உபயோகித்து எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும்,
நறுமணத்துடனும், அழகுடனும் விளங்குங்கள்.




**பாமாலிவ் டீலக்ஸ்—மயக்கும்**
**17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை!**

PT-G-6-TAM.

அம்மா மூத்த பெண் ஆண்டாளைக் கூப்பிட்டு, ''இந்தக் கல்யாணி எங்கே தான் இருக்கிறாள் என்று பார்த்துத் தொலையேன்'' என்று கேட்டதையும் அதற்கு மறுமொழியாக அம்மாவிடம் ஆண்டாள், ''கல்யாணியைக் கேட்கிறாயா அம்மா! அவள் இருக்கிற இடம் எனக்குத் தெரியும்! படுவூர் பரமசாமி எழுதிய 'பரிமள விலாஸ் படுகொலை'யில் ஏழாவது அத்தியாயத்தில் இருக்கிறாளம்மா அவள். இருபது



தடவை என்ன? எழுநூறு தடவை நீ தொண்டை கிழியக் கத்தினாலும் இப்போது அவள் காதில் விழாது...'' என்று பதில் சொல்லியதையும் அத்தனை துயரமான மனநிலையிலும் இரசித்தான் சத்தியமூர்த்தி. 'இவ்வளவு வறுமையினிடையிலும் இந்த வீட்டில் சிரிப்பும் நகைச்சுவையும் கூட மீதம் இருக்கின்றனவே' என்று எண்ணி வியந்து கொண்டான் அவன். குடும்பத்தை எதிர்நோக்கியிருக்கிற துன்பங்களும் பொருளாதாரத் தொல்லைகளும் தெரிந்தால் கல்யாணியால் நிம்மதியாகத் துப்பறியும் நாவல் படிக்க முடியாது. ஆண்டாளால் சிறிதும் வேடிக்கையாகப் பேச முடியாது. பிள்ளையின் மலர்ச்சியான எதிர்காலத்தை உருவாக்குவதற்கு வெள்ளிக் கிழமை சாயங்காலங்களில் தான் பேச்சியம்மன் கோவிலில் போடுகிற நெய் விளக்கும், திங்கள் கிழமை மாலை வேளைகளில் பழைய சொக்கநாதர் கோவிலைச் சுற்றுகிற சுற்றுக்களுமே போதுமென்று நினைத்துக் கொண்டிருக்கிற அம்மாவும் இனி அப்படி நினைக்கமாட்டாள். அப்பா, அம்மா, தங்கைகள் எல்லாருமே தான் சம்பாதித்துப் போடத் தொடங்கிய பின்புதான் அந்தக் குடும்பத்துக்கு விடியப் போகிறதென்று காத்திருப்பது அவனுக்குத் தெரியும். நெஞ்சின் இரத்தம் சொட்டச் சொட்ட அந்த வீட்டுக்கு உழைக்க வேண்டுமென்றுதான் ஒரு தீர்மானமான முடிவு செய்து கொண்ட மன நிலையோடு பூபதி அவர்களுக்குக் கடிதம் எழுத உட்கார்ந்தான் அவன்.

பகல் மூன்றரை மணிக்கு அந்தக் கடிதத்தை எழுதத் தொடங்கியவன், நாலரை மணி வரை — சரியாக ஒரு மணி நேரம் எழுதியிருக்கிறான். கடிதம் வரிக்கு வரி, வாக்கியத்துக்கு வாக்கியம் யாருக்கு எழுதப்பட்டதோ அவருடைய மனத்தைக் கவ்வுகிறாற்போல வாய்த்திருந்தது. பூபதி அவர்களின் மனத்தில் அந்தக் கடிதம் தன்னைப் பற்றி நிச்சயமாக ஒரு நல்ல முடிவுக்கு வரத் துணை செய்யும் என்ற முழு நம்பிக்கையோடுதான் சத்தியமூர்த்தி அந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்ப்பதற்குப் புறப்பட்டான். அதை எழுதி முடித்த போது அவன் மனம் குழப்பமின்றி நிம்மதியாயிருந்தது. ஆனாலும் ஒன்றை நினைக்கும்போது அவன் மனம் திரும்பத் திரும்பக் குமுறத்தான் செய்தது. 'பதவியையும், செல்வத்தையும் செல்வாக்கையும் தேடுவதற்குத் தகுதியும் நேர்மையான திறமையும் மட்டுமே இன்றைய வாழ்க்கையில் போதுமானவையாக இருப்பதில்லை. சிந்திப்பதற்குத் தேவையான திறமை வேறாக இருக்கிறது. வாழ்வதற்குத் தேவையான திறமை வேறாக இருக்கிறது. என்னைப் போல் எம். ஏ. முதல் வகுப்புத் தேர்ச்சியும், வாழ்க்கையைப் பற்றிய நல்ல இலட்சியங்களும் உள்ளவர்கள் ஓர் உத்தியோகத்துக்காக, வயிற்றை நிரப்பிக் கொள்ள வழி செய்யும் ஒரு வெறும் உத்தியோகத்துக்காக இப்படி நாயாக அலைகிறோம். கண்ணாயிரத்தைப் போல் அறிவையும் முதலீடு செய்யாமல், பணத்



தையும் முதலீடு செய்யாமல், வெறும் சாமர்த்தியத்தையும், சூழ்ச்சியையுமே முதலீடு செய்து வாழ்க்கையில் மேலும் மேலும் வென்று கொண்டு போகிறவர்களும் இதே உலகில்தான் இருக்கிறார்கள். அவர்களுடைய சாமர்த்தியம் அப்பாவைப் போன்ற நல்லவர்களைக் கூட மயக்கிக் கவர்ந்து விடுகிறதே!' என்று மனம் புழுங்கியபடி தபாலாபீஸின் கல் கட்டிடத்திற்குள் நுழைந்து கடிதத்தை தபாலில் சேர்த்துவிட்டு அவன் வெளியேறிய போது, ''இந்த ஊரில்தான் இருக்கிறாயா சத்யம்? பார்த்து வெகு நாட்களாயிற்றே?'' என்று குமரப்பன் எதிர்கொண்டான். தனக்கு மிகவும் நெருங்கிய தோழனைக் கல்லூரி நாட்களிலிருந்தே பழகியிருக்கும் அந்த நண்பனை மனத்தின் தவிப்பு நிறைந்த இந்த வேளையில் சந்தித்தது சத்தியமூர்த்திக்கு மிகவும் ஆறுதலாயிருந்தது. குமரப்பனுடைய கைத்திறன் விந்தையானது. எந்தச் சித்திரக் கலாசாலையிலும் கற்காமலே அவன் கைகள் இழுக்கும் கோடுகளிலே சிரிப்பும் அழுகையும், சீற்றமும் வேட்கையும் தெரியும்படி விதம் விதமான மனித உருவங்கள் பிறந்தன. பொழுது போக்காகவும் விளையாட்டாகவும் தொடங்கிய இந்தக் கலை, கல்லூரி நாட்களிலேயே அவனைச் சிறந்த வல்லுநனாக்கியிருந்தது. நகைச்சுவைச் சித்திரங்களையும் கேலிச் சித்திரங்களையும் அவனுடைய சுறுசுறுப்பான கைகள் நொடிப் பொழுதில் பக்குவமாக வரைந்து முடித்தன. அவன் கரங்கள் காகிதத்தில் வேகமாகவும், சாமர்த்தியமாகவும் விளையாடின. சத்தியமூர்த்தியோடு கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோதே படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு ஏதோ ஒரு பத்திரிகையில் கார்ட்டூனிஸ்ட் ஆகப் போய் விட்டான் குமரப்பன். அந்த வேலையும் அவனாகத் தேடிப் போய்அடைந்ததல்ல. தானாகவே அவனைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தது அந்த வேலை. கல்லூரிப் பொருட்காட்சியில் அவன் வரைந்து வைத்திருந்த சுவையான கேலிச் சித்திரங்கள் சிலவற்றைக் கண்டு வியந்த அந்தப் பத்திரிகையாசிரியர் அவனிடம் அமைந்திருந்த இந்த நுணுக்கமான திறமையைக் கண்டுபிடித்து அவனைத் தேர்ந்தெடுத்தார். குமரப்பன் வெறும் தொழில் நோக்குடனோ பணத்துக்கு ஆசைப்பட்டுத் தவிக்கும் மன நிலையுடனோ 'கார்ட்டூனிஸ்ட்' ஆகவில்லை. இயற்கையாகவே அவனுடைய கண்களும், மனமும் இந்த உலகத்தையும் இதன் நிகழ்ச்சிகளையும் குறும்புத்தனமான சுறுசுறுப்போடுபார்க்கும் தன்மை வாய்ந்தவை. புத்திக் கூர்மையும் அவனுக்கு அதிகம். ''பூகோள நூலின்படி உருண்டை வடிவமான இந்த உலகம் சுற்றிக் கொண்டிருப்பதாக ஒரு காட்சியை வரைந்து விட்டு அதைப் பார்த்துக் கொண்டு நிற்கும்போதே அதைப் படைத்த படைப்புக் கடவுளின் தலை சுற்றுவதாகவும் ஒரு கார்ட்டூன் எழுதித் தேவர்கள் எல்லாம் படிக்கிற பத்திரிகை ஏதாவது ஒன்று இருந்தால், அதற்கு அனுப்பிப் பிரசுரம்



செய்யச் சொல்ல வேண்டுமடா சத்தியம்!'' என்று அடிக்கடி சொல்வான் குமரப்பன். இப்படி ஏதாவது குறும்புத்தனமாகச் சொல்லாமல் சும்மா இருக்க முடியாது அவனால்.

''மனிதனுடைய நெஞ்சம் சதா காலமும் பணம் காசு பற்றித்தான் எண்ணித் தவித்துக் கொண்டிருக்கும் என்று நெஞ்சின் மேல் பணப் பைக்கு இடம் விட்டுச் சட்டை தைக்கத் தொடங்கிய முதல் தையல்காரன் தெரிந்து கொண்டிருக்கிறான் பார்த்தாயா?'' என்று இப்படி ஏதாவது ஆழமான குறும்புத்தனமுள்ள வாக்கியத்தை முன்னும் பின்னும் தொடர்பில்லாமல் இருந்தாற் போலிருந்து திடீரென்று சொல்வான் அவன். குமரப்பனோடு பழகுவதே ஒரு சுவாரஸ்யமான அனுபவம். அவனைச் சந்தித்துப் பேசத் தொடங்கினால் அந்தச் சந்திப்பையும் பேச்சையும் முடிக்க வேண்டுமென்றே தோன்றாது. இந்த உலகமே தன்னுடைய கேலிக்கும் அலட்சியத்துக்கும் குறும்புப் பேச்சுக்குமாக மிகவும் சுதந்திரமாய் விமரிசனம் செய்வதற்கென்றே படைக்கப்பட்டிருப்பது போலப் பாவித்துக் கொண்டு பேசும் கலைத்திமிர் குமரப்பனிடம் உண்டு. இந்தக் கலைத் திமிரும் கூட விரும்பத் தக்க விதத்தில் இருக்குமே ஒழிய வெறுக்கத் தக்க விதத்தில் இருக்காது. எப்போதும் போலக் குமரப்பனைப் பார்த்ததும் அவனுடைய விசித்திரமான குணங்கள் எல்லாம் சத்தியமூர்த்திக்கு ஞாபகம் வந்தன.

''என்னடா இது? ஏதோ சந்திக்கக் கூடாத ஆளை எதிரே சந்தித்துவிட்டாற் போல அப்படியே மலைத்துப் போய் நின்று விட்டாய்? தபாலாபீசுக்கே நேரில் தேடி வந்து சிரத்தையாகப் பெட்டியில் போட வேண்டிய ஏதோ ஒரு கடிதத்தை எடுத்துக் கொண்டு இந்த வெய்யிலில் நீயே வந்திருக்கிறாய்!....'' என்று சிரிப்பும் குத்தலுமாகப் பேச்சை ஆரம்பித்தான் குமரப்பன்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை குமரப்பன்! திடீரென்று உன்னை எதிரே பார்த்ததும் ஒரு பெரிய சர்வகலாசாலையையே நேருக்கு நேர் சந்தித்தாற் போலாகி விட்டது. கடிதத்தைத் தபாலில் சேர்த்து விட்டு அப்படியே இரயில்வே மேற்பாலம் வழியாக எங்காவது உலாவப் போகலாமென்று வந்தேன். நல்ல நேரத்தில்தான் நீயும் வந்து சேர்ந்திருக்கிறாய்'' என்று சத்தியமூர்த்தி பதில் சொல்லிக் கொண்டு வந்த போது பாதியிலேயே அவன் பேச்சைத் தடுத்து நிறுத்திவிட்டு, ''அது சரி! நீ என்னை ஒரு சர்வகலாசாலையோடு ஒப்பிடுவதை ஒரே ஒரு காரணத்துக்காக நான் மறுக்கிறேன். நான் தெரிந்து கொண்டிருக்கிற பல விஷயங்களை உலகத்தில் எந்தச் சர்வ கலாசாலையிலும் சொல்லிக் கொடுப்பதற்குத் தயாராயிருக்க மாட்டார்கள்'' எனச் சொல்லிச் சிரித்தான் குமரப்பன். அவனுடைய அந்தக் கர்வத்தைப் பார்த்துச் சத்தியமூர்த்தியாலும் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. தெருவில் நடந்து போய்க் கொண்டிருக்கிறபோதே எதிரில் சந்திக்கிற ஒவ்வொருவரது பார்வையையும், முகத்தையும், நடையையும் கூட விமரிசனம் செய்து சிரித்துப் பேசிக் கொண்டே நடப்பான் குமரப்பன். எதையாவது தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற குறும்புத்தனமான ஆர்வத்தோடு அவன் கண்கள் சதா அலைந்து கொண்டிருக்கும். அப்போது அவர்கள் நடந்து போய்க் கொண்டிருந்த பாதையில் எதிர்ப் பக்கமிருந்து 'ஆன் டெஸ்ட்' என்று போர்டு மாட்டியபடி ஒரு லாரி வந்துகொண்டிருந்தது.

''லாரி — கார்களுக்குப் போடுகிற மாதிரி சில ஆட்களுக்கும் இந்த 'போர்டு' மாட்ட வேண்டுமடா சத்யம்! சரியாக வாழ்வதற்குப் பழகாமல் தாறுமாறாக வாழ்கிற சிலருடைய வாழ்க்கையும் 'ஆன் டெஸ்ட்'—ஆகத்தான் இருக்கும். முழுப் பக்குவமும் பெறாமல் வாழ்வதற்கும், பிறரிடம் பழகுவதற்கும் கற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிற சில மனிதர்கள் கூட மார்பில் 'எல்' போர்டு மாட்டிக் கொள்ள வேண்டும். 'போர்டாக மாட்டிக் கொள்ள முடியாவிட்டாலும் சட்டைப் பித்தானிலாவது எனாமலில் 'எல்' பதித்துக் கொள்ளலாம்'' என்று அரட்டையைத் தொடங்கினான் குமரப்பன்.

'''குத்துவிளக்கு' எப்படி இருக்கிறது குமரப்பன்?'' என்று அவன் வேலை பார்க்கிற பத்திரிகையைப் பற்றி விசாரிக்கலானான் சத்தியமூர்த்தி.

''ஆகா! கேட்க வேண்டுமா? சுடர் விட்டுப் பிரகாசமாக எரிந்துகொண்டிருக்கிறது. அச்சு இயந்திரங்களும் மனிதர்களும் வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறார்கள். ஆசிரியர் போனவாரம் தான் பெர்லினிலிருந்து திரும்பினார். இந்த வாரம் ஜப்பானுக்குப் போவார் போலிருக்கிறது. இது வரை வாரம் ஒன்றிற்கு மொத்தம் — நாலு பக்கம் எட்டுக் கார்ட்டூன்கள் போட்டுக்கொண்டிருந்தேன். கார்ட்டூன்கள் மிகவும் நன்றாக இருப்பதால் அடுத்த வாரத்திலிருந்து ஆறு பக்கத்துக்குப் பன்

விரண்டு கார்ட்டூன்கள் போடவேண்டும் என்று ஏற்பாடாகி யிருக்கிறது. எங்கள் பத்திரிகைக்கு என்னடா குறை? போதும் போதும் என்று சொன்னாலும் கேட்காதபடி கண்ணுயிரம் விளம்பரங்களைத் தேடிக் கொண்டு வந்து குவிக்கிறார். விளம்பரங்கள் பணத்தைத் தேடிக்கொண்டு வந்து குவிக்கின்றன. பணம் சௌகரியங்களைத் தேடிக் கொண்டு வந்து குவிக்கிறது.''

''இவ்வளவுதானு? இன்னும் ஏதாவது உண்டா?''

''உண்டு! தாராளமாக உண்டு. விற்பனையைப் பெருக்குவதற்காக ராசி பலன் போடலாமென்று ஓர் அபிப்பிராயம் இருக்கிறது. சினிமா நட்சத்திரங்களைப் பற்றி இன்னும் கொஞ்சம் விரிவாக வந்தால் நல்லதென்று ஏஜெண்டுகள் ஆசைப் படுகிறார்கள். துவையல் அரைப்பதைப் பற்றி வாரம் ஒரு பக்கம் வந்தால் பெண்களுக்குத் திருப்தியாயிருக்குமாம்.''

''போதும்! போதும்! ....நான் ஏதோ ஒரு வார்த்தைக்குக் கேட்டால் நீ என்னென்னவோ வம்பு வளர்த்துக்கொண்டு போகிறாயே? உன் குறும்புப் பேச்செல்லாம் என்றைக்குத்தான் ஒடுங்கப் போகிறதோ?''

-இதைக்கேட்டுக் குமரப்பன் சத்தியமூர்த்தியின் முகத்தை நிமிர்ந்து பார்த்து விட்டுச் சிரித்தான். சிரித்துக் கொண்டேசொன்னான்:



''இந்தக் குறும்புத்தனம்தான் என்னுடைய தொழிலுக்கு மூலதனம் அப்பனே! இதை விட்டு விட்டு நான் எங்கே போவது?''

''பால் டபோரி என்று ஓர் மேற்கு நாட்டு ஆசிரியன் முட்டாள்தனத்தையே ஒரு கலையாக (தி ஆர்ட் ஆஃப் ஃபாலி) வருணித்துப் புத்தகம் எழுதியிருக்கிறன். தெரியுமா குமரப்பன்?''

''ஒரு தடவை மட்டுமல்ல; இரண்டு மூன்று தடவை அந்தப் புத்தகத்தை நான் படித்திருக்கிறேனடா சத்யம். 'பைத்தியக்காரத்தனம், நவநாகரிகம், முட்டாள்தனம், இந்த மூன்று அம்சங்களுக்குள்ளேயே மனித வர்க்கத்தின் முழுச் சரித்திரத்தையும் நான் சொல்லி முடித்து விடுவேன்' — என்று அந்தப் புத்தகத்தைப் 'பால் டபோரி' ஆரம்பித்திருப்பான்...''

''எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால் 'பால் டபோரி' அந்தப் புத்தகத்தில் மனித வாழ்க்கையை எந்தக் கோணத்திலிருந்து பார்த்திருக்கிறானே அதே கோணத்திலிருந்து மட்டும்தான் நீயும் நம்மைச் சுற்றி உள்ளவர்களின் வாழ்க்கையைப்பார்க்கிறாய் குமரப்பன்!''

''மகிழ்ச்சியோடு ஒப்புக் கொள்கிறேனடா, சத்தியம்! எனக்கு வாழ்க்கையை அந்தக் கோணத்திலிருந்துதான் பார்க்கத் தெரியும். கண்ணுயிரத்தைப் போல் மற்றவர்களை முட்டாள்களாக்கிக் கொண்டு வாழ்கிற போலிப் புத்திசாலிகள் உள்ள உலகத்தில் வாழ்க்கையை நீயும் நானும் வேறு விதமான கோணத்திலிருந்து பார்த்துப் பயனில்லை அப்பனே! பயனில்லை.''

''எனக்கு உத்தியோகம் தேடிக் கொள்வதற்காக நான் இன்று மாலைக்குள் கண்ணுயிரத்தைப் போய்ச் சந்திக்க வேண்டுமென்று என் தந்தையேசொல்லியிருக்கிறார், குமரப்பன்! நான் என்னடாவென்றால் என் தந்தையின் கட்டளையையும் கண்ணுயிரத்தையும், உத்தியோகத்தையும், அறவே மறந்துவிட்டு உன்னோடு உலாவப் புறப்பட்டிருக்கிறேன். இந்தக் கண்ணுயிரம் மாதிரி மனிதர்களைத் தேடிக்கொண்டு போய் எதிரே நிற்க வேண்டு மென்று நினைக்கும் போதே எனக்கென்னவோ மிகவும் அருவருப்பாக இருக்கிறது, குமரப்பன்....''

''நீ இவர்களைப் போன்றவர்களைப் பார்த்து அருவருப்புத்தான் அடைகிறாய்! நானும் 'பால் டபோரி'யும் இவர்களைப் போன்றவர்களையும் பார்த்து இரசிக்கிறோம். உனக்கும் எனக்குமுள்ள வேறுபாடு இதுதான் சத்யம்!''

அப்பால் இரயில் நிலையத்துக்கும்— இப்பால் பஸ் நிலையத்துக்கும் நடுவே அமைந்திருந்த அந்த மேற்பாலத்தில் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள் அவர்கள். வழக்கமாக மாலை வேளைகளில் அந்த இடத்தில் பாய்ந்து வீசும் காற்று இன்னும் சுகமாக வீசிக் கொண்

டிருந்தது. அந்த இடத்திலிருந்துபார்த்தால் வழக்கமாகத் தெரிகிற நகரின் பெரிய கட்டிடங்களும் கோபுரங்களும் இன்று ஏதோ ஒரு விதமான புது மாறுதலோடு அழகாகத் தெரிவன போலிருந்தன. சென்னைக்குச் செல்வதற்காக ஒவ்வொன்றாகத் தெற்கேயிருந்து வரப்போகும் எக்ஸ்பிரஸ் இரயில்களுக்கான கூட்டமும், கலகலப்பும் அப்போதே மதுரை நிலையத்தைத் திருவிழாக் கோலம் கொள்ளச் செய்திருந்தன. இரயில் நிலையத்தின் பல நிற விளக்கு ஒளிகளும் என்ஜின்கள் அங்குமிங்குமாகப் போய் வரும் ஓசைகளும், மற்றொரு பக்கம் தெற்கே தென்னை மரங்களும் வயல்களும், குடிசைகளும் அவற்றினூடே யாரோ வகுத்த கடினமான நியதிகளைப் போல ஆரம்பமாகித் தெற்கே போகப் போக வேறு வேறு திசைகளில் விலகும் இரயில் தண்டவாளங்களுமாக அந்த இடம் அந்த வேளையில் தனிப்பட்டதோர் அழகுடனே காட்சி யளித்துக் கொண்டிருந்தது.

பாலத்தின் மேற்குப் புறத்து இறக்கத்தின் கனமான இரும்பு வேலியில் சாய்ந்தபடி இரயில் நிலையத்துக்கு எதிர்ப் பக்கம் பார்த்தவாறே சத்தியமூர்த்தியும் குமரப்பனும் பேசிக் கொண்டிருந்தார்கள். விரிவுரையாளர் பதவிக்காக மல்லிகைப் பந்தலுக்குத் தான் போய் விட்டு வந்ததையும், மல்லிகைப் பந்தல் கல்லூரி அதிபர் பூபதி அவர்களைச் சந்தித்து நீண்டநேரம் பேசிக் கொண்டிருந்ததையும் நெருங்கிய நண்பன்என்ற முறையில் குமரப்பனிடம் கூறினான் சத்தியமூர்த்தி. மல்லிகைப் பந்தல் ஊரையும், கல்லூரியையும் தனக்குப் பிடித்திருக்கிறது என்பதையும் சத்தியமூர்த்தி தன் நண்பனிடம் கூறினான்.

''கல்லூரி விரிவுரையாளராகத்தான் வேலை பார்க்க வேண்டும் என்று நீ நினைக்கிற பட்சத்தில் அதை உள்ளூரிலுள்ள கல்லூரிகளில் ஏதாவதொன்றில் தேடிக் கொள்ளேன். செலவு சிக்கனமாக இருக்க முடியும் என்பதற்காகவே இந்த யோசனையை உனக்கு நான் சொல்லுகிறேன். மல்லிகைப் பந்தலைப் போல் வாழ்க்கைச் செலவுகளும், வாழ்க்கைத்தரமும் உயர்ந்த மலை நாட்டு நகரமொன்றில் வேலை பார்க்கச் சென்றால் அங்கே நீ தங்கிக் கொள்வதற்கும், சாப்பிடுவதற்குமே உன்னுடைய வருமானத்தில் பெரும் பகுதி செலவாகி விடும். ஊரில் இங்கு உன்னை நம்பிக் காத்திருக்கும் பெற்றோர்களுக்கு நீ அதிகமாக ஒன்றும் அனுப்ப முடியாமற் போனாலும் போகலாம். உன் வீட்டு நிலைமை எனக்குத் தெரியுமாதலால் இதை நான் உன்னிடம் சொல்ல வேண்டியதாயிற்று. மற்றக் கல்லூரிகளைவிட மல்லிகைப் பந்தல் கல்லூரியில் சம்பள விகிதங்கள் நிச்சயமாக அதிகப்படியாக இருக்கும் என்று எல்லாரும் சொல்லுகிறார்கள். இருந்தாலும் நீ வெளியூரிலும், உன் வீட்டில் மற்றவர்கள் இங்குமாக வசிப்பதனால் இரட்டைச் செலவுதான் ஆகும்! செலவையோ, வருமானத்தையோ காரணமாக முன் நிறுத்திச் சொல்லுகிற யோசனைகளை நீ விரும்ப மாட்டாய் என்று நான் அறிவேன். ஆனாலும் இதைச் சொல்ல வேண்டிய கடமை எனக்கு உண்டு சத்தியம்!'' என்றான் குமரப்பன்.

''உள்ளூரிலுள்ள கல்லூரிகளை யெல்லாம் பற்றி என்னுடைய அப்பிராயம்



என்ன வென்று உனக்குத்தான் தெரியுமே குமரப்பன்? வாழ்க்கையிலுள்ள பெரிய வேதனை இந்த இடம்தான். நாம் எப்படி எங்கே வாழ விரும்புகிறோம் என்பதும் உலகம் எங்கே எப்படி வாழ வேண்டுமென்று நம்மை எதிர்பார்க்கிறது என்பதும்தான் ஒரு மனிதனுடைய வாழ்க்கையின் இரண்டு எல்லைகள்.''

''இப்படிச் சொல்வதால் என்னைப் பற்றித் தவறாகப் புரிந்துகொள்ளாதே, சத்யம்! உன்னுடைய குடும்பத்தின் வசதிக் குறைவுகளை நினைத்தே நான் இந்த யோசனையைச் சொன்னேன். நீ மல்லிகைப் பந்தல் கல்லூரிக்குப் போவதைப் பற்றி எனக்கு எந்தவிதமான மறுப்புமில்லை. நானும் அப்படி ஒரு நல்ல கல்லூரியில் நீ பணி புரிவதைத்தான் எதிர்பார்க்கிறேன், வரவேற்கிறேன். அதே சமயத்தில் நடைமுறை உலகிலுள்ள துன்பங்களையும் நீ மறந்து போய் விடக் கூடாது. மனிதனுடைய உயர்ந்த இலட்சியம் என்பது சில மலைகளின் பசுமையைப் போலத் தொலைவிலிருந்து பார்ப்பதற்குக் கவர்ச்சியாய்த் தோன்றி அருகில் நெருங்கியதும் ஒன்றுமில்லாததாய்ப் போய் விடுகிறது. உன்னைப் போன்ற சிந்தனை வளமோ, படிப்பின் ஆழமோ எனக்கு இல்லை. ஆனாலும் உலக அநுபவத்தை முன் வைத்து நான் சில யோசனைகளை உனக்குச் சொல்லுகிறேன். அவற்றை நீ அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதில்லை'' என்று குமரப்பன் சொல்லியபோது அவனுடைய குரலில் எந்த விதமான செயற்கைக் குறும்பும் இல்லை. உண்மையான அநுதாபமும், இரக்கமுமே அந்தக் குரலில் ஒலித்தன. இதன் பின்பும் அதே இடத்தில் நின்று நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். கல்லூரி நாட்களில் நடந்த முக்கியமான நிகழ்ச்சிகளைப் பற்றி, 'உள்ளூர் அரசியல்' நிலவரம் பற்றி, நிகழ்காலத் தமிழ் இலக்கியத்தின் நிலை பற்றி, விவாதமும்பேச்சுமாக நேரம் போவது தெரியாமல் வளர்ந்தது உரையாடல். இரயில் நிலையத்து மேற்பாலத்திலிருந்து புறப்பட்டுக் குமரப்பனும், சத்தியமூர்த்தியும் டவுன் ஹால் ரோடு வழியாகத் திரும்பிக் கொண்டிருந்த போது எதிரே கண்ணாயிரத்தின் கார் எங்கோ வேகமாகப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தது. கண்ணாயிரமும், கண்ணாயிரத்தின் காரும், அந்தக் கார் நிறைய வேறு யாராவது மனிதர்களும் போய்க் கொண்டிருந்தால் சத்தியமூர்த்தியோ, குமரப்பனோ அப்போது கவலைப்பட்டிருக்கப் போவதில்லை. கண்ணாயிரத்தின் கார் மதுரை மாநகரத்தில் உள்ள மிகமிகப் புராதனமான பொருள்களில் ஒன்று. நான்கு டயர்களின் நடுவிலும் குச்சி குச்சியாகக் கம்பிகள் சிலிர்த்துக் கொண்டு பார்ப்பதற்குக் காச நோயாளி போல் காட்சியளிக்கும் அந்தக் காரை இலட்சம் கார்களுக்கு நடுவிலும் தனியாகக் கண்டு பிடித்து விடலாம். வேறு சௌகரியமான கார் வைத்துக் கொள்ள வசதியோ, வளமோ இல்லாததால் கண்ணாயிரம் இதை வைத்துக் கொண்டிருந்தார் என்று சொல்லி விடுவதற்கு இல்லை. அவருக்கு ஒரு பிரமை உண்டு. இந்தக் காருக்கும் தமக்கும் ஏதோ ஓர் இராசி இருப்பதாகவும் இதில் புறப்பட்டுப் போனால்தான் தம்முடைய காரியங்கள் வெற்றிகரமாக முடியும் என்றும் நம்பி இந்தப் பழைய காரிலேயே பணத்தைக் கொட்டிச் செலவழித்துப் புதுப் புது வசதிகளைச் செய்து கொண்டிருந்தார் அவர். இந்த விதமான திருக் கோலத்தோடு கண்ணாயிரத்தின் கார் டவுன் ஹால் சாலையில் அவர்களுக்கு எதிரே வந்தபோது அதைப் பார்க்க வேண்டும் என்ற முயற்சியில்லாமல் தானாகவே அவர்கள் கண்களில் தனக்கே உரிய முக்கியத்துவத்தோடு அது தென்பட்டு வைத்தது. கண்ணாயிரம்தான் காரை ஓட்டிக் கொண்டு சென்றார். அவருக்கருகே முன் ஸீட்டில் தன் தந்தை அமர்ந்திருந்ததைக் கண்டுதான் சத்தியமூர்த்தி அப்போது அதிக வியப்படைந்தான்.

''கண்ணாயிரத்தோடு முன்னால் உட்கார்ந்து போகிறவர் உன் தந்தைமாதிரி இல்லை? நீ அந்தக் காரைக் கவனித்தாயா, சத்யம்?'' என்று குமரப்பன் வேறு அவனைக் கேட்டு விட்டான்.

''பார்த்தேன். அப்பா மாதிரித்தான் இருக்கிறது'' என்று அந்த உண்மையை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாத வேதனையோடு ஏற்றுக்கொண்டு நலிந்த குரலில் குமரப்பனுக்கு மறுமொழி கூறினான் சத்தியமூர்த்தி. 'என்ன காரியத்துக்காக அப்போது கண்ணாயிரத்தோடு அப்பா புறப்பட்டுப் போகிறார்?' என்று சிந்தித்தது அவன் மனம். 'தன்னைக் கலந்து கொள்ளாமல் கண்ணாயிரத்தின் மூலம் தன்னுடைய வேலைக்குத் தந்தை தாறுமாறாக ஏதேனும் ஏற்பாடு செய்து விடப் போகிறாரே' என்று எண்ணிய போது அவன் மிகவும் மனம் கலங்கினான். மேல மாசி வீதியில் குமரப்பனுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டுத் தனியே தன் வீட்டை நோக்கி நடந்த போதும் இதே கலக்கம்தான் அவனுள் வளர்ந்து கொண்டிருந்தது. (தொடரும்)

# பத்தினிக் கோட்டம்

### அத்தியாயம் ஐம்பத்தேழு

## கூலவாணிகனின் உதவி

செந்தமிழ்க் கோதையைச் சென்டாக்கிச் சிரமேற் சூடிப் போற்றி வளர்த்த பைந்தமிழ்ப் பெருநகர் மதுரையின் வட எல்லையை நெருங்கிக் கொண்டிருந்தது ஒற்றைக் காளை பூட்டிய ஒரு கூண்டு வண்டி. உறையூரிலிருந்து மதுரை நோக்கிச் செல்லும் பெருவழியிலே விரைந்து சென்ற அந்த வண்டியில் தானிய மூட்டைகள் அடுக்கப் பெற்றிருந்தன. அவை பனிச் சாரலில் நனைந்து விடாதிருக்கும் பொருட்டோ என்னவோ வண்டியின் பின்புறம் தாழை மடல்களாலான படல் ஒன்று சார்த்தப் பெற்றிருந்தது. முதிய வயதினனாகத் தோற்ற மளித்த கூலவாணிகனொருவன் வண்டியின் முன்னால் அமர்ந்து வெகு வேகமாக அதை ஓட்டிச் சென்று கொண்டிருந்தான்.

பனிப் படலம் கலைந்து பரிதி காலூன்றும் அந்த இளங் காலை வேளையிலே, பின்னால் கடந்து போன பெருவழியின் தொலை தூரத்துக்கு அப்பால் சிறுமலை என்னும் குன்றுத் தொகுதி வானிலிருந்து இழிந்த மேகக் கூட்டம்போல் மங்கலாகத் தோற்றம் அளித்தது. அதனைச் சார்ந்த பிரதேசமெங்கும் மாவும், பலாவும், கமுகும், தெங்கும், வாழையும், கரும்பும் செழித்தோங்கி வளர்ந்திருந்தன. உள்ளியும், மஞ்சளும், கம்பும், சாமையும், கிழங்கு வகைகளும் வளமாகப் பயிராகி யிருந்தன. இந்த இனிய பகற் சூழலைப் பார்த்ததாலும், காலை இளம் பரிதியின் கதகதப்பை ஏற்றதாலும் உற்சாகமடைந்த வண்டிக்காளை, தன் கழுத்து மணியையும் கால் சலங்கைகளையும் ஆட்டிக் குலுக்கிக் கொண்டு முன்னிலும் அதி விரைவாக ஓட ஆரம்பித்தது.



முதுகுப் புறமிருந்த மூட்டைகள்மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்த கூலவாணிகன் வண்டியின் உள்ளே மெல்ல எட்டிப் பார்த்தான். பிறகு ஆழ்ந்த பெருமூச்சு விட்டுத் தலையசைத்தவாறு திரும்பி, வண்டிக் கூண்டின்

ஜெகசிற்பியன்

விளிம்புச் சட்டத்துக்கு நகர்ந்து கொண்டான். அவனுடைய அதட்டல் மிரட்டல் இன்றியே வண்டிக்காளை ஓடியது.

கடந்த இரண்டு நாட்களாகத் தொடர்ந்து பயணமாகி வருவதால் ஏற்பட்ட களைப்பும், காலைக் கதிரவனின் கள்ளொன்ற வெய்யில் உறைப்பும் அவனை வெகுவாகச் சோர்வடையச் செய்தன. ஆயினும், மதுரை நகர் நெருங்கி வருவதைக் கண்டு சிறிதே தென்பு பெற்றவனாய்ப் பார்வையை மேலே உயர்த்தினான்.

முருகக் கடவுளின் படை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம் மயூர வண்ணக் கொண்டலாக உயர்ந்தோங்கி நிற்பது தெரிந்தது. அந்தப் பரங்குன்றத்தையே சிறு பொழுது பார்த்துக் கொண்டிருந்த கூலவாணிகன் இடப் பக்கமாகத் திரும்பி, நிலம் பாரித்துக் கிடந்த கீழ்த் திசை வான் விளிம்பை நோக்கினான். அங்கே, குமர வடிவேலனே பொன் மயில் வாகனமேறிப் பூப்பிரதட்சணம் வருவது போல் எழிலார்ந்த ஒளி வட்டமாய்ப் பொற்கதிர் விரித்துக் கரகரவென மேலேறிக் கொண்டிருந்தது, காலை இளஞ் சூரியன். அந்தச் செங்கோளப் பிழம்பைப் பார்த்து முருகப்பிரானையே தரிசித்தாற் போன்ற பரவசத்துடன் கைகூப்பிய வாணிகன் மெல்லத் தன் பார்வையை வேறுபக்கம் செலுத்தினான். இப்போது அழகப்பெருமான் பள்ளிகொண்ட திருமாலிருஞ் சோலை சியாமள வண்ண மலையாய் நெடிதுயர்ந்து நிற்பது அவனுக்குப் புலனாயிற்று. அமர ஓவியமாக விளங்கிய அந்த அழகர்மலையை மகிழ்ச்சிப் பெருக்குடன் பார்த்துக்கொண்டு வந்த அவனது பார்வையை ஏதோ ஒரு கருந்திரை குறுக்கிட்டு மறைத்தாற் போல் இருக்கவே சட்டெனத் திரும்பினான்.

நான்மாடக் கூடல் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற மதுரைமா நகரின் வடப்புற நுழைவாயிற் கோபுரம் அவனெதிரே வானோங்கிக் காட்சியளித்தது.

பண்டு பெருமை வாய்ந்த பழம் பாண்டி நாட்டின் கோநகராம் மதுரை மண்ணை மிதித்ததுமே பெரிதும் உற்சாகமடைந்த கூலவாணிகன் வண்டியின் உட்புறமாகத் திரும்பி, ''மதுரை நகரை அடைந்து விட்டோம்'' என்று குதூகலம் நிறைந்த குரலில் கூறிக் கொண்டே வண்டியை வேகமாகச் செலுத்தினான். வடதிசை வாயிற்கோபுரத்தைக் கடந்து ஜன நடமாட்டம் மிகுதியாக இருந்த ஒரு பெரிய வீதியினுள் புகுந்து விரைந்தது வண்டி.

அது அறுவை வணிகர் வீதி. மீன் பிடிப்போரும், உப்பு வாணிகரும், கள், பிட்டு, அப்பம், வாசனைப் பண்டம், இறைச்சி முதலானவை விற்போரும் அங்கு வாழ்ந்தனர். அவர்களது இல்லங்கள் எளிமையில் அழகு கண்டு தூய்மையுடன் விளங்கின.

அந்தப் பெரிய வீதியைக் கடந்து வேறொரு வீதியில் திரும்பியது வண்டி. அது கைவினைஞர் வீதி. அங்கே பொற்கொல்லர், தச்சர், கருமார், மட்கலம், மட்பாவை செய்வோர், மாலை கட்டுவோர், நெசவாளர், தையற்காரர் ஆகியோர் வசித்தனர். அவர்களுடைய இல்லங்கள் ஒவ்வொன்றும் ஒரு கலைக் கோயில் போல் அத்தனை எழிலுற அமைந்திருந்தது.

வண்டி, மணிவணிகர் வீதியில் சென்று கணிகையர் வீதியில் புகுந்து, பின்னர் கூலவாணிகர் வீதியை வந்தடைந்தது. அங்கே, பல வகை தானியங்களை விற்போர் வசித்தனர். கூலவாணிகனின் வண்டியைப் பார்த்த அந்தத் தானிய வியாபாரிகள் தத்தமது கடைகளில் மூட்டைகளைக் கொண்டு வந்து இறக்கும்படி கையொலி எழுப்பி அழைத்தனர். பல்லவ நாட்டுச் சோழ மண்டலத்திலிருந்து அவன் வருகிறான் என்பதைத் தெரிந்து கொண்டே அவர்கள் அவ்வாறு வரவேற்றனர். சோழ மண்ணில் விளையும் தானியங்கள் உயர்ந்த ரகமானவை என்பதாலும், அவற்றை வாங்கி விற்பதிலே அதிக லாபம் கிடைக்கும் என்பதாலுமே அவர்களிடையில் போட்டி ஏற்பட்டது.

ஆனால் அந்தக் கூலவாணிகனோ தன் வண்டியை நேரே ஓட்டிக் கொண்டு போய் வீதியின் கோடியில் ஒருபுறமாக நிறுத்தி விட்டுக் கீழே இறங்கிச்சுற்று

### ஹஜாரிபாக் சிறையில் :

புத்தகங்கள் சம்பந்தமாக மட்டும் சில தடைகள் இருந்தன. போலீசாராவது மாஜிஸ்திரேட்டாவது பார்த்து அனுப்பாமல் எங்களுக்கு எந்தப் புத்தகமும் கிடைக்காது. யாரோ ஒருவர் கல்லூரிகளில் கற்பிக்கப்பட்டு வந்த பொருளாதாரப் பாடப் புத்தகம் ஒன்று வேண்டும் என்று கேட்டார். 'டெக்ஸ்ட் புக் ஆப் பொலிடிகல் எகானமி' என்பது அதன் பெயர். அதன் பெயரில் 'பொலிடிகல்' (அரசியல்) என்ற சொல் இருந்ததால் அதைக் கொடுக்க அதிகாரி உடன்படவில்லை. ஆனால் 'ஏ. பி. சி. ஆப் கம்யூனிஸம்' (கம்யூனிஸத்தின் அடிப்படைத் தத்துவங்கள்) என்ற புத்தகத்தை அனுமதிக்கத் தயங்கவில்லை! —ராஜன் பாபு



முற்றும் பார்த்தான். பிறகு புன்முறுவல் பூத்த வறாய் வண்டியின் பின்றல் சென்று, ''சேர வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டோம்! வாருங்கள், அம்மணி!'' என்று வாஞ்சையுடன் சொல்லிக் கொண்டே, சாத்தியிருந்த தாழம் படலே அகற்றிறன். மறு கணம், அவ் வண்டியினுள்ளே பரவலாக அடுக்கப் பெற்றிருந்த தானிய மூட்டைகளின் மேல் எளிய ஆடை அணிகளுடன் சோகப் பதுமையாய் ஒடுங்கி முடங்கித் தலே குனிந்து உட்கார்ந்திருந்த இளங்கோப்பிச்சி மிரட்சியுடன் அங்குமிங்கும் பார்த்தவாறு கீறே இறங்கினுள்.

''எங்கள் மதிப்புக்குரிய ஆபத்து தவி இளங்காரிக்குடையாளின் தங்கையாருக்கு என்றுல் இந்தச் சிறு உதவி செய்ய முடிந்ததே என்பதற்காகப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன். ஆனுல், அவர் செல்ல வேண்டிய வீதி வரை அழைத்துப் போய் விட முடியாத நிலேயில் இங்கேயே இறக்கி விட்டு விட்டதற்காக வருந்தவும் செய்கிறேன். சுமை ஏற்றிய பார வண்டிகள் இந்த வீதியோடு நின்றுவிட வேண்டும் என்பது இந் நகரின் போக்கு வரத்து விதிகளில் ஒன்று. அதை மீறிச் செல்வது தண்டனேக்குரிய குற்றமாகும். எனவே தான்...'' என்று தணிந்த குரலில் தயக்கத்துடன் இழுத்துச் சொல்லி நிறுத்திறன் கூல வாணிகன்.

கலவரம் அடைந்த நிலேயில் நின்று கொண்டிருந்த இளங்



கோப்பிச்சி, ''வருந் தாதீர்கள், ஐயா! இவ்வளவு தூரம் என்னை அழைத்து வந்து விட்டதற்காகவே உங்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்'' என்று நன்றியுணர்ச்சியோடு கூறினாள்.

கொஞ்ச நேரம் யோசித்த கூலவாணிகன் சட்டென்று திரும்பி, ''தங்கையார் செல்ல வேண்டியது அடுத்துள்ள இராஜ வீதிதானே?'' என்று வினவினான்.

இதற்குமறுமொழி ஏதும் கூறாமல் சிறு பொழுது குழம்பித் தவித்த இளங்கோப்பிச்சி, 'ஆமாம்' என்று மெல்லத் தலையசைத்தான்.

''அப்படியானால் புறப்படுங்கள், அம்மணீ! நீங்கள் செல்ல

வேண்டிய இல்லம் வரை நானும் துணையாக வருகிறேன்.''

''வேண்டாம், ஐயா! ஆலம்பாக்கத்திலிருந்து எனக்கு உங்கள் வண்டியில் இடம் கொடுத்து ஏற்றி வந்ததால் நீங்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்கள் போதும். இனியும் உங்களை வீண் சிரமத்துக்கு உள்ளாக்க நான் விரும்பவில்லை.''

''ஓ.... நேற்றுக்காலை உறையூர் சுங்கச் சாவடியிலிருந்த சளுக்கிய வீரர்கள், நான் ஏற்றி வந்த தானிய மூட்டைகளில் சிலவற்றைப் பலவந்தமாகப் பறித்துக் கொண்டதையும், பிறகு என்னைச் சோதனை செய்வதற்காக வெகு நேரம் அடைத்து வைத்திருந்ததையும் சொல்கிறீர்களா? அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு நாட்டின் பிரஜைகளான நாம் அது போன்ற கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகித்தானே தீரவேண்டும், அம்மணீ! அந்த வரையிலாவது என்னையும் உங்களையும் தொடர்ந்து பயணம் செய்ய அநுமதித்தார்களே, அது நம் பூர்வ ஜன்ம பலன் என்றுதான் சொல்ல வேண்டும்! வாருங்கள், தாயே! நீங்கள் செல்ல வேண்டிய இல்லம் வரையில் அழைத்துப் போய் விட்டால்தான் என் மனம் அமைதியடையும்!''

''இல்லை, ஐயா! இனி நானே என் உறவினர் இல்லம் தேடிக் கால்நடையாகச் சென்று விடுவேன். நீங்கள் உங்களுடைய அலுவல்களைக் கவனிக்கப் போகலாம்'' என்று கண்டிப்பாக மறுக்கும் குரலில் கூறினாள் இளங்கோப்பிச்சி.

''ஆகட்டும், அம்மணீ! என் அலுவல்களை முடித்துக்கொண்டு நான் திரும்பும்போது நீங்களும் வருவீர்களா? அல்லது நான் போகும் வழியிலே உங்கள் இல்லத்துக்குச் சென்று ஏதேனும் சேதி சொல்ல வேண்டுமா?''

''அவசரச் சேதி ஒன்றும் இல்லை. நான் இங்கிருந்து ஆலம்பாக்கத்துக்குத் திரும்பிப் போக இரண்டு மூன்று மாதங்களாவது ஆகலாம்.''

''இங்கே யாருடைய இல்லத்தில் தங்கியிருக்க வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறியலாமா, தாயே?''

''என் தந்தையாரின் தமக்கையை மணந்த அத்தையன்பர் ஒருவர் இந்த மதுரை நகரில் இருக்கிறார்; அவரைப் பார்க்கத்தான் வந்தேன்.''

''உங்கள் அத்தையன்பர் இங்கே என்ன உத்தியோகம் பார்க்கிறார்?''

''அவர் பெரிய நாட்டாண்மைக்காரர்!'' என்றாள் அவள்.

''அப்படியானால் சரி; நான் விடை பெற்றுக் கொள்கிறேன். கவனமாக வீடு போய்ச் சேருங்கள் அம்மணீ!'' என்று சொல்லிக் கரம் கூப்பினான் கூலவாணிகன்.

அஹிம்சை

எதிராளியின் அநியாயத்தைத் தான் பொறுத்துக் கொள்ளாவிட்டால் அது மேலும் அதிகத் துன்பத்தை விளைவிக்கும் என்று அஞ்சிக் கொண்டு அதை ஒருவன் பொறுத்துச் செல்வானானால் அது அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட மனோபாவம் ஆகாது. அது கோழைத்தனமேயாகும். அஹிம்சையில் துன்பத்தைச் சகிப்பதற்கு அஞ்சுவது என்பதும் இருக்காது. நம் கட்சி நியாயத்தைச் சார்ந்தது என்ற முழு நம்பிக்கையும் அதை ஆதரிப்பதற்கு வேண்டிய இடமான மன உறுதியும் எதிர்க்குத் துன்பம் விளைவிக்கக் கூடாதென்கிற உறுதியான எண்ணமும் இருந்தால்தான் அஹிம்சை கைகூடும்.

—ராஜன் பாபு

பிரதிபலன் கருதாது பிறருக்கு உதவி செய்வதிலே பேரின்பம் காணும் நற்குடிப் பெருமகனான அந்த வணிகனுக்குத் தன் மனப்பூர்வமான நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்து விட்டு அங்கிருந்து புறப்பட்ட இளங்கோப்பிச்சி, அடுத்திருந்த இராஜ வீதியில் இறங்கி நடக்கலானாள்.

விசாலமான அந்த இராஜ வீதியின் இருமருங்கும் வானுயர்ந்த மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும் அருங்கலை நுணுக்க வேலைப்பாடுகளுடன் எழும்பி நின்றன. பாண்டியப் பேரரசின் அமைச்சர் குழாமும், அறிஞர் பெருமக்களும், தீந்தமிழ்ப் புலவர்களும், ஐம்பெருங் குழுவும், எண்பேராயமும் அரசாங்க உயர்தர அதிகாரிகளும், படைத் தலைவர்களும் அந்த வீதியில் தான் வசித்து வந்தனர். ஆங்காங்கே தேர் நிற்கும் நிலைகளும், பட்டி மண்டபங்களும், உரை மேடைகளும், கலா மன்றங்களும், கல்விச் சாலைகளும், கடிகைகளும், அறக்கோட்டங்களும், ஆதுர சாலைகளும் நிர்மாணிக்கப்பட்டு விளங்கின. ஒவ்வொரு மாளிகையின் உச்சியிலும் கயல் கொடி கம்பீரமாகக் காற்றில் அசைந்தாடிப் பறந்து கொண்டிருந்தது.

இப்படி எழிலார்ந்த கோலத்தில் காட்சியளித்த அவ்வீதியின் ஓரமாகவே நடந்து கொண்டிருந்தாள் இளங்கோப்பிச்சி. அவள் மனம் ஒரேயடியாகக் கலக்கமடைந்திருந்தது. அந்தத் தெளிவற்ற நிலைகைப்பால் கால்களும் பின்னவிட்டன. ஆயினும் தன்னைச் சமாளித்துக்கொண்டு மேலே நடந்துகொண்டேயிருந்தாள்.

ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்திலிருந்து மதுரை அரண்மனைக்

குப் போய்விட வேண்டும் என்று அவள் பல முறை எண்ணியது உண்டு. அன்றொரு நாள் அவளுடைய தந்தையின் கட்டளைப்படி அவளைப் பழையாறைக்கு அழைத்துப் போவதற்காக வந்த ஆபத்துதவி சம்புவரையனைப் பெருவள நல்லூர்ச் சேதியக் கலைஞரிடம் அனுப்பி வைத்தாளே, அப்படி அவனை அனுப்பியதற்குக் காரணமே அதுதான். பழையாறைக்குப் போக விரும்பாத அவள் தன் அத்தையாரான பாண்டிய மகாராணி மங்கையர்க்கரசியிடம் வந்து சேர்ந்துவிட வேண்டும் என்று திட்டமிட்டாள். அதன்படி அன்று விடியற் சாம நேரத்தில் அந்த இல்லத்திலிருந்து புறப்பட்ட போதுதான் சற்றும் எதிர்பாராத விதமாக ஆந்திர இளவரசியின் உத்தரவு பேரில் அங்கு வந்து கதவைத் தட்டிய சளுக்கிய வீரர்கள் அவளையும் அநந்தமதியையும் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று விட்டனர். அதனால் அவளுடைய அந்த முதல் முயற்சி தடங்கலாகி நின்று போயிற்று. பிறகு பல்லவபுரத்திலிருந்து திரும்பி வந்ததும், முதலில் செய்த முடிவுப்படி மதுரைக்குப் போகலாமா, அல்லது தன் தந்தையிடமே பழையாறைக்குச் சென்று விடலாமா என்ற குழப்பத்தில் அங்கேயே சில தினங்கள் இருந்தாள். இறுதியில், மூன்று நாட்களுக்கு முன்பு நடந்த அந்த வேதனை மிக்க நிகழ்ச்சிகள் அவளது முதல் முடிவையே மேற்கொள்ளச் செய்துவிட்டன.

ஆமாம்; அளவற்ற அன்பாவேசத்துடன் கோவிந்தவர்மனை அவள் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, அவனோ அவளைத் திரும்பியும் பார்க்காமல் புறக்கணித்துச் சென்றது அவளுக்குப் பேரதிர்ச்சியாகி . விட்டது. அந்த அதிர்ச்சியுடன் அன்றிரவு யாரோ ஒரு மர்ம மனிதனால் எறியப்பட்ட ஓலையில் வரையப் பெற்றிருந்த சேதிகள் அவளை மேலும் குழப்பிக் கலக்கி விட்டன. தன் தந்தையின் பயங்கரப் போக்கையும், தனது எதிர்கால வாழ்க்கையை முறித்துப் போடத் தக்க அவரது புதிய முடிவையும், பல்லவ நாட்டை விழுங்கி விட்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டிய நாட்டின் மீது படையெடுக்க ஆயத்தம் செய்வதையும் அறிந்து மனம் குமுறிய அவள், அந்த நாசகரமான முயற்சிகளைத் தகர்த்தெறியும் பொருட்டு உடனே மதுரைக்குப் போயாக வேண்டும் என்ற முந்தைய முடிவுக்கே வந்தாள். தன் அத்தையன்பரான பாண்டியப் பேரரசர் நெடுமாறனை நேரில் சந்தித்து அவ்விவரங்களைத் தெரிவித்தால் அவர் அவற்றுக்குச் சரியான பரிகாரம் கண்டுவிடுவார் என்று அவளுக்குத் தோன்றியது. அத்துடன் பாண்டிய நாட்டின்மேல் சளுக்கியர் போர் தொடுக்கவிருக்கும் இரகசியச் சேதியை அவரிடம் முன்னதாகத் தெரிவித்து எச்சரிக்க வேண்டியது தன் தலையாய கடமை என்றும் எண்ணினாள். எனவே, அநந்தமதியிடம் அந்த முடிவைக் கூறினால் அவள் அதற்கு ஏதாவது தடை சொல்லித் தன்னைப் போக விடாமல் தடுத்து விடுவாள் என்று அஞ்சி அவளிடமும் சொல்லிக் கொள்ளாமல் அன்றிரவே ஆலம்பாக்கம் இல்லத்தை விட்டு வெளியேறி விட்டாள். அந்தச் சமயம், அதிர்ஷ்டவசமாக மதுரைக்குத் தானிய மூட்டைகளை வண்டியில் ஏற்றிக் கொண்டு அந்தக் கூலவாணிகன் அவ்வழியே வரவே, தன்னை மதுரை நகர் வரையில் கொண்டு போய் விட்டுவிடும்படி அவனிடம் தயவாகக் கேட்டுக் கொண்டாள். அவளை ஆபத்துதவி இளங்காரிக்குடையானின் தங்கை என்று எண்ணிய கூலவாணிகனும் அவளது வேண்டுகோளுக்குச் செவி சாய்த்துத் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டு வந்து, இதோ இந்த மதுரை நகரில் சேர்ப்பித்து விட்டும் போய் விட்டான். இங்கே வந்த பிறகுதான் அவளுக்கு ஒரு பெரிய விஷயம் புலனாயிற்று.

அவள் பழையாறைச் சோழ இளவரசி என்பது இந்நகரில் உள்ள யாருக்குமே தெரியாது. பாண்டியப் பேரரசருடைய மைத்துனரின் மகள் என்று தன்னை யாரிடமாவது அறிமுகப்படுத்திக் கொள்ளவும் அச்சமாயிருந்தது. அப்படிச் சொன்னால் அதை யாராவது நம்புவார்களா என்று அவளுக்கே சந்தேகமாகவும் இருந்தது. அத்தனை எளிய பரிதாபக் கோலத்திலே அவள் இங்கு வந்து சேர்ந்திருந்தாள். இந் நிலையில், மாபெரும் பாண்டிய மன்னரின் அரண்மனைக்கு அவளால் எவ்வாறு செல்ல முடியும்? அப்படிச் செல்ல முயன்றாலும் அவளை எதிரி நாட்டு வேவுகாரி என்று எண்ணிச் சிறைப்படுத்தி விடுவார்களே! விசாரணைக்குப் பின் உண்மை வெளிப்பட்டு எல்லாம் நல்லபடியாக முடியும் என்றாலும், அது வரையில் அநுபவிக்க வேண்டிய கஷ்டங்களையும் அவமானங்களையும் தாங்கும் மனத் துணிவு வேண்டுமே? மேலும், இங்கு வந்துள்ள காரியம் அத்தனை நாட்பட்டுச் சாவதானமாகச் செய்யக் கூடியதும் அல்ல; பாண்டிய மன்னரிடம் உடனடியாகத் தெரிவித்து உரிய நடவடிக்கை எடுக்கச் செய்ய வேண்டிய அவசர விஷயங்கள்! இந்த இக்கட்டான பிரச்னையை எங்ஙனம் சமாளிப்பது....?

இராஜ வீதியைக் கடந்து அரண்மனைக்குச் செல்வதற்கென அமைந்த

# ரோஜாவின்

# நறுமணம் ...

ஒரு பவுண்டு ரோஜா எண்ணெய் தயாரிப்பதற்கு
ஏறக்குறைய 4000 பவுண்டு ரோஜாக்கள் வேண்டி
யிருக்கிறது. ஆனால் கோத்ரெஜ் ந. 1 லிருந்து
ரோஜாக்களின் ஆனந்தமயமான நறுமணத்தை
நீங்கள் பெறலாம். ரோஜாவின் இனிய நறுமணம்
பெரிய–சைஸ் ந. 1ல் மிகச்சிறந்த பாணியில்
சேர்க்கப்பட்டு இயந்திரத்தினால் உரையிடப்பட்டுள்ளது

புதிய ஆராய்ச்சிகள், நூதன முறைகள், நவீன
இயந்திரங்கள், பல ஆண்டுகளில் ஏற்பட்ட சிறந்த
தொழில் நுட்ப அறிவு இவைகளெல்லாம்,
கோத்ரெஜின் மற்ற சோப்புகளுடன், இந்த முதல் தாவர
எண்ணெய் ஸ்நான சோப்பின் தொன்று தொட்டு
ஏற்பட்ட சுத்தம் செய்யும் தன்மையையும்,
உடம்புக்கு இதமளிக்கும் குணங்களையும்
இன்னும் அதிகரிக்கச் செய்திருக்கின்றன.




கோத்ரெஜ்

ந. 1 ஸ்நான சோப்

பெரிய – சைஸ்

சிறந்தது, சுதேசியும் கூட




சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்

கேட்டுப்
பெறுங்கள்
ஆயுள் இன்சூரன்சுப்
பாலிசி

# இன்றே!

இது அவசரம். உங்களுக்குத் தேவை. ஆயுள் இன்சூரன்சு. தயங்குவதற்கோ, தாமதிப்பதற்கோ நேரமல்ல இது. ஆயுள் இன்சூரன்சு அளிக்கும் பாதுகாப்பு உங்களுக்கு—உங்கள் குடும்பத்திற்கு—எந்நாளும் தேவை. ஆயுள் இன்சூரன்சு மூலம் சேமிக்கப்படும் உங்கள் சேமிப்பு நாட்டின் பாதுகாப்பு முயற்சிகளுக்கும் தேவை. தாமதிக்காமல் எல்.ஐ.சி. முகவரை (ஏஜெண்டை) நாடுங்கள். உங்கள் தேவைக்குகந்தப் பாலிசியினைத் தேர்ந்தெடுத்துத்தர உதவுவார் அவர். ஆயுள் இன்சூரன்சு பற்றி அவரிடம் உடனே கலந்து பேசுங்கள். காலந் தாழ்த்தாமை சாலச் சிறந்தது. உங்களுக்காகவும், உங்கள் குடும்பத்திற்காகவும், நாட்டிற்காகவும் எடுத்திடுவீர் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி.



## ஆயுள் இன்சூரன்சு

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.

ASP LIC 96 174

தனிப் பெரும் சாலை யொன்றில் ஏறி நின்ற இளங்கோப்பிச்சி, தொலைதூரத்துக்கு அப்பால் வெள்ளிப் பனி மலை போல் தோற்றமளித்த—'புகழாபரணம்' என்னும் பெயர் கொண்ட — மாபெரும் பாண்டியர் அரண்மனையைத் திகிலுடன் பார்த்தவாறு திகைத்து நின்றாள். அழகும் கம்பீரமும் உறுதியுமாக விளங்கிய அந்தப் பிரும்மாண்டமான அரண்மனையையும், அதைச் சார்ந்த கோட்டை கொத்தளங்களையும், அவற்றைக் காவல் புரிந்து நிற்கும் ஆயிரக்கணக்கான யவன, சோனக வீரர்களையும் பார்த்தபோது அவளையறியாமலே அவள் மனத்தில் ஒருவித அச்சம் சூழ்ந்து கொண்டது. அந்த இமய வரை போன்ற அரண்மனையுடன் தன் பழையாறை அரண்மனையை ஒப்பிட்டு நோக்கி உள்ளூறக் குன்றிக் குறுகினாள். இத்தகைய பிரமிப்பு உணர்ச்சியாலும் தாழ்மை உணர்ச்சியாலும் தளர்வடைந்து நின்ற அவள் தான் வந்த காரியத்தையே சிறிது சிறிதாக மறக்கத் தலைப்பட்டாள்.

'சீர ஆலோசியாமல் திடீரென இங்கு புறப்பட்டு வந்தது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனமாகி விட்டது!'

தன்னையே நொந்துகொண்டு கண் கலங்கிய இளங்கோப்பிச்சி, அந்தச் சாலையில் நிற்கவும் அஞ்சியவளாய் அங்கிருந்து திரும்பி வேறொரு சிறிய பாதையில் இறங்கி நடக்கலானாள்.

## அத்தியாயம் ஐம்பத்தெட்டு

# திருக்கைக் கோட்டி

எங்கே போவது, என்ன செய்வது என்ற தெளிவே இல்லாமல் கால் போன போக்கில் நடந்துகொண்டிருந்த சோழ இளவரசி களைப்பும் சோர்வுமாக ஓரிடத்தில் நின்று சுற்றுமுற்றும் பார்த்தாள்.

பகல் போது கழிந்து மந்தாரத் திரை போர்த்த மாலை நேரமும் வந்துற்றிருப்பதை இப்போதுதான் அவளால் உணர முடிந்தது. அத்துடன் அவள், சைய மலையில் பிறந்த வையைப் பெரு நதியின் திருமருத முன்துறையோரம் வந்து நின்று கொண்டிருப்பதையும் அறிந்தாள்.

'ஆடல் அறியா அரிவை போலவும் ஊடல் அறியா உவகையள் போலவும் வேண்டு வழி நடந்து' வனப்புடன் சென்று கொண்டிருந்த வையை ஆற்றையே வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றாள் இளங்கோப்பிச்சி.

அந்தத் திருமருத முன்துறையைச் சார்ந்து பழமையான சிவன் கோயில் ஒன்று இருப்பது தெரிந்தது. அங்கே ஏதோ திருப்பணி வேலைகள் நடந்து கொண்டிருப்பது போல் தோன்றியது.

திகிலடைந்து நின்ற இளங்கோப்பிச்சி, 'அந்தக் கோயிலுக்குப் போய் இறைவனைத் தரிசித்தாலாவது மனத்தில் தெளிவும் தைரியமும் பிறக்கும்; அதனால் மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதற்கு ஏதாவது மார்க்கம் தோன்றினாலும் தோன்றும்' என்று எண்ணியவளாய், ஆற்றில் இறங்கி மனச் சோர்வும் உடற் சோர்வும் நீங்க நீராடி விட்டு எழுந்து கோயிலை நோக்கி நடந்தாள்.

அது மண்டளியாலான சிறியதொரு கோயில்தான். ஆனால் மிக்க வனப்புடன் அது விளங்கியது. அந்தக் கோயிலின் வலப்புறம் — திருநிலையறையைச் சார்ந்தாற்போல்—புதிதாக ஒரு மண்டபம் கட்டும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. மற்றொரு புறம் செப்பேடுகளில் ஏதோ எழுதும் வேலையும் தடைபெற்றுக் கொண்டிருந்தது. இந்த வேலைகளை, ஸ்ரீகாரியஞ் செய்வார், ஸ்ரீ காரியக் கண்காணி நாயகம் முதலான கோயில் அதிகாரிகள் வெகு கவனமாக மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தனர்.

கோயிலை அடைந்த இளங்கோப்பிச்சி அங்கு நிர்மாணமாகிக் கொண்டிருந்த புதிய மண்டபத்தைப் பார்த்தவாறு சற்று நேரம் நின்றிருந்தாள். அதனைக் கட்டும் வேலையில் ஈடுபட்டிருந்த கல்லூர்களின் உரையாடலிலிருந்து அம் மண்டபம் எடுப்பிக்கப்படுவதற்கான சில விவரங்கள் அவளுக்குத் தெரியலாயின.

அந்த மண்டபத்தின் பெயர் 'திருக்கைக் கோட்டி' என்பதாகும். சைவ சமயத்தின் ஜீவ மலர்களாகத் தோன்றி அதற்குப் புத்துயிரும் புது மணமும் ஊட்டிச் சென்ற ஞானமா வள்ளல்களான திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் பாடியருளிய நீந்தமிழ்த் திருப்பதிகப் பாக்கள் அனைத்தையும் சேகரித்துச் செப்பேடுகளில் பொறித்துப் பூசனைக்குரிய புனிதப் பொருளாக வைத்துப் போற்றிக் காக்கவே அந்தத் திருக்கைக் கோட்டி என்னும் மண்டபம் அங்கே எடுப்பிக்கப்பட்டு வந்தது. அதற்காகவே தமிழ் வீரகர் பலர் சேர்ந்து பட்டய எழுத்தாளரைக் கொண்டு திருப்பதிகப் பாக்களைச் செப்பேடுகளிலே பொறிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். இந்த அரிய திருப்பணியை மேற்கொண்டு

நடத்தச் செய்திருப்பவர் பாண்டிய மகாராணி மங்கையர்க்கரசியே ஆவார். அவருடைய யோசனையாலும் பொருளுதவியாலுமே அந்த அற்புத மண்டபம் உருவாகிக் கொண்டிருந்தது.

தன் அத்தையார் செய்து வரும் அறப் பணியின் மேன்மையை அறிந்து வியப்பும் மகிழ்ச்சியும் பெருமையும் கொண்ட இளங்கோப்பிச்சி கோயிலுக்குச் செல்லத் திரும்பினாள்.

இந்தச் சமயம், கோயில் குருக்கள் ஒருவர் அவசரமாக வெளியே வந்து அங்கு நின்றிருந்த ஸ்ரீகாரியக் கண்காணி நாயகத்தை அணுகி, ''ஐயா, இறைவனுக்கு அந்தி பூசை நடத்த வேண்டிய நேரம் நெருங்கி விட்டது; இன்னமும் திருப்பதிக ஓதுவார் வரக் காணோமே!'' என்று கவலை தோய்ந்த பரபரப்புடன் முறையிட்டார்.

ஸ்ரீகாரியக் கண்காணிநாயகம் தம் அருகில் நின்ற ஸ்ரீகாரியஞ் செய்வாரைக் கோபத்துடன் நோக்க, அவர் தயங்கித் தத்தளித்துக் கைகளைப் பிசைந்தவாறு, ''மன்னியுங்கள், ஐயா! நம் திருப்பதிக ஓதுவாருக்கு இன்று உடல் நலம் சரியில்லை என்று கேள்விப்பட்டேன். அதனால் அவர் வர இயலாமலாகி விட்டிருக்கலாம். இன்றைய ஒரு பொழுது மட்டும் திருப்பதிக விண்ணப்பம் இல்லாமலே அந்தி பூசையை நடத்தி முடிக்கச் சொல்லுங்கள்!'' என்று பணிவும் குழைவுமாக வேண்டிக்கொண்டார்.

''அது எப்படி முடியும் ஐயா? இங்கே அந்தி சந்தி பூசைக்குமுன் திருப்பதிக விண்ணப்பம் செய்தே ஆக வேண்டும் என்பது அரசியாரின் கட்டளை ஆயிற்றே! அதை வழக்கமாக ஏற்று நடத்தி வரும்போது இன்று மட்டும் அது இல்லாமல் எப்படிப் பூசையை நிறைவேற்றுவது?'' என்று அங்கலாய்த்தார் குருக்கள்.

கோயில் அதிகாரிகள் இருவருக்கும் என்ன செய்வதென்றே தோன்றவில்லை. ஒருவரை யொருவர் பார்த்து விழித்துக் கொண்டு நின்றனர்.

இவர்கள் பேச்சை உற்றுக் கேட்டுக் கொண்டிருந்த இளங்கோப்பிச்சி, மெல்ல அருகில் வந்து, ''ஐயா!'' என்றாள். மூவரும் அவளைத் திரும்பிப் பார்த்தனர்.

''தங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால், இன்று நானே திருப்பதிகம் ஓதும் பணியை ஏற்கிறேன். அந்தப் பேற்றினை எனக்கு அளித்தருளுங்கள்.''

குருக்கள், ''நீங்கள் யார் அம்மணி? உங்களுக்குத் திருப்பதிகப் பாக்கள் அனைத்தும் பிழையறப் பாடம் உண்டா?'' என்று வியப்புடன் வினவினார்.

தான் யார் என்ற கேள்விக்கு மறுமொழி கூறாமல், ''உச்சரிப்புக் குற்றமின்றித் திருப்பதிகப் பாக்களை ஓதக் கற்றிருக்கிறேன் ஐயா!'' என்று பணிவுடன் பகர்ந்தாள் இளங்கோப்பிச்சி.

ஒரு கணம் யோசித்த குருக்கள், ''எல்லாம் ஐயனின் திருவிளை! சரி; வாருங்கள், அம்மணி!'' என்றவாறு கோயிலினுள் பிரவேசித்தார்.

மணியோசை கணகணத்தது.

திருநிலையறைக்கு வெளியே ஒருபுறமாகப் போய் ஒதுங்கி அமர்ந்த இளங்கோப்பிச்சி, அங்கு தயாராக வைக்கப் பெற்றிருந்த மகர யாழை எடுத்துத் தன் மடியில் வளர்த்திக் கொண்டு அதன் தந்திகளை இதமாக உளர்ந்தாள். பிறகு ஒரு விநாடி தியானத்திலிருந்த அவள், தன் இதழ்களைக் குரலை மெல்லத் திறந்து அப்பரின் பாடல் ஒன்றை, யாழின் இனிய நாதத்தோடு இணைந்து பாடலானாள்:

''சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானுளந் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போம்
அல்லோம்
மாதேவர்க்(கு) ஏகாந்தர் அல்லராகில்
அங்கமெல்லாம் குறைந்து அழுகு
தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கன்பர் ஆகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும்
கடவுளாரே !''

கோயிலில் குழுமியிருந்த பக்தர்கள் அனைவரும் கரக் கம்பம் சிரக் கம்பம் செய்து கண்ணீர் மல்கி நின்றனர். தன்னை மறந்த நிலையில் அமர்ந்திருந்த இளங்கோப்பிச்சி மீண்டும் தன் மென்குரலெடுத்து ஞானசம்பந்தப் பெருமானின் பதிகம் ஒன்றை இசைக்கலானாள்:

''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை,
வரி வளைக்கை மடமானி
பங்கயச் செல்வி, பாண்டிமாதேவி
பணிசெய்து நாடோறும் பரவ
பொங்கழல் உருவன் பூதநாயகன், நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே !''

தூப தீப புகையொளி பரவ, மணியோசையும் மலராஞ்சலி மணமும் சூழ, வேத மந்திரம் முழங்க இறைவனுக்கு அந்தி பூசை நிறைவேறியது.

யாழினைத் தோளில் அணைத்தபடி எழுந்து நின்று கரம் குவித்துக் கண்மூடி மெய்ம்மறந்திருந்த இளங்கோப்பிச்சி, தன்னை யாரோ அன்பொழுகத் தழுவி உச்சி முகர்வதை உணர்ந்து திடுக்குற்றுப் பின்னால் திரும்பினாள்.

அங்கே, வெண்ணீறணிந்த நுதலும் ஞானப் புன்முறுவலுமாக நின்றுகொண்டிருந்தார், பாண்டிய மகாராணி மங்

கையர்க்கரசி! வியப்பாலும் திகைப்பாலும் அளவுக்கு மீறிய ஆனந்தத்தாலும் வெலவெலத்து விட்ட இளங்கோப்பிச்சி வாய்ச் சொல் எழுப்பவும் சக்தி இழந்து சிலையாகச் சமைந்து நின்றாள்.

மகாராணியார் அவளிடம் ஏதும் பேசவில்லை; எதைப் பற்றியும் கேட்கவில்லை. பாசப் பரிவுடன் அவளை மெல்ல அணைத்துப் பற்றியவாறு கோயிலைவிட்டு வெளியே சென்று, அங்கு நிறுத்தி வைத்திருந்த தமது முத்துச் சிவிகையில் அமர்ந்தனர். பிறகு ஸ்ரீ காரியக் கண்காணி நாயகத்தினிடம் திருக்கைக்கோட்டி சம்பந்தமாக இரண்டொரு வார்த்தைகள் பேசி முடித்துக்கொண்டு திரும்பிய அவர் சிவிகையில் அமர்ந்தார்.

அதற்குள் அந்தக் கோயிலைச் சுற்றிக் குழுமியிருந்த மக்களிடையே, ''சோழ இளவரசி இளங்கோப்பிச்சி!.... பழையாறைச் சோழரின் செல்வக் குமாரி!... நம் பாண்டிமாதேவியாரின் தம்பி மகள்!'' என்ற சொற்கள் வியப்புடன் கலந்து வேகமாகப் பரவின.

சிவிகை புறப்பட்டு விட்டது!

புகழாபரணம் அரண்மனைக்கு வந்து சேர்ந்த இளங்கோப்பிச்சி, தன் அத்தையார் மங்கையர்க்கரசியிடம் எல்லா விவரங்களையும் கூறி முடித்தாள்.

அவள் சொன்னவற்றை அமைதியாகக் கேட்டுப் புன்னகை பூத்தவராய் எழுந்த பாண்டிமாதேவி, ''இறைவன் நம்மை ஏதோ ஒரு பெரும் சோதனைக்கு உள்ளாக்கப் போகிறான் என்றே தோன்றுகிறது! சரி, குழந்தாய்! நீ சொல்ல வந்திருக்கும் செய்திகளை உன் அத்தையன்பரிடமே வந்து சொல், வா!'' என்றவாறு அவளை அரண்மனை மேன்மாடத்துக்கு அழைத்துச் சென்றார்.

மங்கையர்க்கரசியாரைப் பின்பற்றி மேன்மாடத்தை அடைந்த இளங்கோப்பிச்சி, அங்கே ஏதோ ஓர் அதிசயக் காட்சியைக் கண்டவள்போல் வியப்புற்று வாசல் திரைக்குப் பின் ஓடி ஒளிந்தாள். பிறகு தன்னை மீறிய படபடப்புடன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு மெள்ள எட்டிப் பார்த்தாள்.

விசாலமான அந்த அழகிய சித்திர கூடத்தின் நடுவிலே, நீண்டதொரு பொன்னாசனத்தில் சற்றே சாய்ந்தவாறு அமர்ந்திருந்தார் பாண்டியப் பேரரசர் நெடுமாறர். அவரது வலப்புறம் அமைச்சர் குலச்சிறையார் வீற்றிருக்க, இடப்புறம் கம்பீரமாக நிமிர்ந்து நின்று ஒரு கையை இடுப்பின்மேல் ஊன்றி மறு கையில் ஓலையொன்றைப் பிரித்துப் பிடித்தவாறு ஆவேசமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தான் பல்லவ இளவரசனான கோவிந்தவர்மன். (தொடரும்)




பேயர்-அக்ரோகெம் லிட்.,

# டால்ப்

மூட்டைப் பூச்சிகளை
அதிகத் தீவிரமாய்க்
கொல்லுகிறது.




A »Bayer« PRODUCT

**எல்லா ஸ்டோர்களிலும் கிடைக்கும்**

விநியோகஸ்தர்கள்: ஜாப்ரே மானேர்ஸ் & கம்பனி லிமிடெட்.

ULKA-GD-9

# பீஹார் பூகம்பம்

## ராஜன் பாபு

நான் 1933 ஜூலை, முதல் வாரத்தில் நோய்வாய்ப்பட்டு விட்டேன். பட்னு வைத்தியசாலைக்கு என்னை வைத்தியத்துக்கு அனுப்ப வேண்டுமென்று சிறை சூப்பிரின்டெண்டு அரசாங்கத்துக்கு எழுதினர். முதலில் அதைப் பற்றிக் கவலை எடுத்துக்கொள்ளப்படவில்லை. என் தலைமையாளருக்குச் செய்தி கிடைத்தது. அவர் மிகவும் கலக்கமுற்று அங்கு வந்து சேர்ந்தார். என்னுடைய நிலைமையைக் கண்டு கவலைக்கு ஆளானர். அவர் ராஞ்சிக்குச் சென்று சில நண்பர்களைச் சந்தித்தார். கடைசியில் என்னைப் பட்னுவுக்கு அனுப்பும்படி அரசாங்கத்தின் உத்தரவு கிடைத்தது. இது டிசம்பரின் முதல் வாரத்தில் நடந்தது. அதாவது நோய் தொடங்கி இரண்டு மாதங்களுக்குப் பிறகு. என்னைப் பட்னு சிறைக்கு அனுப்புவதென்றும், பட்னு மருத்துவசாலையில் என் நோயைப் பற்றி ஆராய்வதென்றும் உத்தரவு போடப்பட்டிருந்தது. என்னிடம் உத்தரவைக் காட்டியதும் மருத்துவசாலைக்குச் செல்வதில்லை என்றும், அதாவது பட்னு சிறையில்நான் இருக்க வேண்டுமென்றும், இங்கேயே (ஹஜாரிபாக் சிறையிலேயே) இருப்பது நன்றெனக் கூறினேன். இது உத்தரவு எழுதும் வக்கீலை என்றும், நான் மருத்துவசாலைக்கு அனுப்பப்படுகிறேன் என்பதுதான் இதன் பொருள் என்றும் எனக்கு விளக்கப்பட்டது.

பட்னு மருத்துவசாலையில் படுக்கையில் படுத்தபடியே நான் இவ்வண்ணம் எண்ணி வந்தேன்: நோய் மிகவும் கடுமையாக இருந்த போது இதோ போச்சு, அதோ போச்சு என்றிருந்த நிலைமையில் அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை. இப்போதோ சிறிது நலமடைந்து விட்டேன். இனிமேல் உடல் நலம் நாளுக்கு நாள் விருத்தியடையுமென்பதாகத் தெரிகிறது. என் கெடுவும் பெரும்பாலும் முடிந்து விட்டது. இந்தச் சமயத்தில் இந்தத் தயவை என் மேல் ஏன் வீணுகச் சுமத்துகிருர்கள்?

இவ்விதமாக மனத்தை அலட்டிக்கொண்டு கட்டிலில் புரண்டு புரண்டு படுத்துக் கிடந்தபோது கட்டில் ஆடுவது போலத் தோன்றியது. பிறகு அறையின் கதவும் ஜன்னலும் ஆடத் தொடங்கின. நோயினால் நான் பலவீனமடைந்திருந்ததாலும், மேலும் இத்தனை நாழிகையாக யோசனை செய்து கொண்டிருந்ததாலும் என் தலை சுற்றுகிறதென்பதாகத் தவருக நினைத்துக் கொண்டேன். இப்படி நான் நினைத்துக் கொண்டிருக்கும்போது என் அண்ணியார் பூமி ஆடுகிறதென்று அடுத்த அறையிலிருந்து கூச்சலிட்டார். நான் உடனே புரிந்துகொண்டேன். எல்லோரும் ஓடிப்போங்கள் என்று அவர் கூறினர். நான் உடனே கட்டிலிலிருந்து இறங்கி வெளியே சென்றேன். எதிரிலிருந்த வெட்ட வெளிக்குச் சென்று அங்கு நின்றேன். பூமி ஆடிக் கொண்டிருந்த கடுமையால் நிற்கக்கூட கஷ்டமாக இருந்தது. கூடவே கடகடவென்று ஒரு பயங்கர ஒலியும் உண்டாயிற்று. நூற்றுக்கணக்கான ரயில் வண்டிகள் சேர்ந்து ஓடுவது போலச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அக்கம் பக்கத்துக் கட்டிடங்களில் இருந்த நோயாளிகளுள் நடந்து வர முடிந்த சிலர் எனக்கு அருகில் வந்து நின்று கொண்டனர். வெட்ட வெளியில் நிறையப் பசு மாடுகள் ஓடிக்கொண்டிருந்தன. அவை வாலைத் தூக்கிக்கொண்டு இங்குமங்குமாக ஓடிக் கொண்டிருந்தன. ஒரு தடவை நாங்கள் எல்லாருமாகக் கூடி நின்று கொண்டிருந்த இடத்துக்கு அவை ஓடி வந்த விதத்தைப் பார்த்தால் அவை எங்களைத் தாக்க வருவது போல இருந்தது. ஆனால் அப்படி ஏதும் செய்யாமல் எங்களிடம் ஓடி வந்து நின்றுகொண்டன. அந்த இடத்தில் அபாயமில்லை என்று நினைத்தனவோ அல்லது எங்களைத் தம்மிடம் இரக்கம் கொண்டவர்களாக எண்ணி, எங்கள் பக்கத்தில் நிற்பது நல்லதென நினைத்தனவோ தெரியவில்லை. இதற்குள்ளாகச் சிறிது தொலைவில் இருந்த நர்சுகள் வசிக்கும் மாடி வீடு தடால் என்று விழுந்து விட்டது. ஆனல், பூகம்பம் கடகடவென்று ஒலித்துக் கொண்டிருந்த சத்தத்தில் வீடு விழுந்த சத்தம் கேட்கவே யில்லை. தூசி எழுந்ததைக் கண்டுதான் வீடு விழுந்துவிட்டது என்பதைத் தெரிந்து கொண்டோம். மருத்துவசாலையின் சில பாகங்களும் ஆங்காங்கு விழுந்து விட்டன. ஆனல் நல்லவேளையாக யாரும் சாகவில்லை. எவருக்கும் காயம் கூடப் படவில்லை. சிறிது நேரத்துக்குப் பின் அமைதி நிலவியது.

சுமார் நாலரை நிமிஷம் வரையில் பூமி ஆடிக் கொண்டிருந்ததென நான் மதிப்பிட்டேன். மாகாணத்தில் பல்வேறு இடங்களிலிருந்து செய்தி வந்ததிலிருந்து நாலரை நிமிஷத்திலிருந்து ஏழு நிமிஷங்கள் வரையில்



பூகம்பம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்ததைக் கண்டதாகத் தெரிய வந்தது.

பூகம்பத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி புரிவதற்கு வேண்டிய பணத்துக்காக ஒரு கோரிக்கையை வெளியிட எண்ணினேன். டாக்டர்கள் என்னை மருத்துவசாலையிலேயே இன்னும் வைத்திருந்தார்கள். நான் பல வீனமாகவே இருந்தேன். ஆயினும் இந்தச் சமயத்தில் உற்சாகமும் ஆற்றலும் எங்கிருந்து வந்ததென்பது தெரியாது. நான் பிடிவாதம் செய்து மருத்துவசாலையிலிருந்தபடியே வேலை செய்யத் தொடங்கிவிட்டேன்.

ஒரு நாள் ஒரு சிறிய சபை கூட்டப்பட்டு ''பீகார் சென்ட்ரல் ரிலீப் கமிட்டி'' என்ற பெயர் கொண்ட கழகம் ஒன்று அமைக்கப்பட்டது. நான் அதன் தலைவனாக்கப்பட்டேன். அதன் பெயரில் நான் ஒரு விண்ணப்பத்தை வெளியிட்டேன். அதற்குப் பிறகு அரசாங்கத்தாரும் தம் பொதுக்கூட்டத்தை நடத்தினார்கள். அதில் நானும் கலந்து கொண்டேன். அவர்களும் அப்பீல் விடுத்தார்கள். நான் செய்த விண்ணப்பத்தின் பயனாக நாலா பக்கங்களிலிருந்து பணமும் சாமான்களும் வந்து குவியத் தொடங்கின. பூகம்பத்தால் உண்டான நாசத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் வெளிவரத் தொடங்கின. அவற்றைப் படிக்கப் படிக்க நம் நாட்டிலும் வெளி நாட்டிலும் பீகாரின் மீது மிக்க அனுதாபம் பிறந்து விட்டது. பண்டித ஜவாஹர்லால் பாட்னா வந்து சேர்ந்தார். மற்ற எல்லா இடங்களையும் விட மிக்க சேத மடைந்திருந்த திர்ஹூத்துக்கும் முங்கேருக்கும் அவர் சென்று நிலைமையைத் தம் கண்ணாலேயே பார்த்தார். முங்கேரில் விழுந்து கிடந்த வீடுகளின் மண்ணையும் கல்லையும் தாமே தோண்டிப் பிணங்களை எடுப்பதற்கு உதவியும் புரிந்தார். இவ்விதமாக அவர் தாமே செய்து காண்பித்து மற்றவர்களுக்கு வழி காட்டினார்.

ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பாவின் திறத்தாலும் அவருக்குக் கீழ் வேலை பார்த்து வந்த நூற்றுக் கணக்கான தொண்டர்களுடைய திறத்தாலும் ஊக்கத்தாலும் வேலையைச் சிறந்த முறையில் நிறைவேற்ற முடிந்தது. மக்கள் கொடுத்த பணமும் சாமான்களும் மிகவும் நன்றாகப் பயன்படுத்தப்பட்டன என்று நாங்கள் சொல்லிக் கொள்ள முடியும்.

மிஸ்டர் அஜீஸ் என்பவர் தம்முடைய சிறிய வீடொன்றை அலுவலகத்துக்காகக் கொடுத்திருந்தார். ஆனால் விரைவிலேயே வேலை மிகவும் பெருகி விட்டதால் அந்த இடம் போதவில்லை. அதனால் நாங்கள் வேறொரு பெரிய வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொண்டோம். அலுவலக வேலையைப் பல பிரிவுகளாக வகுத்து ஒவ்வொன்றையும் ஒவ்வொரு முக்கிய செயலாளர் கையில் ஒப்படைத்தோம். ஆரம்பத்தில் ஸ்ரீ ஜயப்பிரகாஷ்ஜிதாம் அலுவலகத்தைக் கவனித்து வந்தார். பிறகு அனுக்கிரக பாபு வந்து விட்டார். வேலை நிறையப் பெருகிவிட்டாலும் அவர் அதைச் சமாளித்து வந்தார். நாங்கள் அமைத்த குழுவில் எங்களுக்கு உதவி புரிந்த எல்லாக் கட்சிகளையும் மாகாணங்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொண்டோம்.

சில நாட்களுக்குப் பிறகு காந்திஜி வந்தார். அவர் வருவதற்கு முன்னமேயே நான் எல்லாவற்றையும் விட அதிகமாகச் சேதம் அடைந்த இடங்களுக்குச் சென்று பார்த்து வரலாமென்று நினைத்தேன். பூகம்பம் நடந்து ஒரு மாதத்துக்குப் பிறகு இது நடந்தது. அது வரையில் நான் அலுவலகத்தில் இருந்தபடியே வேலை புரிந்து வந்தேன். இதற்கு என் பலவீனமும் ஒரு காரணம், வேலை நெருக்கடி மற்றொரு காரணம். இப்பொழுது துணைக்கு ஆட்கள் வந்துவிட்டார்கள். வேலையையும் பகிர்ந்து கொடுத்தாகி விட்டது. அவர்களும் அதைச் சமாளித்து வந்தார்கள். ஆதலால் நான் வெளிக் கிளம்பினேன்.

மக்களுக்குத் தேவைப்பட்ட உதவியைக் கொண்டு போய்ச் சேர்ப்பது மிகவும் கடினமாக இருந்தது. முதலாவதாக ரயில் பாதை உடைந்து விட்டது. சாமான்கள் ரயிலில் செல்ல முடியவில்லை. சாலைகளின் பாலங்களும் உடைந்து விட்டன. இதனால் மாட்டு வண்டிகளிலும் மோட்டார் லாரிகளிலும்கூட—சாமான்களை ஏற்றிச் செல்வதும் எளிதாக இல்லை. நாங்கள் ரிலீப் கமிட்டிக்காக எத்தனையோ மோட்டார் லாரிகள் விலைக்கு வாங்க வேண்டி வந்தது. மெல்ல மெல்லச் சாலைகள் சிறிது செப்பனிடப்பட்டன. ஆனால் பாலங்கள் இல்லை. ஆயினும் பெரிய ஆறுகள் இல்லாத இடங்களில் பாலங்களின் பக்கத்தில் வேறு பாதைகள் உண்டாகிவிட்டன. நதிகளில் படகுகளையும் உபயோகித்து வந்தோம். ரிலீப் கமிட்டியின் குடிசைகள் எல்லா இடங்களிலும் அமைக்கப்பட்டன. செயலாளர்களைத் திரட்டுவதில் ஸ்ரீ கிருபளானியும், ஸ்ரீ ஹார்மகரும், ஸ்ரீமதி சோபியா சோம்ஜீயும் பெரும் தொண்டாற்றினார்கள். வேலை புரிபவர்களைக் கண்காணிப்பதும் எளிதான வேலையாக இல்லை. செயலாளர்களுக்கு நாங்கள் நூற்றுக் கணக்கான சைக்கிள்கள் அளிக்க வேண்டி வந்தது. அவர்கள் இருப்பதற்காகக் குடிசைகளைக் கட்ட வேண்டி வந்தது. அவர்களுக்கு உணவுக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. ஆயினும் எங்கள் செயலாளர்களுக்கு உணவுக்காக நாங்கள் ஒரு நாளுக்கு இரண்டணாவுக்கு மேல் கொடுக்கவில்லை யென்பதைக் கேட்டால் ஆச்சரியமாக இருக்கும். அவர்கள் அதைக் கொண்டு என்ன கிடைக்குமோ, அதை உண்டு வேலை புரிந்து வந்தார்கள். அதுவே அவர்களுக்குப் போதியதாயிருந்தது. மிகவும் சேதமடைந்த ஜில்லாக்களுக்கு மகாத்மாஜியும் சென்றார். அப்படி அவர் செல்வது இரண்டு வகையில் அவசியமாயிருந்தது. அவர் சேதத்தைத் தாமே பார்வையிட்டு, எத்தனையோ வகையில் உண்டாகிய கஷ்டங்களில் எதை நாங்கள் நீக்க முயற்சி செய்ய வேண்டுமென்று நிச்சயிக்கத் துணை புரிய வேண்டுமென்பது ஒரு நோக்கம். மேலும் அவர் செல்வதினால் மக்களுக்குத் தைரியம் பெருகுமென்பதும், அவர்களுக்கு ஆறுதல் உண்டாகும் என்பதும் மற்றொரு நோக்கம். இதனால் மகாத்மாஜி எல்லா இடங்களுக்கும் வர வேண்டுமென்று எல்லோரும் வற்புறுத்தினார்கள். ஆனால் இது முடியாத காரியம். ஆயினும் அவர் பல இடங்களுக்குச் சென்றார். பூகம்பம் விளை



# வதந்தியைக் கேட்காதீர்கள்—

நாட்டின் தற்கால ஆபத்தான நிலையில் மக்கள், விரிவான முறையில் செய்திகளையும் சரியான தகவல்களையும் கேட்க ஆவலுடன் இருக்கின்றனர். ஆகாசவாணி, அதிகப்படியான செய்தி அறிக்கைகளையும் விசேஷ நிகழ்ச்சிகளையும் வழங்கி, ஒலிபரப்பு நேரத்தை அதிகமாக்கி அவர்களது அவசரத் தேவையைப் பூர்த்தி செய்துவருகிறது. இந்த ஒலிபரப்புச் செய்திகளைக் கேட்பது மூலம் பீதி உண்டாக்கும் வதந்திகளை நிறுத்துவதுடன் நாட்டிற்குச் சேவை புரிவதற்கான பல வழிகளையும் நீங்கள் கற்றுக்கொள்ள முடியும்!

உங்களுக்கு இப்பொழுது ஒரு ரேடியோ தேவை—ஆம், இப்பொழுதே மிகமிகத் தேவை. என்றும் நட்புள்ள உங்கள் பிலிப்ஸ் வியாபாரி, உங்களுக்கு எப்பொழுதும் சேவை புரியக் காத்திருக்கிறார்.

# ஆகாசவாணிச் செய்திகளைக் கேளுங்கள்



**ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேளுங்கள், பிறரையும் கேட்கச் செய்யுங்கள்!**




**ஆகாசவாணியே கேளுங்கள்**

அதிகாரபூர்வமான செய்திகள்
தலைவர்களின் பேச்சுக்கள்
விசேஷ நிகழ்ச்சிகள்




**பிலிப்ஸ் ரேடியோ**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

JWTPHR 58 A

# tik-20

# டிக்-20

## மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது




கெய்கி
டயஸினன்



டாடா-பைஸன் தயாரிப்பு

## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவு மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறக் கழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

எழுதுவதில்
கவர்ச்சியும்
இன்பமும்
பெறுவதற்கு




## Iris INKS

ஐரிஸ் இங்குகள்
5 மங்காத
நிறங்களில்




ரிஸர்ச் கெமிகல் லாபரட்ரீஸ்
லாட்டிஸ் பிரிட்ஜ் ரோடு, சென்னை-20
550, எட்டாவது மெயின் ரோடு,
மல்லேஸ்வரம், பெங்களூர்-12

விளைத்துவிட்ட கொடிய காட்சிகளை, இதற்கு முன் கண்டிராத காட்சிகளை, நெஞ்சத்தைப் பிளக்கும் காட்சிகளை அவர் பார்த்தார்.

பூகம்பத்தினால் மக்களின் வீடுகள் விழுந்து விட்டன. வீடுகளில் இருந்த பொருள்கள் எல்லாம் நாசமாகி விட்டன. உணவுக்கு அரிசி இல்லை, உடுக்கத் துணி இல்லை. அரிசி கிடைத்தாலும் அதைச் சமைக்கப் பாத்திரம் இல்லை. இருக்க வீடில்லை. கிணறுகள் பாழாகி விட்டன. குளங்கள் மணலால் நிறைந்து போயின. இதனால் குடிக்கத் தண்ணீர் கிடையாது. இந்தக் குறைகளை உடனே நிறைவேற்ற வேண்டியது அவசியமாயிருந்தது.

வயல்கள் வெடித்து ஊற்றுக்கள் பீறிட்டுக் கொண்டு கிளம்பின. அவை தண்ணீரோடு மணலையும் கொண்டு வந்து சேர்த்தன. வயல்கள் எல்லாம் மணலால் நிறைந்துவிட்டன. நீர் வற்றிய பின் எல்லா இடங்களும் மணலால் நிறைந்து விட்டன. நீர் வற்றிய பின் எல்லா இடமும் மணல் மயமான பாலைவனமாகி விட்டதென்பது தெரிய வந்தது. இந்த மணலை இப்படியே விட்டுவிட்டால் அங்கு பிறகு எதுவுமே விளையாதென்ற அச்சம் உண்டாகியது. இதனால் இந்த மணலை எப்படியாவது எடுத்துப் போட்டு நிலத்தைச் சுத்தம் செய்ய முடியுமா இல்லையாவென்று யோசிக்க வேண்டியிருந்தது. சிற்சில இடங்களில் மணல் ஐந்தடி ஆழம் இருப்பதை நாங்களே பார்த்தோம். ஓரிடத்தில் சிறிய நிலமொன்றிலிருந்த மணலை எடுக்க முயன்று பார்த்ததில் அதற்குப் பிடித்த அதிகச் செலவிலிருந்து இது ஆகாத காரியமென்பது தெளிவாயிற்று.

நாங்கள் பல இடங்களில் புதிய கிணறுகளை வெட்டினோம். இன்னும் பல இடங்களில் பழைய கேணிகளைச் செப்பனிட்டோம்.

கூலி வேலை செய்து பிழைத்து வந்த ஏழைகளுக்குப் பூகம்பத்துக்குப் பிறகு வேலைக்குக் குறைவில்லை. ஏதாவதொரு வேலை அவர்களுக்குக் கிடைத்துக் கொண்டே வந்தது. ஆனால் மழைக் காலத்தில் அவர்களுக்கு வேலை கிடைக்காதே என்ற அச்சம் இருந்து வந்தது. விபத்து வந்தபோது ஏழைகளுக்கு மூன்று நான்கு நாட்களுக்கு உணவு அளிப்பது நியாயம். ஆனால் வேலை ஒன்றும் இல்லாமல் அவர்களுக்குத் தொடர்ந்து சும்மா சோறு போட்டால் அவர்கள் உபயோகமற்றவர்களாகவும் சோம்பேறிகளாகவும் ஆகிவிடுவார்கள். ஆகையால் கூடுமானவரையில் வேலை வாங்கிக் கொள்ளாமல் சோறு போடக் கூடாதென்று ஆரம்பத்திலிருந்தே நாங்கள் ஒரு விதியை அமைத்துக் கொண்டோம்.

நாங்கள் பல இடங்களில் கமிட்டியின் சார்பில் கடைகளைத் திறந்து வைத்தோம். அங்கு அடக்க விலைக்குச் சாமான்கள் விற்கப்பட்டு வந்தன. இது மட்டுமின்றி, செங்கல், மரம், சிமெண்டு முதலியவற்றை விற்கும் வியாபாரிகளுடன் பேசி, அச் சாமான்களை அடக்க விலைக்கோ குறைந்த லாபம் வைத்தோ விற்பதற்கும் ஏற்பாடு செய்தோம். எங்களிடமிருந்து சீட்டுப் பெற்றுச் சென்றவர்களுக்கு அப்படி விதிக்கப்பட்ட விலைக்குச் சாமான்கள் கிடைத்து வந்தன. அந்த வியாபாரிகளுக்குக் கமிட்டியானது ஏதோ தரகும் (கமிஷன்) கொடுத்து வந்தது. இவ்வண்ணமாகக் கமிட்டி நேராகச் செய்த உதவி மட்டுமன்றி, இச் சாமான்களின் விலையைக் கட்டுப்படுத்தும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டதால் மக்களுக்குச் சாமான்கள் நியாயமான விலைக்குக் கிடைத்து வந்தன.

கமிட்டியின் மருத்துவ இலாகாவானது பல இடங்களில் தன் கிளைகளை அமைத்தது. இதனால் மக்களுக்கு நிறைய நன்மையுண்டாயிற்று. வெள்ளத்தில் மக்களுக்கு உதவி செய்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. கமிட்டியும் அரசாங்கமும் கூடிய யோசனையின்படி எங்கெங்கு வெள்ளம் வருமென்று அஞ்சப்பட்டதோ அங்கெல்லாம் படகுகள் தயாராக வைக்கப்பட்டன. வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவியைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு அப்படகுகள் மிகவும் உதவின.

ஒரு மிகச் சிறந்த அனுபவத்தைப் பற்றி இங்கு குறிப்பிட வேண்டும். காந்திஜியானவர் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட இடங்களில் சுற்றி வந்து கொண்டிருந்தபோது அவருடன் ஆங்கிலேயர்கள் இருவர் பல இடங்களுக்குச் சென்றார்கள். ஒருவர் குமாரி முரியல் லெஸ்டர் என்பவர். அவருடன்தான் காந்திஜி வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றபோது பெரும்பாலும் தங்கியிருந்தார். மற்றொருவர் இங்கிலாந்தில் பொதுஜனத் தொண்டாற்றி வந்தவரும் இந்தியாவின் மீது பரிவு கொண்டவருமான குமாரி அகதா ஹாரிசன் என்பவர். இன்னும் பல அயல் நாட்டாரும் பூகம்பத்தால் விளைந்த நாசத்தை வந்து பார்த்தார்கள். அனைவரும் தத்தம் நண்பர்களுக்குக் கடிதம் எழுதினார்கள்; தீனபந்து ஆண்ட்ரூஸ் எங்கு விபத்து நேரிட்டாலும் அங்கே வழக்கமாகப் போய்ச் சேருவார். அவர் புத்தகம் எழுதி இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அச்சிட்டு வெளியிட்டார். இப்படியெல்லாம் நடந்ததால் அங்குள்ளவர்களுக்கும் பீகாரின் மீது அனுதாபம் பிறந்தது. அரசாங்கத்தின் கோரிக்கையும் அங்கு போய்ச் சேர்ந்தது. அதைக் கேட்டு மக்கள் பண உதவி புரிந்தார்கள்.

ஆபத்து சகாய வேலை முடிந்ததும் எஞ்சிய பணத்தைப் பீகாரில் திடீரென்று வரும் விபத்துக்களுக்குப் பயன்படுத்துவதற்காக ஓர் அறநிலையத்திடம் ஒப்படைத்துவிட்டோம். சர்தார் வல்லபாய் படேலும், சேட் ஜம்னாலால் பஜாஜும் நானும்தான் அற நிலையக் காவலர்கள்.

---

**[இக் கட்டுரையும் இவ்விதழின் மற்றொரு பக்கத்தில் வெளியாகியுள்ள 'சில நினைவுகள்' என்ற பகுதியும் ராஜன் பாபு எழுதியுள்ள "என் வரலாறு" என்ற நூலிலிருந்து தொகுக்கப்பட்டன. சாகித்திய அகாதமிக்காகச் சென்னை, தேனாம்பேட்டை, அமுத நிலையத்தினர் வெளியிட்டுள்ள இந் நூலை எளிய அழகிய முறையில் சுவை குன்றாமல் தமிழாக்கியிருப்பவர் ஸ்ரீ கோ. வன்மீகநாதன். ஆயிரத்துக்கும் மேற்பட்ட பக்கங்களைக் கொண்ட இப் புத்தகத்தின் விலை ரூபாய் இருபது.]**




நல்லகாலம் பொறக்குது சீனக்காரன் ஓடறன்! எல்லையில் இந்தியன் ஜெயிக்கிறான்! சாமி.. ஒரு கம்பளிப் போர்வை, கம்பளிச் சட்டை எதினாச்சியும் இருந்தாக் கொடுங்க!
???


வழக்கப்படி தோசையும் காப்பியும்தானே?
அதோடு வழக்கப்படியே கழுவாத பிளேட்டையும் அழுக்கு டம்ளரையும் மறந்து விடாதே!


"ஸ்கூட்டர்பின்னால் தைரியமாக உட்கார்ந்து போகிறாயே! தவறிவிழுந்தால்...!"
"நீ ஒண்ணு! அதெல்லாம் பழக்கமாகிவிட்டது"


நீங்கள் வரும் வழியில் ஏதேனும் பஸ் ஸ்டாண்டைப் பார்த்தீரா?
பார்த்தீரா என்று கேட்கிறீரே! நான்தான் அதை இடித்துக் கீழே தள்ளி விட்டு வந்திருக்கிறேன்!



# கண்ணீரும் கல்யாணமும்

ஸோமாஸ்

சென்னை ராயப்பேட்டையில் உள்ள அந்த வீட்டில் காலடி வைத்ததுமே என்னுடைய துன்பங்களெல்லாம் தீர்ந்து விட்டமாதிரி இருந்தது. வயதான ஒரு அம்மாளையும் அவளுடைய பிள்ளையையும் தவிர வீட்டில் வேறு யாரும் இல்லை.

என்னை அக்கறையாக அழைத்து வந்து அந்த வீட்டில் வேலைக்கு அமர்த்தியவள் எதிர் வீட்டு மாமிதான்.

''தேவகி, சமர்த்தாக நடந்து கொள். இந்த அம்மா ரொம்ப நல்ல மாதிரி. பழகப் பழக நீயே தெரிந்து கொள்வாய்'' என்று சொல்லிவிட்டு மாமி போய் விட்டாள்.

திருச்சி ஜில்லாவில் ஒரு கிராமத்தில் என் சிற்றன்னையிடம் நரகவாசம் செய்து கொண்டிருந்த எனக்குச் சென்னைப் பட்டணத்தைப் பார்க்கப் பார்க்க ஆச்சரியமாயிருந்தது. எத்தனை ஜனங்கள், எத்தனை கார்கள், எத்தனை சைக்கிள்கள், எத்தனை ரிக்ஷா வண்டிகள்! இத்தனை ஜனங்களுக்கும் சதா தெருவில் போக ஓயாமல் என்னதான் வேலை இருக்குமோ!

அந்த வீட்டு எஜமானி அம்மாளுக்கு அறுபது வயதிருக்கும். நார்மடி உடுத்தி, தங்கப் பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி அணிந்து தான் கொஞ்சம் பணக்காரப் பாட்டி என்பதைக் காட்டிக் கொண்டாள். சதா பூஜை, ஜபம், கோவில் வழிபாடு இப்படிப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தாள். அதிகாலையில், சூரியோதயத்துக்கு முன் எழுந்திருந்து அந்த அம்மாளுக்கு வெந்நீர் தயாரித்து வைத்து விட வேண்டும். காலையில் எழுந்து ஸ்நானம் செய்து, பூஜை புனஸ்காரங்களை முடித்து விட்டுத்தான் அந்த அம்மாள் காப்பி சாப்பிடுவாள். கையில் ஸ்படிக மாலையுடனும் கட்டுக் கட்டாக விபூதி அணிந்த திருமேனியுடனும் அந்த அம்மாள் ராஜ ராஜேசுவரி அம்மன் படத்துக்கு எதிரில் பக்திப் பெருக்குடன் அமர்ந்து தியானத்தில் இருப்பது பார்ப்பவர்களைப் புளகமுறச் செய்யும்.

என்னிடம் அந்த மூதாட்டி காட்டிய அன்பில் நான் நெகிழ்ந்து விட்டேன். அன்பு என்றால் என்னவென்றே அறியாத பாவப் பிறவி நான். நான் அதிகப்படியாக வீட்டு வேலைகள் செய்ய வேண்டுமானால் என் சித்தி எப்போதாவது என்னிடம் கொஞ்சம் அன்பு காட்டுவாள். அது அடுத்து வரும் பயங்கரத்தைக் காட்டும் அன்பு.

''தேவகி, இந்தா, இங்கே வா. காலையில் வெறும் வயிற்றோடு காரியம் செய்யக் கிளம்பி விடுகிறாயே? இந்த உப்புமாவைத் தின்று விட்டுப் போ!'' என்று சித்தி சொன்னால், வீடு முழுவதும் அலம்பக் கிணற்றடியிலிருந்து குடம் குடமாக ஜலம் கொண்டுவர வேண்டும் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

''இந்தா தேவகி, ஒரு வாய் காப்பி குடித்து விட்டுப் போ, அம்மா'' என்றால் தொழுவத்தில் உள்ள மாடுகளை அவிழ்த்து மேய்ச்சலுக்கு அனுப்பி விட்டுத் தொழுவத்தைத் துப்புரவாக்கி, பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை ஆகியவைகளைத் தொட்டியில் கொட்டி, பிறகு வாய்க்காலிலிருந்து மாடுகளுக்குக் குடிநீர் கொண்டு வந்து கொட்டி அப்புறம் சாணத்தை ஒரு புறம் சேர்த்துக் குவித்துப் பின்பு வறட்டி தட்ட வேண்டும் என்று அர்த்தம்.

''தேவகி, பர பர வென்று உன் காரியங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு குழந்தைகளுக்கெல்லாம் இட்டிலி கொடுத்து விட்டு 'நீயும் இரண்டு இட்டிலி எடுத்துக் கொள்'' என்றால், சித்தியின் ஏழு குழந்தைகளுக்கும் எண்ணெய் தேய்த்து, வெந்நீர் போட்டுக் குளிப்பாட்டி விட்டுப் பிறகு அவர்களுக்கெல்லாம் தலை வாரிவிட்டுச் சாதம் போட வேண்டும் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

இதைக் கேட்டதும் தினம் கடுமையான வேலைகளும் இருக்கும். அத்துடன் வயிற்றுக்கும் வகையாக ஏதாவது கிடைக்கும் என்று நினைத்து விடக் கூடாது. இதெல்லாம் வாரத்துக்கு ஒரு முறை, அல்லது இரு முறை நடக்கும் காரியங்கள். தினசரி பழையது தான் எனக்குக் கிடைக்கும். சித்தியின் மனசு குளிர்ந்திருந்தால்தான் உப்புமா, காப்பி, இட்டிலி ஆகியவைகளெல்லாம் கிடைக்கும். ஆனால் தினசரி இட்டிலிக்கும் தோசைக்கும் மாவரைக்கும் நிரந்தர இயந்திரம் நான்தான்.

நான் பிறந்ததும் என் பாவ முகத்தைக் காண விரும்பாதவள் போல், என் அன்னை அப்பொழுதே இறந்து விட்டாள். பச்சைக் குழந்தையாகிய என்னைக் காரணமாகக் காட்டி, அப்பா மறு மணம் செய்துகொண்டு விட்டார். அவர் எனக்கு நன்மை செய்யும் நோக்கத்தோடுதான் மறு மணம் செய்து கொண்டார். ஐந்து வயது வரையில் நான் என் பாட்டி வீட்டில் வளர்ந்தேன். அதாவது என் தாயாரைப் பெற்ற பாட்டி. அவள் என்மீது அன்பைப் பொழிந்து வந்தாள். அவள் இறந்ததும் அப்பாவிடம் வந்தேன். அப்பா ரொம்பவும் நல்லவர். சித்தி இல்லாத சமயம் பார்த்து என்னை வைத்துக்கொண்டு கொஞ்சுவார். அவர் கண்களில் நீர் ததும்பிப் பார்வையை மறைத்து விடும். அந்தச் சமயம் சித்தியைக் கண்டு விட்டால் அப்பாவின் அன்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். பூனை போல் ஒதுங்கிச் சென்று விடுவார்.

சித்திக்கு அடுத்தடுத்து ஏழு பெண் குழந்தைகள் பிறந்தன. அப்புறம் அப்பா என் பக்கம் திரும்பிப் பார்ப்பதே யில்லை. ஒரு பெரிய மிராசுதாரிடம் அப்பா கணக்கு வேலை பார்த்து வந்தார்.

சித்தி எத்தனையோ விதங்களில் என்னைக் கொடுமைப்படுத்தினாள். அப்பாவுக்கு அதெல்லாம் தெரியாது. நான் அவரிடம் போய் இதையெல்லாம் சொல்லி விடுவேனோ என்ற சந்தேகம் காரணமாக, சித்தி அப்பாவிடம் என்னை நெருங்கவே விடமாட்டாள். அதற்கு ஏற்றாற்போல் அப்பாவும் என்னை அழைத்து எதுவும் கேட்க மாட்டார். சித்தியின் எத்தனையோ கொடுமைகளை நான் மறந்து விட்டேன். ஆனால் ஒரே ஒரு கொடுமை மட்டும் என் இதய ஆழத்தில் போய்த் தங்கி விட்டது.

பாவாடை, சட்டை மட்டும் போட்டுக் கொண்டிருக்க முடியாமல், பருவம் தாவணி போட்டுக் கொள்ள வேண்டிய அவசியத்தை எனக்கு விரைவில் ஏற்படுத்தி விட்டது. சித்தி அதையே ஆயுதமாகக் கொண்டு என் படிப்பை அரைகுறையாக நிறுத்தி விட்டாள். அப்பா, பாவம்! அவர் என்ன செய்வார்! வாய் இல்லாப் பூச்சி.

வாசல் பக்கம் போவதற்கே எனக்கு வெட்கம் பிடுங்கித் தின்னும். காலையில் தினம் வாசல் பெருக்கி, ஜலம் தெளித்து, கோலம் போடுவதில் தொடங்கும் வீட்டு வேலை, எல்லாருக்கும் படுக்கை போட்ட பிறகுதான் முடிவடையும். இருள் பிரிவதற்கு முன்பே எழுந்து யார் கண்ணிலும் படாமல் வாசலில் நீர் தெளித்துக் கோலம் போட்டு விடுவேன். ஆதரவற்ற என் அநாதை நிலையைப் பற்றிப் பருவம் சிறிதும் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. அது தன் ஜால வேலைகளைச் செய்து என் பொன்னுடலில் மெருகையும்



ஏற்றிக் கூடவே நாணத்தையும் குறைவறத் தந்து விட்டது. என்னில் நிரம்பி வழிந்த நாணத்தைச் சமாளிக்க அப்பாவின் பழைய, கிழிந்த அங்கவஸ்திரத்தை எடுத்துத் தைத் துத் தாவணியாக அணிந்து கொண்டேன். சித்தி இதையெல்லாம் பொருட்படுத்தவே யில்லை. சின்ன வாய்க்காலுக்குப் போய்ப் பாத்திரங்களைத் தேய்த்து, துணிகளையும் துவைத்து எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்து அவைகளை வைத்து விட்டுப் பிறகு பெரிய வாய்க்காலுக்குப் போய் வீட்டுக்குத் தேவையான நல்ல ஜலம் கொண்டு வருவது ஆகியவை யெல்லாம் எனக்கு இடப்பட் டிருந்த வேலைகள். வழக்கம் போல் அவை களைச் செய்து கொண்டுதான் வந்தேன்.

நான் பட்ட வேதனைகளை யெல்லாம் பார்த்து என் தகப்பனார் தனியாய்த் தவித் தார். என் விஷயமாய்ச் சித்தியிடம் பரிந்து பேச அவருக்குப் பயம். அவர் தவிப்பு எனக் குப் புரியாமல் இல்லை. இவ்வளவும் போதாக் குறைக்கு யார் பொருட்டு நான் துயரங்களை யெல்லாம் தாங்கினேனோ, யாரைப் பார்த்து ஆறுதல் அடைந்து வந்தேனோ, அவர் திடீ ரென்று இறந்து விட்டார். என் தந்தையைத் தான் சொல்லுகிறேன். உலகத்தில் எனக் கென்று இருந்த ஒரே ஒரு ஆதாரமும் போய் விட்டது. தெய்வம் மனித உருவத்தில்தான் திக்கற்றவர்களுக்கு அருள் புரியும் என்று அப்பா சொல்லக் கேட்டிருக்கிறேன்.

எதிர் வீட்டு மாமாவும், மாமியும்தான் என்னைப் பொறுத்த வரையில் கண் கண்ட தெய்வங்கள். என்னிடம் தனிப்பட்டதொரு பரிவும், பாசமும் உள்ளவர்கள்.

ஒருநாள் அந்த மாமி என்னைத் தனியே அழைத்து, ''தேவகி, நீ படும் சிரமங்களைக் காணச் சகிக்க வில்லை அம்மா! உன்னை இந்த நரக வேதனையிலிருந்து விடுவித்துச் சென் னைக்கு அழைத்துப் போய் உனக்கு ஒரு நல்ல வழிகாட்டலாம் என்று தீர்மானித் திருக்கிறோம். உனக்குச் சம்மதந்தானே?'' என்று கேட்டாள்.

எனக்கு உடனே பதில் சொல்ல நா எழு வில்லை. குரல் தழுதழுத்தது. ''நீங்கள் எது செய்தாலும் எனக்குச் சம்மதந்தான். என் சித்தி கோபிக்காத விதத்தில் நீங்களே இந்த விஷயத்தைச் சொல்லி எனக்கு விடுதலை வாங்கித் தர வேண்டும் மாமி!'' என்று கூறி வாய் விட்டு அழுது விட்டேன்.

''அசடே, ஏன் அழுகிறாய்? எல்லா ஏற் பாடுகளையும் நான் கவனித்துக் கொள்ளு கிறேன். நீ எதற்கும் கவலைப்படாதே!'' என்று கூறி மாமி என்னை ஆதரவாக அணைத்துக் கொண்டு என் கண்ணீரைத் துடைத்தாள்.

பிறகு சித்தியிடமும் அந்த மாமியே இதைப் பற்றிச் சொன்னாள்.

''இந்த அநாதைப் பெண்ணை வைத்துக் கொண்டு நீங்கள் அவதிப்பட வேண்டாம். சென்னையில் எங்களுக்கு ரொம்பவும் வேண் டியவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வீட்டில் வேலை செய்ய இவளைப் போன்ற ஒரு பெண் தேவை. அவர்கள் நல்ல வசதியுடைய வர்கள். உங்களுக்கு இந்தப் பெண்ணைப் பற்றிய அநாவசியமான பொறுப்பு என்னத் துக்கு?'' என்று எதிர் வீட்டு மாமி சொன் னது சித்தியின் மனதுக்கு என் அதிர்ஷ்டவச மாகப் பாந்தமாகப் பட்டது. உடனே சம்ம தம் தந்து விட்டாள். நான் தொலைந்து போவதில் சித்திக்குப் பரம திருப்திதான். ஆனால் வேறு வேலைக்காரி வந்தால் சம்பளம் கேட்டுத் தொலைப்பாளே என்று கொஞ்சம் வருத்தமும் இருந்தது.

சின்ன பங்களாதான் என்றாலும், அழகிய பூங்காவுக்குள் மிகவும் கச்சிதமாக அமைந் திருந்தது. எஜமானியம்மாளாகிய அந்த சீமாட்டி என்னை மிகவும் அன்பாக நடத்தி னாள். அந்த அம்மாளை என் வாய் நிறைய ''அம்மா!'' என்று அழைக்கும்போதெல்லாம் என் உள்ளம் நெகிழ்ந்து, உடம்பெல்லாம் சிலிர்த்து விடும்.

''தேவகி, இந்தப் புடவையைக் கட்டிக் கொள். தன் வீட்டில் உள்ளவர்கள் யாரா யிருந்தாலும் நல்ல உடைகளை அணிந்து நாக ரிகமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிற வன் என் பிள்ளை. அவன் ஆபீஸிலிருந்து வருகிற நேரம் ஆகி விட்டது. நீ உன் பழைய உடைகளோடு இருக்கக் கூடாது....'' என் றாள் அந்த அம்மாள். அதில் கண்டிப்பு இருந் தாலும் அன்பும் கலந்திருந்தது. நான் புடவை யைக் கையில் வாங்கிக் கொண்டேன். நான் அத்தனை நல்ல புடவையைக் கட்டிக் கொண் டதே யில்லை. இத்தனைக்கும் அது புதுப் புடவை யல்ல; யாரோ கொஞ்ச நாட்கள் உபயோகித்துச் சலவை செய்தது. வெள்ளை உடலும், பச்சை நிற 'பார்ட'ரும் கொண்ட அந்த வாயில் புடவை மிக நேர்த்தியா யிருந் தது. நடுவில் நீலக் கல்லும், சுற்றிலும் வெள்ளைக் கல்லும் பதித்த அழகிய நட்சத் திர வடிவமான தோடுகளை எடுத்துக் கொடுத்துப் போட்டுக் கொள்ளச் சொன்னாள்

**வடக்கெல்லை**

இறைவன் நம் நாட்டுக்கு வடக்கில் இமயமலையை எழுப்பி நிறுத்திக் கிழக்கு மேற்கு எல்லைகளில் மலை அடுக் குகளால் சுவரை எழுப்பி ஓர் அரிய எல்லைக் கோட்டை அமைத்திருக்கி றான். அதைத் தாண்டி வெளியி லிருந்து எவனும் இந்தியாவின் மேல்



படையெடுக்க இயலாது. இவ்வண்ண மாக இயற்கையானது ஒரு புறத்தில் இந்நாட்டுக்கு நிலப் படையெடுப்பி லிருந்து காப்பு அமைத்து விட்டது. மற்றொரு புறத்தில் கடலானது இந் நாட்டுக்குக் கடத்தற்கரிய அகழி போல் உதவுகிறது. ஆயினும் கடவு ளானவர் பாதுகாப்புக்காக எல்லாச் சாதனங்களையும் அமைத்துக் கொடுத் தாலும் கூட அவற்றை மனிதன் தன் ஆற்றலையால் நன்றாகப் பயன்படுத் திக்கொள்ளாவிட்டால் அவனைக் காப் பாற்ற இயலாது என்பதைப் பற்றி வருத்தப்படாமலிருக்க முடியாது.

— ராஜன்பாபு

அந்த அம்மாள். எனக்குச் சந்தோஷம் தாங்க வில்லை. என்னை நானே கண்ணாடியில் அழகு பார்த்துக் கொண்டேன். 'நான் இத்தனை அழகியா?' என்று பூரித்துப் போனேன்.

எஜமானியம்மாள் என்னைப் பற்றி எந்த விவரமும் கேட்க வில்லை. அது என் மனத்துக்கு மிகவும் இதமாயிருந்தது.

இரவு சாப்பாட்டுக்குச் சமையல் செய்து வைத்தேன். எட்டு மணி சுமாருக்கு எஜமானியம்மாளின் பிள்ளை வந்தார். அவருக்குச் சுமார் முப்பத்தைந்து வயதிருக்கலாம். நிறம் சிவப்பு இல்லையென்றாலும் கறுப்பு இல்லை. பரந்த நெற்றி; விசாலமான நயனங்கள்; ஆளை எடை போட்டு அளந்திடும் பார்வை; நெற்றியில் விழுந்து விளையாடும் கருட்டைத் தலைமயிர் இல்லாவிட்டாலும் அவர் கிராப்பு பார்ப்பதற்கு மிகவும் நாகரிகமாயிருந்தது; இலேசாக இள நரை படர ஆரம்பித்திருந்தது. பார்ப்பதற்கு மிகவும் கம்பீரமாக இருந்தார். அவர் பெயர் சீதாராமன் என்பதைப் பாட்டியம்மாள் அழைப்பதைக் கொண்டு தெரிந்து கொண்டேன்.

அவர் அநேகமாக இரவில் நேரம் கழித்துத் தான் வருவார். எத்தனை நேரம் கழித்து வந்தாலும் காலையில் வெகு சீக்கிரம் எழுந்து விடுவார். ஸ்நானம் முடித்ததும் கூடத்து அறைக்குள் நுழைந்து சுமார் அரை மணி நேரம் பிரார்த்தனை செய்து விட்டு வருவார். அவ்வறை மற்ற நேரங்களில் பூட்டியிருக்கும்.

சீதாராமன் சிற்றுண்டி சாப்பிட்டு விட்டுப் புறப்பட்டு விடுவார். பகல் ஒரு மணிக்குச் சாப்பாட்டுக்கு வருவார்.

சீதாராமனைப் பற்றி எஜமானியம்மாளிடம் என்னென்னவோ கேட்டுத் தெரிந்து கொள்ள எனக்கு மிகவும் ஆசையாயிருந்தது. முக்கியமாக அவர் விவாகம் ஆனவரா? அப்படியிருந்தால் அவர் மனைவி எங்கே? ஒரு வேளை... மனைவியை அழைத்துக் கொள்ளாமல் இருக்கிறாரோ....! பாட்டியம்மாள் தன் மகனைப் பற்றி என்னிடம் எதுவும் சொல்ல வில்லை. என் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்த கேள்விகளைப் பாட்டியம்மாளிடம் கேட்க எனக்கு மிகவும் தயக்கமாக இருந்தது.

கால் சட்டை போட்டுக் கொண்டால்தான் நாகரிகம், அழகு என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களெல்லாம் சீதாராமனைப் பார்க்க வேண்டும். கதர் ஜிப்பாவும், கதர் ஆடையும், கதர் அங்கவஸ்திரமும் சீதாராமனை அடைய எத்தனையோ பாக்கியம் செய்திருக்க வேண்டும். தூய வெண்மையான கதர் உடையும், அந்த உடைக்கு விளக்கம் தரும் விதத்தில் அமைந்திருந்த கறுப்புப் பட்டை பிரேம் மூக்குக் கண்ணாடியும் அவருக்குப் பொருந்தியிருந்தது போல வேறு யாருக்கும் பொருந்தியிருந்து நான் பார்த்ததில்லை.

சீதாராமன் ஒரு பிரபல இலக்கியப் பத்திரிகையில் துணை ஆசிரியராயிருந்தார். கவிதைகள், கதைகள், கட்டுரைகள், இலக்கிய விமரிசனங்கள் ஆகியவைகளையெல்லாம் ஒவ்வொரு இதழிலும் எழுதி வந்தார். இரவு வெகு நேரம் வரையில் அவருடைய மாடி அறையில் விளக்கு எரிந்து கொண்டிருக்கும்.

ஒரு நாள் சீதாராமன் தம் பிரார்த்தனை அறையின் வாசலில் நின்று கொண்டிருந்தார். தற்செயலாக அவரைத் திரும்பிப் பார்த்தேன். வைத்த கண் வாங்காமல் அவர் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். நான் அவரைப் பார்க்க ஆரம்பித்ததும் அவர் சட்டென்று பார்வையைத் திருப்பிக்கொண்டு விட்டார். அப்புறம் பல முறை என் ஓரக் கண்களால் கவனித்தேன். அப்பொழுதெல்லாம் அவர் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். அதற்குப் பிறகு சீதாராமன் மிகவும் மட்டமானவராக எனக்குத் தோன்றினார். அவரிடம் நான் முதலில் கொண்டிருந்த மரியாதை தானாகவே மறைந்து விட்டது.

ஆனால் இதன் காரணமாக அவர் கொஞ்சமும் தம்மை அலட்டிக் கொள்ள வில்லை. பண்புக் குறைவான தம் இழி செயலுக்கு வருந்தியதாகவும் தெரிய வில்லை. எப்பொழுதும் போல் ''தேவகி, டிபன் தயாராகி விட்டதா?'' என்று புன்சிரிப்புடன் கேட்பார். இந்தப் புன்சிரிப்பில் களங்கம் சிறிதும் இராது. ''இன்றிரவு நான் வருவதற்கு ரொம்ப நேரமாகும். ஒரு விருந்துக்குப் போகிறேன். நீ சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்!'' என்று பல நாட்கள் பழகியவர் மாதிரி சொல்லி விட்டுப் போவார். அவரை என்னால் புரிந்து கொள்ளவே முடிய வில்லை.

இருந்தாலும் நாள் ஆக ஆக, அவர் நடத்தையில் ஏதோ மாசு படிந்திருப்பதாக என் மனம் நம்பத் தொடங்கியது. அந்த நம்பிக்கை உறுதிப்படும்படியான சம்பவம் ஒன்று சில நாட்களில் நிகழ்ந்தது.



பென்டெக்ஸ் "Bentex"

ஸ்ட்ராப்புகள்

எந்தக் கடிகாரத்துக்கும்
ஏற்றவை, எழில்மிகுந்தவை









# ஆழ்ந்த சிந்தனையோ?
# காபி குடியுங்கள்

இதோ காபி....காபி உங்களுக்கு உற்சாகம் கொடுக்கும். சூடான காபிக்கு வேறு ஈடு கிடையாது. மணமான காபி மனதிற்கு திருப்தியளிக்கும். எந்த மனநிலையிலும் காபியே குடியுங்கள்.

## காபி எந்த மனநிலையிலும் திருப்தி அளிக்கிறது

நயமான காபி தயாரிப்பது மிக சுலபம். இதைப் பற்றிய எங்கள் இலவச புத்தகத்திற்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதையும் குறிப்பிடவும்.






**காபி போர்டு
பெங்களூர்**

அன்று சீதாராமன் அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்து விட்டுத் தம் அறைக்குள் புகுந்தார். அவர் வெளியே வரும் போது தற்செயலாக அவரை நான் பார்த்தேன். அறைக் கதவைச் சாத்திப் பூட்டிக் கொண்டு போகத் திரும்பிய போது சட்டைப் பையிலிருந்து என்னத்தையோ எடுத்தார். அப்பொழுது ஒரு சின்னக் கவர் கீழே விழுந்ததை அவர் கவனிக்க வில்லை. போய் விட்டார். ஆனால் நான் கவனித்துக் கொண்டிருந்தேன். உடனே நான் பாய்ந்து சென்று ஆவலோடு அந்தக் கவரை எடுத்துப் பார்த்தேன். அதனுள் ஒரு பெண்ணின் புகைப் படம். மூக்கும் விழியுமாகக் கந்தர்வ கன்னிகை மாதிரி அவள் தான் எத்தனை அழகு! இந்தப் படம் சீதாராமனிடம் இருப்பானேன்? எனக்கு ஒன்றும் விளங்க வில்லை. ஆனால் அவரைப் பற்றி ஏற்கனவே தாழ்வாகக் கருதியிருந்த என் அபிப்பிராயம் உறுதிப்பட்டது.

சற்று நேரத்துக்கெல்லாம் சீதாராமன் பரபரப்போடு உள்ளே வந்தார்.

"தேவகி, இங்கே ஏதாவது ஒரு சின்னக் கவர் கீழே கிடந்ததா....?" என்று தயங்கிய படி கேட்டார்.

எனக்கு எங்கிருந்துதான் அத்தனை துணிச்சல் வந்ததோ தெரிய வில்லை. கையிலே வைத்துக் கொண்டிருந்த புகைப்படம் இருந்த உறையை அலட்சியமாக அவர் மேல் வீசி விட்டுத் திரும்பிப் பாராமல் விடுவிடு வென்று உள்ளே போய்விட்டேன்.

சீதாராமனை மிக மிகக் கீழானவராக அன்றைய தினத்திலிருந்து என் மனம் முடிவு செய்து விட்டது. அவரைப் பார்ப்பதே மகா பாவம் என்று தீர்மானித்துக் கூடுமான வரையில் அவர் கண்ணில் படாமல் இருக்க முயன்றேன். அந்தச் சம்பவம் அவர் உள்ளத்தையும் உறுத்தி யிருக்க வேண்டும். அவரும் என்னைப் பார்ப்பதில்லை.

'சீதாராமன் யார்? அவர் எக்கேடு கெட்டுப் போனால் எனக்கென்ன? அவரைப் பற்றி நான் ஏன் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும்? எஜமானியம்மாளுக்குச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து விட்டு, வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு 'அக்கடா' என்று இருந்து விட்டுப் போகலாமே' என்ற எண்ணமும் என் மனத்தில் ஒருபுறம் தோன்றியது. ஆனால் அவரைக் கவனிக்காமல் என்னால் இருக்க முடிய வில்லை.

அன்று வெள்ளிக் கிழமை. அதிகாலையிலேயே எண்ணெய் ஸ்நானம் செய்து விட்டுக் கூந்தலைக் கோதி விட்டபடி பின்கட்டுக்கு விரைவாக நடந்தேன். வழ வழப்பான சிமெண்டுத் தரை 'சரக்'கென்று காலை இழுத்துவிட்டது. மறுகணம் நான் கீழே சாய்ந்தேன். அந்தச் சமயம் இரண்டு வலிய கரங்கள் என்னைத் தாங்கிப் பிடித்துக் கொண்டன. அதிர்ச்சியடைந்து திரும்பினேன். சீதாராமன்தான் என்னைத் தாங்கிப் பிடித்துக் கொண்டவர் என்று அறிந்ததும் எனக்கு மகா கோபம் வந்து விட்டது. சட்டென்று என்னை அவர் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டேன்.

அப்பொழுது அவர் முகத்தில் சாந்தம் தவழ்ந்தது. என்னை ஓர் 'எக்ஸ்ரே' பார்வை பார்த்தார். "தேவகி..." என்று அழைத்து அவர் என்னவோ சொல்லமுயன்று தயங்கினார்.

## சத்தியாக்கிரஹம்

சத்தியாக்கிரஹப் போரானது மற்றப் போர்களிலிருந்து மாறுபட்டதாகும். இதில் தலைவர்கள்தாம் எல்லாருக்கும் முன்னால் போர்க்களத்தில் இறங்க வேண்டும். மற்றவர்களுக்கு முன் அவர்கள்தான் தீயில் குதிக்க வேண்டும். இக்காலத்தில் ஆயுதங்களைக் கொண்டு போடப்படும் சண்டையில் சேனாதிபதியானவர் முன் செல்வதில்லை. சேனையும் சேனாதிபதியானவர் பின்னால் இருந்து கொண்டு நடத்துவார் என்றுதான் எதிர்பார்க்கிறது. ஆனால் சத்தியாக்கிரஹத்திலோ அப்படையானது தன் தலைவர் எல்லோருக்கும் முன் செல்வார் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறது. இதனால் இவர் பின்னணியில் தங்கிவிட்டால் சேனைக்கு இயல்பாகவே அதிருப்தியும் பலவீனமும் உண்டாகி விடுகின்றன.—ராஜன்பாபு



நான் ஒரு வெறுப்புக் கலந்த பார்வையை அவர் மீது வீசி விட்டுத் திரும்பினேன்.

"தேவகி! சற்று நில். நீ என்னை எதற்காகச் சாபமிடுகிறாய் என்று எனக்குத் தெரியும். நீ வந்ததிலிருந்து என்னைத் தவறாகவே எடை போட்டுக் கொண்டு வந்திருக்கிறாய். நீ நினைப்பது போல் நான் அவ்வளவு நீசனல்ல. ஆனால்...ஒரு துர்ப்பாக்கியசாலி" என்று சொல்லும் போது அவர் குரல் தழுதழுத்தது. மீண்டும் தொடர்ந்தார்: "தேவகி, இந்தப் புகைப்படம் யாருடையது தெரியுமா? ....என் அருமை மனைவியினுடையது...."

"....உண்மையாகவா? இப்பொழுது உங்கள்....மனைவி எங்கே?" என்ற கேள்வி என்னையும் அறியாமல் எழுந்தது.

"...அவள் இறந்து நான்கு ஆண்டுகள் ஓடி விட்டன. இந்த என் பத்தினித் தெய்வம் விஜயலக்ஷ்மியின் புகைப்படம்தான் உன் மனத்தைக் குழப்பி விட்டது. இதோ இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்" என்று கூறிச் சீதாராமன் ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தார்.

"இது... உங்களுக்கு வந்த கடிதம் அல்லவா...?" என்று கூறித் தயங்கினேன்.

"தேவகி, இது என் அக்காள் எனக்கு எழுதிய கடிதம். நீ தாராளமாய்ப் படித்துப் பார்க்கலாம். என்னைக் கண்டாலே உனக்குப் பிடிக்காமல் இருக்கும் போது உன்னிடம் நானாக இந்த விஷயத்தை எப்படிச் சொல்லுவது என்று தயங்கிக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாகச் சந்தர்ப்பம் தானாக வாய்த்து விட்டது....!" என்றார் சீதாராமன்.

நான் கடிதத்தைப் படிக்கலானேன்:

"அன்புள்ள சீதாராமனுக்கு,

அநேக ஆசிர்வாதம். உன் குழந்தைகள் பாலாவும், பாலசந்திரனும் ரொம்பவும் சமர்த்தா யிருக்கிறார்கள். நீ மறுமணம்

> வெல்வது அன்பு ஒன்றே; அறிவு அல்ல. அறிவு, கல்வி, யோகம், தியானம், ஞானவிளக்கம் — இவை யாவும் அன்போடு ஒப்பிடும்போது மண்ணுக்குச் சமானமே.
>
> — ஸ்வாமி விவேகாநந்தர்

செய்து கொள்ள வேண்டாம் என்று உறுதியாய்த் தீர்மானித்து விட்டது பற்றி எனக்கும் உன் அத்திம்பேருக்கும் அளவு கடந்த சந்தோஷம்.

தேவகியைப் பற்றி எழுதியிருக்கிறாய். உன் விருப்பம் போல் அவளை உன் மைத்துனனுக்கு விவாகம் செய்து வைத்து அவர்களை உன்னோடு வைத்துக் கொண்டு விட்டால், குழந்தைகளைப் பற்றிக் கவலையில்லை. தேவகியைப் பற்றி நீயே குணவதி என்று எழுதியிருப்பதால் இதில் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. உன் மைத்துனன் ரகு நேரில் வந்து பெண்ணைப் பார்க்கட்டும். தேவகியின் சம்மதத்தை அவளிடமே வெளிப்படையாகக் கேட்டுவிடு. அநாதையாக நம்மிடம் வந்து விட்டாள் என்பதற்காக நாம் அவளுக்குத் திருப்தியில்லாத காரியத்தைச் செய்யக் கூடாது. சிறந்த எழுத்தாளனாகிய உனக்கு இதெல்லாம் தெரிந்ததுதான். அம்மாவைப் புரிந்து கொண்டு அவள் காரியங்களை, தேவகி ஒழுங்காகச் செய்வதாக எழுதியிருக்கிறாய். அதைப் பார்த்ததும் எனக்கு உண்டான சந்தோஷத்தைச் சொல்லி முடியாது. நானும் அத்திம்பேரும் விரைவில் அங்கு வந்து சேருகிறோம். அம்மாவுக்கு என் நமஸ்காரம்.

அன்புள்ள அக்கா, சாந்தி.''

கடிதத்தை என்னால் சரியாகப் படிக்கவே முடியவில்லை; கண்ணீர் பெருகி மறைத்தது. என்னைப் பற்றி அவ்வளவு உயர்வாகக் கடிதத்தில் எழுதியிருந்ததைப் படிக்க எனக்கு ரொம்ப வெட்கமாயிருந்தது.

எத்தகைய குணக் குன்று இவர்! சற்று முன் பத்திரகாளி மாதிரி அவரை விழித்துப் பார்த்தேனே! அதை நினைக்கவே இப்பொழுது வேதனையாயிருந்தது. குனிந்த தலை நிமிராமல் அவர் எதிரே நின்றேன்.

''தேவகி, இன்னும் கோபம் தணியவில்லையா? இந்தப் படத்தை மறுபடியும் பார்! உன் முகச் சாயல் அப்படியே இருக்கிறது. அவள் உடுத்தியிருந்த புடவையைத்தான் நீ இப்பொழுது உடுத்திக் கொண்டிருக்கிறாய். இந்தப் புடவையையும் உன்னையும் பார்க்கும் போதெல்லாம் அவள் நினைவுதான் வருகிறது. என்னை மன்னித்துவிடு. தவறான நோக்கத்தோடு உன்னைப் பார்க்கவில்லை. என் மைத்துனனுக்கு உன்னை மணம் முடிக்கும் நோக்கத்துடன் உன்னை அடிக்கடி கவனித்துப் பார்த்தேன்...'' என்று கூறும் போதே அவர் குரல் நெகிழ்ந்து விட்டது.

நான் உணர்விழந்து அவருடைய காலில் விழுந்து நமஸ்கரித்தேன். மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வாய்ச் சொற்கள் பயன்படவில்லை. கண்ணீர் தான் பிரவாகமாகப் பெருகியது. மீண்டும் ஒரு முறை அந்தப் புகைப்படத்தைப் பார்த்தேன். அவர் சொன்னது முற்றிலும் சரி. என் படத்தைப் பார்ப்பது போலவே இருந்தது. ஆத்திரத்தில் நான் அறிவிழந்திருந்தபடியால் நான் இதை முன்பே கவனிக்காமற் போனேன். அடக்க முடியாமல் அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது.

''தேவகி, என் பூஜை அறையையும் நீ அவசியம் பார்க்க வேண்டும்.... வா!'' என்று கூறி என்னைத் தம் அறைக்கு அழைத்துப் போனார். அது ஒரு சிறு ஆலயம் போல் திகழ்ந்தது. சின்ன வெள்ளிப் பிள்ளையார் விக்கிரகமும் அதனருகே ஒரு சிறு வெள்ளி வேலாயுதமும் இருந்தன. விமானத்தை ஒட்டினாற் போல் இரண்டு வெள்ளிக் குத்து விளக்குகள் மல்லிகை அரும்பு போல் ஆடாமல் அசையாமல் எரிந்து கொண்டிருந்தன. ஊதுவத்தியின் நறுமணம் அந்த அறைக்குத் தெய்வசாந்நித்யத்தை ஏற்படுத்தியது. அறையில் ஏராளமான நூல்கள் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. கன்னிகாபரமேசுவரி, குமரகுருபரன், ஏழுமலையான் ஆகியவர்களின் படங்களும் சுவரை அலங்கரித்தன.

ஒரு புறம் அவர் மனைவியின் படம் பெரிய அளவில் மாட்டப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் மெய்ம் மறந்து போனேன். அந்த அறையையே புனிதமாக்கிக் கொண்டிருந்தது அந்தப் படம். இருவரும் மௌனமாக வெளியே வந்தோம்.

''தேவகி! இன்னும் ஒரு வாரத்தில் என் மைத்துனன் ரகு இங்கே வருகிறான். பார்க்க அழகாயிருப்பான். பி. ஏ. பாஸ் செய்திருக்கிறான். தங்கமான பையன். மத்திய சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கிறான். அவனைப் பார்த்து உனக்கும் பிடித்திருந்தால் நீ அவனுக்கு மாலையிடலாம். உன்னை நான் வற்புறுத்தவில்லை. உனக்கு விருப்பம் இல்லாதிருந்து அவனை மணக்கவில்லை யென்றால், அதற்காக இந்த வீட்டில் இருக்கக் கூடாது என்பதில்லை. நீ இங்கே தாராளமாக இருக்கலாம். நானே வேறு வரன் பார்த்து உனக்கு மணம் முடித்து வைக்கிறேன். நாளைய தினம் ரகுவைப் பார்த்து விட்டு உன் அபிப்பிராயத்தை ஒளிக்காமல் சொல்லு. என்னை உன் அண்ணாவாக நினைத்துக் கொள்....'' என்று நிதானமாகச் சொன்னார்.

இந்தச் சமயத்திலும் என்னால் அவரை நிமிர்ந்து பார்த்து மறுமொழி கூறமுடியவில்லை. கண்ணீர் என் விழிகளைத் திரையிட்டு மறைத்தது. ஒருவாறு அழுகையை அடக்கிக் கொண்டு, ''....என்னை மேலும் சோதிக்க வேண்டாம்.... உங்களுடைய பெருந்தன்மையை அறிந்து கொள்ள முடியாத அறிவிலி நான். நீங்கள் மனித தெய்வம். என் சிறு மதியை மன்னித்து விடுங்கள்...!'' என்று எப்படியோ சிரமப்பட்டுக் கூறி முடித்தேன். சீதாராமன் அப்போது ஒரு தெய்வமாகவே தோன்றினார். அன்பும், அறிவும், பண்பும், பரிவும், பாசமும் பொங்கி வழியும் ஒருவரைத் தெய்வமென்று கூறாமல் வேறு என்னவென்று கூறுவது?

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# கிளியர்டோன்...

Kleertone

## உங்களுக்கு உகந்த உன்னதமான வீட்டுவேலை சாமான்கள்

கிளியர்டோன் எலக்டிரிக் சாதனங்களை உபயோகித்து செலவைக் குறையுங்கள். அவை உங்கள் வீட்டை எடுப்பாகவும், சுகாதாரத் துடனும் வைக்க உதவும். இந்தியா பூராவும் முக்கிய எலக்டிரிக் சாமான்கள் கடைகளிலும், ரேடியோ வியாபாரிகளிடமும் கிடைக்கின்றன.



கிளியர்டோன் 'இம்பீரியல்' ஆட்டோமாடிக் இஸ்திரிப்பெட்டி





கிளியர்டோன் இஸ்திரி மேஜை



கிளியர்டோன் கெட்டில்



கிளியர்டோன் எலக்டிரிக் சுவர்க் கடிகாரம்





கிளியர்டோன் மடக்கக்கூடிய ஸ்டீல் நாற்காலி மற்றும் மேஜை

கிளியர்டோன் பிளாஸ்டிக் சாமான்கள்



வடிதட்டு



பழம், காய்கறிப் பாத்திரம்

எல்லா அதிகாரம் பெற்ற கிளியர்டோன் வியாபாரிகளிடமும், நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரிகளிடமும், மற்றும் பெரிய ஸ்டோர்களிலும் கிடைக்கும். நேராக ஜி. ஆர். ஏ. விடமிருந்தும் கிடைக்கும்.

ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்

**GRA** பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி
பெங்களூர் . பாட்னா . செகந்திராபாத்

IWT/GRA.4087(a)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




புதுமலர்ச்சி, புதுமலர்ச்சி என்று 'ஆடுவோமே,
ள்ளுப் பாடுவோமே,' ஆனந்தமாய் லைப்பாய் தேய்த்து நீராடுவோமே!
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய் சோப்!
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு ... 'எல்லாம் இன்பமயம்!'

**லைப்பாய் இருக்குமிடம், அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!**

L.33-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு